# கணேசானந்தம்

நாரந்தனை கணேச வித்தியாலயம்
NARANTHANAI GANESHA VIDYALAYAM




ஊர்காவற்றுறை
KAYTS

## நூற்றாண்டு விழா சிறப்பு மலர்

யா/நாரந்தனை கணேச வித்தியாலயம்
1916-2016

# நூற்றாண்டு விழா மலர்

(1916 - 2016)



யாழ்ப்பாணம் நாரந்தனை கணேச வித்தியாலயம்

# பாடசாலைக்கீதம்

கலை பல கன்னி செந்தமிழ் -கனிந்தரு
கலைமகள் ஆலயமே
கணேச வித்தியாலயமே - நம்
கணேச வித்தியாலயமே

நாரந்தனைப் பதியின் நற்கலை தீபமாய்
நன்னெறி காட்டிடுவாய் - எமக்கு
நலம் பல ஈந்திடுவாய் -எங்கள்
நாவினில் இனித்திடுவாய்
எங் கள் நாவினில் இனித்திடுவாய்

இளமையிலே பல கலை சிலையினில் எழுத்தென
நிலை பெற அருள் பெருந்தாய்
கலை அமிழ்தென அளித்திடுவாய்
மேலாய் அறிவினை அளித்திடுவாய்

எம் தமிழ் தாய் தந்தை இனித்திட
பல்கலை ஈவது நீயல்லவா
எமக்கு ஈவது நீயல்லவா
எங்கள் இதயமும் நீயல்லவா
எங்கள் இதயமும் நீயல்லவா

கலை பல கன்னி செந்தமிழ் --கனிந்தரு
கலைமகள் ஆலயமே - நம்
கணேச வித்தியாலயமே - என்றும்
வாழிய வாழியவே

# பாடசாலையின் சுருக்கக் குறிப்பு

| | | |
|---|---|---|
| பாடசாலை | : | யா/நாரந்தனை கணேச வித்தியாலயம் |
| பாடசாலை முகவரி | : | நாரந்தனை வடக்கு ஊர்காவற்றுறை |
| கிராம உத்தியோகத்தர் பிரிவு | : | நாரந்தனை வடக்கு J/55 |
| பிரதேச செயலர் பிரிவு | : | தீவகம் வடக்கு ஊர்காவற்றுறை |
| ஆரம்பம் | : | 1916 |
| முதல் அதிபர்: | | |
| பாடசாலை குறியீட்டு இலக்கம் | : | 1005007 |
| தொகை மதிப்பீட்டு இலக்கம் | : | 09043 |
| பரீட்சை இலக்கம் | : | 11233 |
| பாடசாலை வகை | : | II |
| வகுப்புக்களின் பரம்பல் | : | 01 - 11 |
| பாடவிதான மொழி மூலம் | : | தமிழ் |
| இட அமைவு | : | கிராமம் |
| தொலைபேசி இலக்கம் | : | 021 492 5431 |
| முகநூல் | : | யா/ நாரந்தனை கணேச வித்தியாலயம் |
| மின்னஞ்சல் முகவரி | : | naranganesa@gmail.com, naranganesa.sch.lk |

# பொருளடக்கம்



## ஆனந்த வாசலிலே இதழாசிரியரின் இதயத்திலிருந்து.....

அன்பானவர்களே!

எம் வாழ்வின் வழிகாட்டியாம் அன்னை கணேச வித்தியாலயத்தின் நூற்றாண்டு நிறைவையொட்டி வெளியாகும் "கணேசானந்தம்" நூற்றாண்டு விழா மலரூடாக உங்களைச் சந்திப்பதில் மகிழ்ச்சி.

வசந்தம் தந்தவள், வாழ்வு தந்தவள், அறிவு தந்தவள் ஆக்கி வைத்தவள், பண்பு தந்தவள், மாண்பு தந்தவள், அறம் அறிவித்தவள், வாழ்வின் திறன் நல்கியவள் எம் அன்னை கணேசா.

இந் நூற்றாண்டு மலரை எமது நாரந்தனைக் கிராமத்தின் சிறப்பாக தீவகத்தின் ஒரு வரலாற்றுப் பதிவாக வெளிக் கொண்டுவர வேண்டுமென்பதே எமது பேரவாவாக இருந்தது. ஆனால் எமது சக்திக்கு அப்பாற்பட்ட பல காரணிகளால் அது பூரணமாக சாத்தியப் படவில்லை என்றே தோன்றுகிறது.

ஆனாலும் கணேசாவின் புதல்வர்கள், புதல்விகள், கணேசாவின் சிற்பிகள் தங்கள் கருத்துக்களைப் பகிர்ந்து கொண்டிருக்கிறார்கள். இதயத்து உணர்வுகளை வெளிக் கொணர்ந்து இருக்கிறார்கள்.

கால அவகாசம் அதிகமாக இருக்கவில்லை, ஆனாலும் மலர்ந்திருக்கும் "கணேசானந்தம்" மலர் மணம் வீசத்த வறவில்லை.

இந்த மலரிலே முடிந்தளவு பழைய மாணவர்கள் பற்றிய விபரங்களை சேர்த்துள்ளோம். ஆனால் விபரம் தந்தவர்கள் மிக மிக குறைவாகவே உள்ளனர். ஆகக்குறைந்தது ஆயிரம் பழைய மாணவர்களினது விபரத்தையாவது உள்ளடக்க விரும்பினோம் கைகூடவில்லை.

எமது வித்தியாலயத்துக்கென இணையத்தளம் உள்ளது. உங்கள் விபரங்களை இனியாவது அனுப்பினால் எமது இணையதளத்திலே உள்ள பழையமாணவர் பக்கத்திலே சேர்க்க முடியும். இதன் மூலம் பழைய மாணவர்களாகிய நாம் ஒருவருக்கொருவர் தொடர்பு கொள்ளவும், வித்தியாலய வளர்ச்சிக்கான திட்டங்கள் பற்றி ஆராய மற்றும் திட்டச் செயற்படுத்தல்களுக்கும் உதவியாக இருக்கும்.

எமது வித்தியாலயம் இன்று நலிவுற்ற நிலையிலேயே உள்ளது. இந்த நூற்றாண்டு விழாகோலாகலம், எமக்கு வாழ்வு தந்த அன்னைக்கு புது வாழ்வு தரும் கோலாகலமாக அமையட்டும்.

இனி மலரின் உள்ளே செல்லுங்கள். இதில் எழுத்துக்களை காணமாட்டீர்கள். எமது எண்ணங்களைக் காண்பீர்கள். கட்டுரைகளுக்கு பதிலாக எமது இதயங்களைப் படிப்பீர்கள்.

மலர் பற்றிய உங்கள் கருத்துக்களை எம்மோடு பகிர்ந்து கொள்ளுங்கள். அது எம்மை எமது பணியில் ஊக்குவிக்கும்.

வாழிய நாரந்தனை கணேச வித்தியாலயம்!



## நல்லை திருஞானசம்பந்தர் ஆதீனக் குரு முதல்வரின் ஆசிச்செய்தி

கல்விசார் பெருந்தகையீர்!

நாரந்தனை கணேச வித்தியாலயம் இன்று நூறு ஆண்டை அடைந்திருப்பதை கண்டு மகிழ்ச்சியடைகிறோம். கல்விப்பாரம்பரியத்தின் உயர் நகரான யாழ்ப்பாணத்தில் பல பாடசாலைகள் கல்விக்கான பணியை நிறைவாக ஆற்றி வரும் இவ்வேளை நாரந்தனை கணேச வித்தியாலயம் ஆரம்ப நிலையில் பல நல்ல மாணாக்கரை உருவாக்கி இன்று நூறாவது வயதில் தலை நிமிர்ந்து நிற்பது கல்விக்கும் பண்பாட்டுக்கும் மகிழ்ச்சியைத்தருகிறது. இன்று நாட்டில் பல உயர் நிலைகளை வகிக்கும் அறிஞர்களை உருவாக்கிய பாடசாலை வரிசையில் வடமாகாண கல்விச் செயலாளராக பல பதவிகளை வகிக்கும் சத்தியசீலன் போன்றவர்களை உருவாக்கிய பெருமைக்குரிய பாடசாலை ஒழுக்க, கல்வி, சமய ஏனைய துறைகளையும் இப்பாடசாலை வளர்ச்சி அடைந்து பல்லாண்டு காலம் வாழ வாழ்த்துகின்றோம். இதற்காக அர்ப்பணித்த அதிபர். ஆசிரியர், மாணவர்கள், பெற்றோர், நலன்விரும்பிகள் அனைவருக்கும் பாடசாலையில் பணியாற்றுகின்ற அனைவரையும் வாழ்த்துகின்றேன். இப்பாடசாலை பல்லாண்டு வாழ இறை அருளை பிரார்த்திக்கின்றோம்.

(என்றும் வேண்டும் இன்ப அன்பு)

**இரண்டாவது குருமஹா சந்நிதானம்**
**ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர தேசிக ஞானசம்பந்த**
**பரமாச்சாரிய சுவாமிகள்**



## யாழ்.ஆயரின் ஆசிச் செய்தி

யாழ்.மாவட்டத்தின் தீவகத்தே ஊர்காவற்றுறை நிலை நின்று செல்வங்களுள் காலத்தால் அழியாதச் செல்வமாக விளங்கும் கல்விச் செல்வத்துக்கு உயிரூட்டிக்கொண்டிருக்கும் பாடசாலைகளில் யாழ்.நாரந்தனை கணேச வித்தியாலயம் தன் நூற்றாண்டு விழாவைக் கொண்டாடும் வேளையில் உங்களை இறை நாமத்தில் வாழ்த்தி ஆசிகள் கூறி நிற்கின்றேன்.

மனிதன் தான் எப்படிப்பட்ட உயர் நிலையை அடையவேண்டும் என்பதை தீர்மானிக்கும் அளவுகோல்களில் கல்வி சிறப்பிடம் பெறுகின்றது. பாடசாலைகள், கல்லூரிகள், உயர் கல்வி நிறுவனங்கள் வெறுமனே அறிவுசார் மேதைகளை உருவாக்கி தன்னிறைவு கண்டுவிடமுடியாது. உயர்ந்ததோர் சமூகத்தைக் கட்டியெழுப்பி இலட்சியக் கனவுகளை அவர்களுள் உருவாக்கி பண்புள்ளவர்களாக நாணயமிக்கவர்களாக வளர்த்தெடுத்து உலகினுள் அவர்களை வாழ வழி செய்யவேண்டும்.

இத்தகைய பெரும் பணியை தன் பணி நிலைகளினூடாக ஆற்றிவரும் இப்பாடசாலை தொடர்ந்தும் நற்பணி ஆற்றவேண்டி ஆசிக்கின்றேன். இப்பாடசாலையின் வளர்ச்சியில் முன்னின்று உழைக்கும் உங்கள் அனைவரையும் இறைநாமத்தில் வாழ்த்தி நிற்கின்றேன்.

**பேரருட்திரு. கலாநிதி யஸ்ரின் பேனாட் ஞானப்பிரகாசம்**
யாழ்.ஆயர்.

## சின்மயமிஷன் குரு முதல்வரின் ஆசிச்செய்தி

கல்விக்கூடங்கள் அமைதல், மாணவர்களுக்கு கல்வியை வழங்குதல் ஆகிய செயற்பாடுகள் மூலம் சமுதாயத்தை அறிவுப்பாதையில் முன்னேற்றுதல் எனும் உன்னத பணியை அறிவுத்தேடல் ஆர்வம் கொண்ட எமது முன்னோர்கள் மேற்கொண்டுள்ளனர். அந்தவகையில் ஊர்காவற்றுறைப் பிரதேசத்தில உள்ள நாரந்தனை கிராமத்தில் தில்லைநாதர் என்பவரால் 1916ம் ஆண்டில் ஓலைக்குடிசையில் ஆரம்பிக்கப்பட்ட யா/நாரந்தனை கணேச வித்தியாலயம் அந்நாட்களில் இயங்கிய இந்து போர்ட் (Hindu Board) இனால் 1924இல் பொறுப்பேற்கப்பட்டு 1972இல் இருந்து இரண்டாம் நிலை பாடசாலையாக தரம் உயர்த்தப்பட்டு அப்பிரதேச மக்களின் கல்வி வளர்ச்சிக்குப் பெரிதும் உதவி வந்துள்ளது.

1990ஆம் ஆண்டு இடப்பெயர்வின் பின்னர் 1996ஆம் ஆண்டு மீண்டும் சொந்த இடத்தில் இயங்கி வரும். இப்பாடசாலை இவ்வருடம் தனது 100வது ஆண்டு பூர்த்தியைக் கொண்டாடுவது சிறப்புக்குரியதாகும். இத்தகைய நடவடிக்கைகள் மூலம் மாணவர்களை ஊக்கப்படுத்துவதுடன் அவர்களிடம் ஆன்மீக விழிப்பை ஏற்படுத்தவும் கல்விச் சமூகம் முயல வேண்டும். இதனால் இளம் சமூகத்தினரிடையே நல்லொழுக்கத்தையும் தம்மை தாமே உயர்த்திக் கொள்ளும் ஆளுமையையும் வளர்க்க முடியும்.

இந்நூற்றாண்டு விழா சிறப்புறவும் இதனை முன்னிட்டு வெளிவரும் மலர் சிறப்பாக அமையவும் ஆசி வேண்டி இறைவன் திருவருளையும் பூஜ்ய குருதேவரின் குருவருளையும் வேண்டுகின்றோம்.

இறை பணியில்,
**பிரமச்சாரி ஜாக்கிரத சைதன்யா**
**வதிவிட ஆச்சாரியார்.**



# நாரந்தனை தான்தோன்றி மனோன்மணி அம்பாள் ஆலய முன்னைநாள் பிரதம குருவின் ஆசிச்செய்தி

**ஆ**லயம் ஆன்மீக வளர்ச்சியை எவ்வாறு பேணி வருகிறதோ அதே போல் பாடசாலைகள் உலகியல் கல்வியை பேணி வளர்க்கின்றன. கல்விக் கூடங்களையும் வித்தியாலயம் அதாவது வித்யா என்றால் அறிவுடன் கூடிய ஆலயம் என ஆலயத்திற்கு சமமாக போற்ற வேண்டிய அவசியத்தைக் காண்கிறோம். அங்கே கற்பிக்கும் ஆசிரியர்கள் குருமார்களாக மதிக்கப்படுகிறார்கள். அறிவுக் கண்ணை திறந்து வைக்கும் வித்தியாசாலைகளால் தான் உலகின் தலை சிறந்த கல்விமான்கள் விளைகின்றனர். அந்த வகையில் நாரந்தனை என்னும் அழகு மிக்க சிறிய கிராமத்தில் அமைந்துள்ள கணேசா வித்தியாலயம் பல்வேறு கஷ்டமான சூழ்நிலைகளிலும் கல்வி என்னும் ஒளியை அணையவிடாது நூறாண்டுகாலம் வளர்த்து வந்துள்ள பெருமையை கொண்டாடுகிறது. இந்த பாட சாலைக்கு அருகாமையில் இருக்கும் மனோன்மணி அம்மன் ஆலயத்துடன் இப்பாடசாலை மாணவர்கள் காலத்திற்கு காலம் அருள் தொடர்பு வைத்து வளர்ந்துள்ளனர். நூறாண்டு காலத்தில் பல மாணவர்கள் கற்று நன்னிலையில் வெளியேறியுள்ளனர். இன்னும் கற்கும் மாணவர்களும் நல்ல தேர்ச்சி பெற்று வளத்துடன் வாழவும் இதுவரை இங்கு அதிபராக பணி புரிந்த அனைவருக்கும் ஆசிரியப் பெருந்தகைகளுக்கும் எமது வாழ்த்துக்களை தெரிவித்து இன்னும் பல நூறாண்டுகள் இந்த வித்தியாசாலை அறிவொளி பரப்பி நிலைபெற எமது மனோன்மணி அம்மனின் பாதாரவிந்தங்களை போற்றி ஆசி நல்கிறோம்.

**ஆகம சிரோன்மணி சிவஸ்ரீ இராம.ஸ்ரீதரகுருக்கள்**
முன்னாள் பிரதம குரு நாரந்தனை
தான்தோன்றி மனோன்மணி அம்மன் கோவில்



# வடமாகாண கௌரவ முதலமைச்சரின் வாழ்த்துச்செய்தி

யாழ்.மாவட்டத்தின் சப்த தீவுகளில் ஒன்றாக விளங்கும் லைடன் தீவு என அழைக்கப்படும் ஊர்காவற்றுறைப் பிரதேசத்தில் கல்வி அறிவும் இறைபக்தியும் உடைய மக்கள் வாழும் நாரந்தனை கிராமத்தில இப்பிரதேச மக்களுக்கு அறி வூட்டி பல கல்விமான்களையும் அறிஞர்களையும் நற்பண்புமிக்க பிரஜைகளையும் உருவாக்கிய யாழ்/நாரந்தனை கணேச வித்தியாலயத்தின் நூற்றாண்டு விழா நடைபெறவிருக்கும் இச்சந்தர்ப்பத்தில் வெளியிட இருக்கும் நூற்றாண்டு விழா மலருக்கான வாழ்த்துச் செய்தி ஒன்றை வழங்குவதில் மகிழ்வடைகின்றேன்.

1916ஆம் ஆண்டில் நாரந்தனை பகுதியில் ஒரு பாடசாலையின் அத்தியாவசியத்தை உணர்ந்து கொண்ட அவ்வூர் பிரமுகர்களின் பங்குபற்றுலுடன் அமரர் தில்லைநாதர் அவர்களினால் ஓலைக்கொட்டிலில் மிகச் சில மாண வர்களுடன் ஆரம்பித்த இப்பாடசாலை 1924இல் அரச பாடசாலையாக அரசினால் பொறுப்பேற்கப்பட்டது. இப்பாடசாலை பல இடப்பெயர்வுகளையும் அழிவுகளையும் சந்தித்த போதும் தமது கற்பித்தல் சேவையை இடைநிறுத்தவில்லை. 1994 தொடக்கம் 1996 வரை நாவற்குழி இடம்பெயர் முகாமில் யாழ். தம்பாட்டி அரசினர் தமிழ்க்கலவன் பாடசாலையுடன் சேர்ந்து இயங்கியமை இங்கு குறிப்பிடத்தக்கது.

இப்பாடசாலை தனது 100 வருட கல்விச் சேவையை சிறப்புற வழங்கி பல கல்விமான்களையும், அறிஞர்களையும் உருவாக்கியமையை நினைவுகூருகின்ற இந்த அரிய சந்தர்ப் பத்தில் இதன் கல்விச் சேவை இன்றும் பல்லாண்டுகள் தொடர வேண்டும் என வாழ்த்துகின்றேன்.

**நீதியரசர் க.வி.விக்னேஸ்வரன்**
முதலமைச்சர்,
வடமாகாணம்



# வடமாகாண கௌரவ கல்வி பண்பாட்டலுவல்கள் விளையாட்டுத்துறை மற்றும் இளைஞர் விவகார அமைச்சரின் வாழ்த்துச்செய்தி

யாழ்.மாவட்டத்தின் சப்த தீவுகளில் ஒன்றாக விளங்கும் லைடன் தீவில் அமைந்துள்ள நாரந்தனைக் கிராமத்தின் யா/நாரந்தனை கணேச வித்தியாலயமானது இடப்பெயர்வின் பின்னரான காலப்பகுதிகளில் பல இன்னல்களுக்கு முகங் கொடுத்தாலும் அனேக மாணவர்களை வளர்த்தெடுத்த மிடுக்குடன் இந்நூற் றாண்டில் காலடி வைத்துள்ளது. இந்நூ ற்றாண்டு விழா மலருக்கு ஆசிச்செய்தி வழங்குவதில் பெருமகிழ்வடைகிறேன்.

இவ்வாறான ஆண்டு விழாக்களில் மலர்களை எழுத்துருவில் ஆவணப்படுத்தும் போது தற்காலத்தில் மாணவர்களும் இன்றைய சமூகத்தினரும் பாடசாலை பற்றிய வரலாற்றை அறிந்துகொள்ளவும் எதிர்கால சந்ததியினர் பாடசாலை தொடர்பான தகவல்களைப் பெற்றுக்கொள்ளவும் உதவிகரமாக அமையும். இவ்வகையில் இம்முயற்சியை எடுத்த பாடசாலைச் சமூகத்தைப் பாராட்டுகின்றேன்.

இம்மலர் சிறப்புற வெளிவர உழைத்த அனைவரையும் பாராட்டுவதுடன் விழா இனிதே நடைபெற எனது வாழ்த்துக் களையும் தெரிவிப்பதில் பெருமகிழ்வடைகின்றேன்.

**த.குருகுலராசா**
அமைச்சர்



# வடமாகாண கல்வி, பண்பாட்டலுவல்கள், விளையாட்டுத்துறை இளைஞர் விவகார அமைச்சு செயலாளரின் வாழ்த்துச்செய்தி

யா/நாரந்தனை கணேச வித்தியாலயத்தின் நூற்றாண்டு விழாவை முன்னிட்டு வெளியிடப்படும் நூற்றாண்டு விழா சிறப்புமலருக்கு வாழ்த்துச் செய்தி வழங்குவதில் பேருவகைய டைகின்றேன். யாழ்.மாவட்டத்தின் ஊர்காவற்றுறை பிரதேசத்தில் 1916ஆம் ஆண்டு ஸ்தாபிக்கப்பட்ட இப்பாடசாலை 100 ஆண்டுகளைக் கடந்து 101 வது ஆண்டில் காலடிவைக்கின்றது. ஊர்காவற்றுறை பிரதேசத்தில் நாரந்தனை கிராமத்தில் பல அறிஞர்களையும் கல்விமான்களையும் நற்பிரஜைகளையும் உருவாக்கிய இப்பாடசாலை படிப்படியாக பௌதீக வளங்கள் அபிவிருத்தி செய்யப்பட்டு சிறப்பாக இயங்கி வருகின்றது.

பாடசாலையில் பௌதீக, கல்வி, விளையாட்டு, கலாச்சாரம் போன்ற துறைகளின் வளர்ச்சியை ஆவணப்படுத்தும் சான்றுகளாக காலத்துக்குக் காலம் வெளிவரும் பாடசாலை சஞ்சிகைகள் அமைவதுடன் பிற்கால சந்ததியினருக்கும் வரலாற்றுப் பதிப்புக்களாகவும் இவை உதவுகின்றன. அந்த வகையில் இப்பாடசாலையினால் நூற்றாண்டு விழாவை முன்னிட்டு சஞ்சிகையை வெளியிடுவதிலும், பாடசாலையின் அபிவிருத்தியை சுட்டிக் காட்டுவதிலும் இப்பாடசாலையின் செயற்பாடுகளை ஆவணப்படுத்துவதிலும் நடவடிக்கை எடுத்ததையிட்டு அதிபர், ஆசிரியர்கள், மலர்க்குழு உறுப்பினர் கள் அனைவரையும் பாராட்டுகின்றேன்.

இப்பாடசாலை பல கல்விமான்கள், உயரதிகாரிகள், சிறந்த வீரர்கள், நற்பிரஜைகள் போன்றோரை உருவாக்கி கல்வி மற்றும் விளையாட்டுத் துறையில் பல சாதனைகளைப் படைக்க எனது மனமார்ந்த வாழ்த்துக்களைத் தெரிவித்துக்கொள்வதுடன் நூற் றாண்டு விழாவும் மலர் வெளியீடும் சிறப்புற அமைய எனது மன மார்ந்த வாழ்த்துக்களை தெரிவித்துக்கொள்கின்றேன்.

**இ.இரவீந்திரன்**
செயலாளர்,
கல்வி, பண்பாட்டலுவல்கள், விளையாட்டுத்துறை மற்றும்
இளைஞர் விவகார அமைச்சு, வடமாகாணம்.



# யாழ் மாவட்ட அரசாங்க அதிபரின் வாழ்த்துச்செய்தி

யாழ்.நாரந்தனை கணேச வித்தியாலயத்தின் நூற்றாண்டு விழா நிறைவைப் பெருமைப்படுத்தும் வகையில் வெளியீடு செய்யப்படும் சிறப்பு மலருக்கு வாழ்த்துச் செய்தி வழங்குவதில் பெருமகிழ்வடைகின்றேன். இலங்கைத் தீவின் வடபால் அமைந்துள்ள யாழ்ப்பாண மாவட்டத்தின் தென் மேல் அமைந்துள்ள சப்த தீவுகளில் ஒன்றான லைடன் தீவு என அழைக்கப்படும் ஊர்காவற்றுறை பிரதேசத்தில் அமைந்துள்ள கல்விச்சாலை 1916ஆம் ஆண்டு உருவாக்கப்பட்டு நூற்றாண்டு அடைந்துள்ளமை கல்விச்சமூகத்துக்கு பெருமைக்குரிய விடயமாகும்.

1916 ஆம் ஆண்டு சிறுபாடசாலையாக ஆரம்பிக்கப்பட்டு படிப்படியாக வளர்ச்சி கண்டு தரம் 1-11 வரையான வகுப்புக்களைக் கொண்ட பாடசாலையாக மிளிர்கின்றது. நாட்டின் வன்செயலினால் ஏற்பட்ட இடப்பெயர்வு காரணமாக இப்பாடசாலை பல இடங்களில் இயங்கியபோதும் மீண்டும் 1996ஆம் ஆண்டு தனது சொந்த இடத்தில் குறைந்த மாணவர் எண்ணிக்கையுடன் சிறப்பான முறையில் கல்வியைத் தொடர்ந்து கல்வியில் தரம் குன்றாமல் இயங்கி வருவது போற்றத்தக்கது. அதற்காக உழைத்து வரும் அதிபர், ஆசிரியர்கள், பெற்றோர்கள், பழைய மாணவர்கள் அர்ப்பணிப்பான சேவைக்கும் எனது பாராட்டுக்களைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

இப்பாடசாலையின் கல்வியைத் தொடர்ந்த பல கல்விமான்கள் இன்று சாதனையாளர்களாக உருவாக்கியமை, இக்கல்லூரியின் சிறப்பை வெளிப்படுத்தி நிற்கின்றது. இக்கல்லூரித்தாய் நூறாவது ஆண்டு நிறைவை கொண்டாடி மகிழ சிறப்புற வெளியீடு செய்யும் நோக்கில் வெளிவரும் சிறப்பிதழ் மலர்ந்து மணம் பரப்ப என் நல்வாழ்த்துக்களைத் தெரிவிப்பதோடு இதழ் சிறப்புற உழைத்த அனைவருக்கும் என் பாராட்டுக்களையும் தெரிவித்துக்கொள்கிறேன்.

**நா.வேதநாயகன்,**
அரசாங்க அதிபர்/ மாவட்டச் செயலாளர்,
யாழ்.மாவட்டம்.



# வடமாகாண கல்விப்பணிப்பாளரின் வாழ்த்துச்செய்தி

யா/நாரந்தனை கணேச வித்தியாலயமானது ஊர்காவற்றுறைப் பிரதேசத்தில் நாரந்தனைக் கிராமத்தில் 1914 ஆம் ஆண்டு ஆரம்பிக்கப்பட்டு இவ்வாண்டில் நூற்றாண்டினை நிறைவு செய்துள்ளது. இந்நூற்றாண்டு விழாவினையொட்டி வெளியிடப்படும் மலரிற்கு ஆசிச் செய்தி வழங்குவதில் மகிழ்வடைகின்றேன்.

இப்பாடசாலையினது மாணவர்கள் சிறந்த ஒழுக்க, விழுமியப் பண்புள்ளவர்களாகவும் பாட, இணைப்பாடவிதானச் செயற்பாடுகளில் சிறந்து விளங்குபவர்களாகவும் உள்ளனர்.

யா/நாரந்தனை கணேச வித்தியாலயமானது தனது நூறு ஆண்டு காலச் சேவையின் மூலம் பல மாணவர்களை உயர் கல்வி பெற்றவர்களாகவும், சமூகத்தில் சிறந்த பிரஜைகளாகவும் உருவாக்கியுள்ளது. இப் பாடசாலையில் கற்ற பல மாணவர்கள் இன்று சமூகத்தில் நன்மதிப்புடன் உயர் தொழில்களைப் புரிபவர்களாகவுள்ளனர்.

இப்பாடசாலை மென்மேலும் வளர்ச்சி பெற்று இக்கிராமத்தினைச் சேர்ந்த மாணவர்களுக்கு சிறப்பான கல்வியைத் தொடர்ந்து வழங்க வாழ்த்துகிறேன்.

**செ.உதயகுமார்**
மாகாணக் கல்விப் பணிப்பாளர்.



# பிரதேச செயலரின் நூற்றாண்டு விழா மலருக்கான வாழ்த்துச்செய்தி

யாழ் மண்ணின் சப்த தீவுகளுக்கு எல்லாம் தலையாய தீவு என சிறப்பிக்கப்படும் ஊர்காவற்றுறை பிரதேசத்தில் கல்விச்செழுமையும், ஆன்மீக வனப்பும் மிக்க நாரந்தனை கிராமத்தில் நூற்றாண்டு விழாக்காணும் யா/நாரந்தனை கணேச வித்தியாலயத்தின் நூற்றாண்டு விழா மலருக்கான வாழ்த்துச்செய்தியை பகிர்வதில் பெரும் மகிழ்வு அடைகின்றேன்.

ஆங்கிலேயர் காலத்தில் நிர்மாணிக்கப்பெற்று யாழ்ப்பாண மண்ணின் இயல்பான கல்வி மிடுக்கோடு தனக்கேயுரிய கல்வியே கருத்தனமாக கொண்டு மிளிர்ந்த இவ்வித்தியாலயம் இன்று அகவை நூறினை நிறைவு செய்து நிற்கும் இத்தருணத்தில் இவ் வித்தியாலயத்தின் கடந்தகாலச் சாதனைகளை நம் மனக்கண்முன் கொண்டு வந்து நிற்கையில் பேருவகை அடைகின்றேன்.

யாழ்ப்பாணக் கல்விப்பாரம்பரியத்தின் "முகிழ்ப்பு" எனின் அது தீவகத்தினை சாரும். அந்த அளவிற்கு புகழ் பூத்த கல்விமான்களையும் அறிஞர்களையும் உருவாக்கிய பெருமை இந்த வித்தியாலயத்திற்கே உரித்து எனின் மறுப்பாரில்லை. கல்வியே கருந்தனமாக கொண்ட நாரந்தனை மண்ணின் மைந்தர்களாக தம்மை இன்றும் அடையாளங்காட்டும் அறிஞர்களும் ஆன்மீகப்பெருமக்களும் இவ்வித்தியாலயத்தில் தான் கற்றுத்தேறினர் என தமது வாயார மெய்ப்பிப்பதனூடாக இந்த பாடசாலையின் பலத்தினையும் பாரம்பரியத்தினையும் நாம் உணரலாம்.

பண்டைய யாழ்ப்பாணத்தின் இருப்பு எவ்வாறு தீவகத்தில் கருக்கொண்டதோ அதே போன்று பிரித்தானியர் வருகையின் பின்னரான மிசனரிக்கல்விச்சாலைகளுடன் போட்டியிட்டு சரிநிகர் அந்தஸ்துடன் ஆரம்ப காலகட்டங்களில் பாரிய சவால்களுக்கு

முகம் கொடுத்து காலப்போக்கில் பல்வேறு சாதனைகளை நிலைநாட்டி தேசத்தையே திரும்பிப்பார்க்க வைத்த பெருமையையும் இவ்வித்தியாலயம் ஈர்த்துக் கொண்டது.

கடந்த காலங்களில் நாட்டில் ஏற்பட்ட அசாதாரண சூழ்நிலைகளால் சற்று பின்னடைவை எதிர்நோக்கினாலும், சீற்றங்கொள் கடலலையை தாங்கி எவ்வாறு ஊர்காவற்றுறை மண் நெஞ்சுரத்துடன் இன்று வரையும் மிளிர்கின்றதோ, அதே போன்று 1916ம் ஆண்டு தொடங்கப்பட்ட இவ்வித்தியாலயமும் பல்வேறு சவால்களுக்கு மத்தியில் இப்பிரதேச மக்களுக்கும், அயற்பிரதேச மக்களுக்கும் அறிவுப்பசியினைப்போக்கி தேசத்திற்கு நற்பிரஜைகளை உருவாக்கி நூற்றாண்டு விழாக்காணும் இந்த இனிய தருணத்தில் இவ்வித்தியாலயத்தின் ஆரம்ப காலத்திலிருந்து இன்று வரைக்கும் கடமையாற்றிய, கடமையாற்றிக் கொண்டிருக்கும் அதிபர்கள், ஆசிரியர்கள் அனைவரையும் நன்றியோடு நினைவு கூர்ந்து கொள்கின்றேன்.

தொடர்ந்து வரும் காலங்களிலும் இவ்வித்தியாலயமானது சகல துறைகளிலும் சாதனைகளை நிலைநாட்டி, நற்பிரஜைகளை இம்மண்ணிற்கு பெற்றுக்கொடுக்கும் கருவூலமாக திகழ எனது மனப்பூர்வமான வாழ்த்துக்களையும் பாராட்டுக்களையும் தெரிவித்துக் கொள்கின்றேன்.

**திருமதி எழிலரசி அன்ரன் யோகநாயகம்**
பிரதேச செயலர்
ஊர்காவற்றுறை.



# வலய கல்விப் பணிப்பாளரின் வாழ்த்துச்செய்தி

எமது வலயத்திற்கு உட்பட்ட யா/நாரந்தனை கணேச வித்தியாலயம் நூற்றாண்டு விழா கொண்டாடுவதையிட்டு பூரிப்படைகின்றேன். இப்பாடசாலை பல்வேறு கல்வியியலாளர்களையும், அரச உத்தியோகத்தர்களையும் நாட்டுக்கு உரித்தாக்கியுள்ளது. அசாதாரண சூழ்நிலையில் இடப்பெயர்வு ஏற்பட்டு மீண்டும் பாடசாலை ஆரம்பிக்கப்பட்டு கல்விப்பயணத்தில் நடைபோட்டுக் கொண்டிருக்கின்றது தனது முன்னைய நிலையை அடைய அதிபர், ஆசிரியர்கள், மாணவர்கள், சமூகம் அனைவரும் ஒன்றிணைந்து செயற்பட வேண்டும்.

**S.சுந்தரசிவம்**
வலயக் கல்விப் பணிப்பாளர்,
தீவகக் கல்வி வலயம்.



# கோட்டக்கல்வி அதிகாரியின் வாழ்த்துச் செய்தி

யா/நாரந்தனை கணேசா வித்தியாலயத்தின் நூறாவது ஆண்டு நிறைவை சிறப்பிக்கும் முகமாக வெளியிடப்படும் 'கணேசானந்தம்" மலருக்கு வாழ்த்துச் செய்தி அனுப்புவதில் பெருமையடைகின்றேன்.இவ் வித்தியாலயம் 1916 ம் ஆண்டு ஆரம்பிக்கப் பட்டு இன்று தனது 100 வது அகவையைக் கடந்து இக்கிராமத்திற்கு அளப்பரிய சேவையாற்றி வருகின்றது.அறிவூட்டி வளர்த்து ஆளாக்குவதினால் கல்லூரியை அன்னையெனப் போற்றுகின்றோம்.

பல நூறு மாணவர்களைக் கொண்டு சிறப்புடன் மிளிர்ந்த பாடசாலையானது கோர இடப்பெயர்வினால் பல இடர்பாடுகளை தன் அகத்தே கொண்டிருந்தாலும் அதிபர், ஆசிரியர்கள் பழைய மாணவர்கள் பெற்றோர்கள், நலன் விரும்பிகளின் அயராத உழைப்பும்,தியாகத்துடன் கூடிய பணிகளினால் மீண்டும் புதுப் பொலிவுடன் தனது சேவையை தொடர்ந்து திறம்பட ஆற்றி வருகின்றது. அந்த வகையில் உழைத்து நின்ற அனைவரையும் போற்றி, வாழ்த்தி நிற்கின்றேன்.இடைவிடாது கல்விச் சேவையை வழங்கி நிற்கும் பெருமைக்குரிய கல்லூரித் தாயின் மைந்தர்கள் பல துறைகளிலும் கற்று பல பாகங்களிலும் பரந்து புகழ் பரப்பி பெருமை சேர்ப்பதை நானறிவேன்.அவர்கள் தம் கல்லூரிக்காக பல சேவைகளை ஆற்றி வருவது சிறப்பு மிக்கது.

அந்த வகையில் வடக்கு மாகாண கல்வி, பண்பாட்டலுவல்கள், விளையாட்டுத்துறை அமைச்சின் செயலாளராக பதவி வகித்த வரும்.தற்போது மீன்பிடி மற்றும் போக்குவரத்து கிராமிய அமைச்சின் செயலாளராக பதவி வகித்துவரும் உயர் திருசிவ லிங்கம் சத்தியசீலன் அவர்களை உருவாக்கிய பெருமை இக்கல்லூ ரியையே சாரும் என்பதில் இரட்டிப்பு மகிழ்ச்சியடைகின்றேன்.

வரலாற்றுச் சாதனைகளை பதிவு செய்து கொள்வதற்கு இவ் வகையான வெளியீடுகள் அவசியமாகின்றன. இம்மலரும் வரலாற்று ஆவணமாக திகழும் என்பது திண்ணம்.அந்த வகையில் இவ்விழாவிற்கு முன்நின்று உழைக்கும் கல்லூரிச் சமூகத்தினரை பாராட்டுவதோடு 'கணேசானந்தம்" மலர் சிறப்புற அமைய எனது நல்வாழ்த்துக்களை தெரிவிப்பதில் மகிழ்ச்சியடைகின்றேன்.

'கல்வி அழகே அழகு"

**திரு.முருகேசு சத்தியசீலன்**
கோட்டக்கல்விப் பணிப்பாளர்.
ஊர்காவற்றுறை.



# ஓய்வுநிலை உதவிக் கல்விப் பணிப்பாளரின் வாழ்த்துச்செய்தி

நாரந்தனை கணேச வித்தியாலயம் நூற்றாண்டு நிறைவு விழா எடுக்கும் வேளையில் எனது மன நிறைவான வாழ்த்துக் களையும், நல் ஆசியையும் தெரிவிப்பதோடு, இவ்வாய்ப்பினைத் தந்த பாடசாலை அதிபர் அவர்கட்கும், நிர்வாகத்திற்கும், ஆசிரிய குழாத்திற்கும், அன்பான மாணவர்களுக்கும், பெற்றோருக்கும் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

தீவகம் இடம் பெயர்ந்த போது தனித்துவமாக நாவற் குழியில் லவநீதா குடியிருப்பு கிராமத்தில் இயங்கியது. திரு. சா.தியாகலிங்கம் அதிபர் அவர்கள் மேற்படிப்புக்காக சென்ற வேளை நான் இப்பாடசாலையை கடமையேற்றேன். போர்க் காலமாயினும் அமைதியான சூழலில் பாடசாலை அமைந்தது. மாண வர்களின் கல்வி மேம்பாட்டுகள், கல்விசார் பிற செயற் பாடுகள் அனைத்திலும் ஆசிரியர், பெற்றோரின் பங்கு அளப் பரியது. இப்பாடசாலையுடன் இணைக்கப்பட்ட தம்பாட்டி அ.த.க பாடசாலையும், அதிபர் திரு.கந்தசாமி (கண்ணையா வாத்தியார்) அவர்களும், ஆசிரியர்களும் முழுமையாக ஒரே பாடசாலையாக கல்விச் செயற்பாடுகள் நடைபெற்றது.

இப்பாடசாலை யாழ் மாவட்ட உடற் பயிற்சிப்போட்டியில் கோப்பாய் கிறிஸ்தவ கல்லூரி மைதானத்தில் 20 பாடசாலை களுடன் மோதி 3 ஆம் இடத்தைப் பெற்று தீவக பாடசாலைக்கு பெருமை சேர்த்தது. இதர கல்விசார் போட்டியிலும் முன்னிலையில் மாணவர்கள் முதன்மையிடங்களையும் தமதாக்கி கொண்டனர் இம்முழுமையான செயற்பாடுகள் கற்பித்த ஆசிரியர்களுக்கு பெருமை சேர்த்தது. இப்பாடசாலை மீண்டும் சொந்த இடத்தில் இயங்கி வளர்ச்சி கண்டு இவ்விழா எடுக்கும் வேளை, அதிபர், ஆசிரியர்கள், பெற்றோர்கள், மாணவச் செல்வங்கள் அனைவரும் பாராட்டுக் குரியவர்கள். இச் சந்தர்ப்பத்தில் எனக்கும் வாய்ப்பளித்தமைக்கு நன்றி கூறுவதோடு மனநிறைவான வாழ்த்துக்களையும் தெரிவித்துக் கொள்கின்றேன்.

**ச.கணேசதாசன் S.L.P.S.I**
ஓய்வுநிலை, உதவி கல்விப்பணிப்பாளர்,
வவுனியா தெற்கு வலயம், வவுனியா.



# பாடசாலை அபிவிருத்திச் சங்க செயலாளரின் வாழ்த்துச்செய்தி

எமக்கு அன்னமிடும் அன்னையான நாரந்தனை மண்ணில் கல்வியின் அன்னையாக பிரகாசித்துக் கொண்டிருக்கும் நாரந்தனை கணேச வித்தியாலயம் நாட்டின் பல்வேறு இன்னலான சூழ்நிலைகளிலும் அசையாது நின்று எமது மக்களுக்கு எழுத்தறிவூட்டி நூற்றாண்டை 2016 இல் சிறப்பாக கொண்டாடுகிறது.

தலைமுறை தலைமுறையாக சான்றோர்களை உருவாக்கிய எமதன்னை இன்னும் பல்லாயிரம் வருடங்கள் நிலைத்து நாட்டின் நற்பிரஜைகளை உருவாக்க வேண்டும் என எல்லாம் வல்ல இறைவனைப் பிரார்த்திக்கின்றோம்.

இவ் நூற்றாண்டு நிறைவையொட்டி வெளிவரவிருக்கும் "கணேசானந்தம்" மலருக்கு வாழ்த்துச் செய்தி வழங்குவதில் பெருமகிழ்ச்சியடைவதோடு, எமது அன்னையின் நூற்றாண்டு விழா சிறப்புற நடைபெற எனது நல்வாழ்த்துக்களையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

"வாழ்க கணேசா
வளர்க எம் கல்விச்சமூகம்"

**இ.லூட்ஞானசேகரன்**
செயலாளர்
பாடசாலை அபிவிருத்திச் சங்கம்.



# பழைய மாணவர் சங்க செயலாளரின் வாழ்த்துச்செய்தி

நாரந்தனை வாழ் மக்களின் அரிய முயற்சியின் பயனாக உருவாகிய எமது பாடசாலை கடந்த நூறு ஆண்டுகளில் பல்வேறு துறைசார் வல்லுனர்களை உருவாக்கி எமது நாட்டிலும் உலகின் முன்னணி வகிக்கும் நாடுகளிலும் பெரும் பதவிகளை வகிக்க அத்திவாரம் இட்டுள்ளமை எம்எல்லோருக்கும் பெருமையைத்தேடி தந்துள்ளது. அந்த வகையில் எம் அன்னையின் நூற்றாண்டு விழாவை முன்னிட்டு வெளிவரவிருக்கும் "கணேசானந்தம்" எனும் நூற்றாண்டு மலருக்கு வாழ்த்துச் செய்தி வழங்குவதில் மகிழ்ச்சியடைகின்றேன்.

நூற்றாண்டு விழா சிறப்புற பழைய மாணவர் சங்க சாரபாக வாழ்த்துவதுடன் பாடசாலையின் கல்வி, கலை, கலாசார விழுமியப்பண்புகள் மேலும் வளர்ச்சி பெற வேண்டும் என அருள்மிகு ஸ்ரீ தான்தோன்றி அம்மனை பிரார்த்திக்கின்றேன்.

**கோ.கருணாகரன்**
பாடசாலை பழையமாணவர்
சங்க செயலாளர்.

## ஆலோசனைக் குழு



**(இ-வ)** : Dr.வை.யோகேஸ்வரன், திருமதி பி.சற்குணராஜா, திரு.இ.சுரேந்திரநாதன், திரு.சி.சத்தியசீலன்

# மலர்க் குழு



**இருப்பவர்கள் (இ-வ) :**Dr.வை.யோகேஸ்வரன், திரு.கோ.இளங்கோவன், செல்வி மே.கிருஸ்ணபிள்ளை, திருமதி ச.பிரேமவல்லி, திரு.த.கபிலநாதன், திரு.சா.தியாகலிங்கம்
**புகைப்படத்தில் இல்லாதவர்கள்:** Dr.வை.யோகேஸ்வரன், திரு.சா.தியாகலிங்கம்

# விழாக் குழு



**இருப்பவர்கள் (இ-வ) :** திருமதி கே.இந்திராணி, திரு.சு.இராமலிங்கம், திரு.தி.சுந்தரலிங்கம், திருமதி உ.சுமிதா, திருமதி ச.பிரேமவல்லி, திரு.வே.துரைராஜா, செல்வி கி.தயாழினி
**நிற்பவர்கள் (இ-வ) :** திரு.க.சகாதேவன், திரு.கோ.சிவகாந்தன், திரு.கு.கருணாநிதி, திரு.இ.லூட் ஞானசேகரம், திரு.ஈ.திருக்கேதீஸ்வரன், திரு.தி.சூரியகாந்தன்



## நாரந்தனை மக்கள் சங்க லண்டன் கிளை தலைவரின் வாழ்த்துச்செய்தி

தீவகத்தில் உதித்த முதல் சைவத்தமிழ்ப் பாடசாலை என்ற பெருமையை நாநிலம் போற்றும் நாரந(ன்)தனைக்கு பெற்றுத்தந்த நாரந்தனை ஊரில் வாழ்ந்த நம் முன்னோர்களையும் அப்பெரியோர்களையும் அவர்தம் பெருந் தொண்டினையும் பெரிதும் மதிக்கிறேன் மகிழ்கிறேன் .

தன்னிளமை குன்றாது அடி உதைபட்டாலும் புதுப்பொலிவுடன் நாட்டின் முதல்தர ஆரம்பக்கல்விப் பாடசாலையாக இன்னும் பல நூற்றாண்டுகள் நமது கிராம மக்களுக்கு சேவையாற்ற வேண்டும் என்றும் இக்கல்லூரியின் வளர்ச்சிக்காய் உழைக்கின்ற அத்தனை நெஞ்சங்களின் ஆவலும் ஆசையும் நிறைவேறி நூற்றாண்டு விழா சிறப்பாக நடைபெறவேண்டும் என்றும் நிலத்திலும் புலத்திலும் வாழும் அத்தனை நாரந்தனை மக்களில் ஒருவனாக நாரந்தனை மக்கள் சங்கத்தின் சார்பில் வாழ்க வாழ்க என்று வாழ்த்துகின்றேன்.

அன்புடன்<br>
**அ.சர்வநாதன்**<br>
தலைவர்<br>
நாரந்தனை மக்கள் சங்கம்(U.K / EU).

## வாழ்த்துச்செய்தி
## நாரந்தனை கிராம ஒன்றியம் - கனடா

எமது அன்பான இனிய நாரந்தனை வாழ் மக்களே!

நாரந்தனை கணேச வித்தியாலயம் நூறு ஆண்டுகளை நிறைவு செய்து இன்று அதன் நூற்றாண்டு விழா புரட்டாதி மாதம் 16ம்,17ம் திகதிகளில் மிக விமர்சையாக கொண்டாடப்படும் செய்தி அறிந்து மிக்க மகிழ்ச்சி அடைகிறோம்.

நான் நாரந்தனையில் பிறந்து வளர்ந்தும் கணேச வித்தியா சாலையில் கல்வி கற்கும் சந்தர்ப்பம் கிடைக்கவில்லை என்பது மனதுக்கு சிறிது வருத்தமாக உள்ளது. அங்குள்ள மாணவர் தொகை குறைவாக இருந்தும் இவ்விழாவை செய்ய வேண்டும் என்று அரும்பாடுபட்டுச் செயற்பட்டுக் கொண்டிருக்கும் அதிபர், ஆசிரியர்கள், மாணவர்கள் மற்றும் மக்களுக்கு எமது பாராட்டுக்கள்.

மேலும் கணேச வித்தியாலயத்தின் நூற்றாண்டு விழா சிறப்புற நடைபெறவும், தொடர்ந்து அதன் சேவைகள் பல நூற்றாண்டுகளுக்கு தொடரவேண்டும் என்று கனடா வாழ் நாரந்தனை மக்கள் ஒன்றியத்தின் சார்பாக வாழ்த்தி நிற்கின்றோம்.

**ஸ்ரீ கண்ணுத்துரை**
தலைவர்
நாரந்தனை மக்கள் ஒன்றியம்
(கனடா)



# நாரந்தனை சைவ மகாசபையின் தலைவர் திரு.வே.துரைராசா அவர்களின் வாழ்த்துச்செய்தி

நான் பிறந்த மண்ணில், நான் பயின்ற பாடசாலை யா/நாரந்தனை கணேச வித்தியாலயம் தனது நூறாவது ஆண்டை பூர்த்தி செய்வதையிட்டு அகமகிழ்கின்றேன்.

யா/நாரந்தனை கணேச வித்தியாலயம் தனது நூற்றாண்டு விழாவைக் கொண்டாடும் முகமாக வெளியிடுகின்ற "கணேசானந்தம்" மலருக்கு வாழ்த்துச் செய்தி வழங்குவதற்கு சந்தர்ப்பம் கிடைத்தமையையிட்டு மனமகிழ்ச்சியடைகின்றேன்.

கணேசாவில் கல்வி பயின்றோர்கள் பலர் நல்ல பதவிகளில் இருந்திருக்கிறார்கள், இருக்கின்றார்கள், இருக்கவேண்டுமென்பதே எனது ஆசை.

கணேசாவில் எனது தாயார் கல்வி பயின்றார். நானும் இங்கேதான் கல்வி பயின்றேன். எனது பிள்ளைகளும் இங்கேதான் கல்வி பயின்றார்கள். அதையிட்டு நான் பெருமிதம் அடைகின்றேன்.

"கணேசானந்தம்" நூற்றாண்டு மலருக்கு வாழ்த்துச் செய்தி வழங்க எனக்கு சந்தர்ப்பம் அளித்த மலர் குழுவினருக்கும், விழாக் குழுவினருக்கும் எனது நன்றியைத் தெரிவிப்பதோடு கணேச வித்தியாலயத்தின் நூற்றாண்டு விழா சிறப்பாக நடைபெற வேண்டுமென்றும், "கணேசானந்தம்" நூற்றாண்டு மலர் சிறப்பாக அமைந்து அனைவருக்கும் பயனுள்ளதாக அமைய எல்லாம் வல்ல தான்தோன்றி ஸ்ரீ மனோன்மணி அம்பாளை வணங்கி வேண்டி நிற்கின்றேன்.

**வே.துரைராசா,**
தலைவர்,
சைவமகாசபை ,
நாரந்தனை



# நாரந்தனை விவசாய சம்மேளன தலைவரின் வாழ்த்துச்செய்தி

கல்விப் புலமையாளர்களையும், சைவ கலாசார பண்பாடுகளையும், கல்விச்சாலைகளையும், பூர்வீக வழிபாட்டுத் தலங்களையும் உள்ளடக்கிய தீவகத்தில் நிலவளமும், நன்னீர் ஊருணிகளும், வயல்வெளிகளும், தோட்டந்துரவுகளும் நிறைந்த கிராமமாகும். இவ்வூரின் கண் பாரம்பரிய பயிர்ச் செய்கையில் ஈடுபட்டு விவசாயமும், வியாபாரமும் செய்து தம் குடும்பங்களை வளப்படுத்தும் மக்களைக் கொண்ட கிராமமாகவும் விளங்குவது நாரந்தனை கிராமம் ஆகும்.

இத்தகைய சிறப்பம்சங்களைக் கொண்ட நாரந்தனைப் பேட்டையில் ஓர் பெட்டகம் போன்று திகழ்வதே நாரந்தனை கணேச வித்தியாலயம் ஆகும். நாரந்தனை என்ற வண்டில் தளம்பல் இன்றிச் செல்ல உதவும் அச்சாணியே இவ் வித்தியாலயமாகும். நாரந்தனையிலுள்ள விவசாயக் குடும்பங்களின் சிறார்களுக்கு அறிவூட்டும் அகல் விளக்காகவும் எமது பாடசாலை திகழ்கிறது. தர்மஞானிகளினதும், கல்வி மேதைகளினதும் எண்ணத்தில் ஆத்மார்த்தமாகக்குவியப்பட்ட சிந்தனையால் நூறு வருடங்களுக்கு முன்னர் அத்திவாரமிடப்பட்ட எமது பாடசாலை அன்னை இன்று எழுச்சியான கல்விச்சாலையாக நூற்றாண்டு கடந்து எழில் பெற்று திகழ்கின்றாள்.

இன்று உலகளாவிய ரீதியில் அறிவுபரப்பி ஆலமர விழுதுகளாகத் திகழும் நாரந்தனை மைந்தர்களுக்கு பாடசாலை அன்னை வழங்கிய ஊக்குவிப்பும், ஒழுக்கப் போதனைகளுமே அவர்களை இவ்வாறு செழிப்புற வழிகோலியது. இத்தகையோரின் பெற்றோர்கள் தமது பிள்ளைகளை தமது சமயம், மொழி, பண்பாட்டுச்சூழலில் கல்வி பயில வேண்டும் என விரும்பியமையே இவர்களை இவ்வாறு அன்புரிமை மாணவர்களாக உருவெடுக்க வைத்தது. இந்த நூற்றாண்டு விழா நாரந்தனை மைந்தர்கள்

வீறு கொண்டு எழும் திருவிழா. அதனை இன்று நினைவு கூறுமுகமாகவே நூற்றாண்டு விழா மலர் வெளியிடப்படுகின்றது.

இத்தினத்தில் நூற்றாண்டு விழா மலரில் நாரந்தனை விவசாய சம்மேளனம் சார்பாகவும், நாரந்தனை வாழ் விவசாய மக்கள் சார்பாகவும் வாழ்த்து வழங்குவதில் பெருமகிழ்ச்சியடைகின்றோம். இன்னும் பலநூறு வருடங்கள் எமது பாடசாலை அன்னையின் சேவை தொடரவேண்டுமென நாரந்தனை தான்தோன்றி ஸ்ரீ மனோன்மணி அம்பாள் அருள் வேண்டி நிற்கின்றோம்.

**சி.தனபாலன்**
தலைவர்,
விவசாய சம்மேளனம்,
நாரந்தனை.



# நாரந்தனை வடக்கு மாதர் கிராம அபிவிருத்திச் சங்கத்தலைவியின் வாழ்த்துச்செய்தி

யாழ் நாரந்தனை கணேச வித்தியாலயம் 2016 இல் தனது 100வது அகவையை கொண்டாட எல்லாம் வல்ல தான்தோன்றி மனோன்மணி அம்பாளின் அருளை வேண்டுகிறேன். யாழ் நாரந்தனை கணேச வித்தியாலயத்தில் எனது தந்தை யார் கணவர், மகள்மார் என மூன்று தலைமுறையினர் இப்பாடசா லையில் கல்வி பயின்றுள்ளனர். இதனை நான் பெருமையாக கருதுகின்றேன். அன்னையின் புதல்விகள் அ.பானுஜா பல்கலைக்கழக மாணவி அ. யனுஜா புலமைப்பரிசில் பரீட்சையில் சித்தியடைந்து தீவக வலயத்தில் 2 ம் இடத்தைப் பெற்று தற்போது யாழ் வேம்படி உயர்தர பாடசாலை மாணவி ஆவார்

"ஈன்ற பொழுதில் பெரிதுவக்கும் -தன்மகனைச்
சான்றோன் எனக்கேட்ட தாய்

என்ற வள்ளுவன் வாக்கிற்கிணங்க சான்றோன் ஆக்கித்தந்த பெருமை அன்னை கணேச வித்தியாலயத்தைச் சாரும்.

உவகை கொள்ள வைத்த அன்னையை வாழ்த்துவதில் மட்டற்ற மகிழ்ச்சி அடைகிறேன். நான் இங்கு முன்னாளில் பாடசாலை அபிவிருத்தி சங்க செயலாளராக கடமை புரிந்ததை பெரும் பாக்கியமும் புண்ணியமும் என்றே கருதுகிறேன். இதை விட மாதர் கிராம அபிவிருத்திச் சங்கத்துக்கும் பாடசாலைக்கும் சிறந்த தொடர்புகள் இருந்து வந்தது. முன்பள்ளி மாணவர்களையும் பாடசாலையையும் இணைத்துக் கொள்ளும் மாதர் சங்கம் பாடசாலை சிரமதான பணிகளிலும் பங்கேற்று தன்னகத்தே கொண்ட நூலகத்தினால் மாணவர்களை பயன்பெற வைத்தது. பாடசாலையும் சங்கமும் கூட்டங்களை நடத்துவதிலும் கைகோர்க்கும். தற்போது எம் மண்ணின் மைந்தனால் சங்கத்திற்கு வழங்கப்பட்ட கதிரைகளையும் சமையல் பாத்திரங்களையும் வழங்கி உதவி புரிவதில் சங்கம் சார்பாக பெருமையடைகின் றோம். மாதர் சங்கம் சார்பாக நூற்றாண்டு விழா வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்வதோடு இப்பாடசாலை பல சிறந்த மாணவர் களை உருவாக்கி ஆல் போல் தழைக்க ஆண்டவனைப் பிரார்த் திக்கிறேன்

**திருமதி அ.சௌந்தரநாயகி**
தலைவி
மாதர் கிராம அபிவிருத்திச் சங்கம்
நாரந்தனை வடக்கு, ஊர்காவற்றுறை



# பாரதி சனசமூகத் தலைவரின் வாழ்த்துச்செய்தி

காலம் காலமாக பழமையும் பெருமையும் பண்பாட்டுச் சிறப்பினையும் ஒருங்கிணைத்து மக்களின் வாழ்வுச் சான்றாக விளங்குகின்ற கோவில்களும், கலைக்கூடங்களும் ஒருங்கே அமைந்த தீவகத்தின் வடக்குப் பிரதேச செயலகத்திற்கு உட்பட்ட பிரிவில் ஊர்காவற்றுறை நாரந்தனைக் கிராமத்தில் வயல்களும் கடல்நிலமும் சூழவுள்ள பகுதியில் கலையமுதினை எமக்கு அளிப்பதற்கு உருவான எமது பாடசாலை கல்விமான்கள், தொழில் அதிபர்கள், விவசாயிகள் போன்றோரை உருவாக்கி இன்று தனது நூறாவது ஆண்டினை பூர்த்தி அடைவதையிட்டு மனமகிழ்வுடன் பாராட்டுவதுடன் தொடர்ந்தும் பல அறிஞர்கள், கல்விமான்களை தோற்றுவித்து பல்லாண்டு காலம் வளர வேண்டும் என்று வாழ்த்திக் கொள்வதோடு எமது குல தெய்வம் சுயம்பு தேவி மனோன்மணி அம்பிகையின் திருவருள் கிடைக்க வேண்டிக் கொள்கிறேன்.

**சிவத்திருசிவகாந்தன்**
தலைவர்
பாரதி சனசமூக நிலையம்.



# நாரந்தனை வடக்கு கிராம அபிவிருத்திச் சங்க உப தலைவரின் வாழ்த்துச்செய்தி

நாரந்தனை வடக்கு கிராம அபிவிருத்திச் சங்கம் நாரந்தனையின் அபிவிருத்தியில் அதிக பங்கு வகித்திருக்கிறது. ஊர்காவற்றுறை பிரதேச சபையினுடன் தொடர்பு கொண்டு பல வேலைகளை செய்திருக்கின்றது. உதாரணமாக நாரந்தனை வடக்கில் உள்ள மூன்று வீதிகள் திருத்தியமைத்தமை, நாரந்தனை வடக்கு இந்துமயானத்தின் மண்டபம் எரிகொட்டகை, தண்ணீர்த் தொட்டி ஆகியன அமைத்தமையாகும்.

நாரந்தனை கணேச வித்தியாசாலை தனது நூறாவது ஆண்டை கொண்டாடும் முகமாக வெளிவரும் "கணேசானந்தம்" மலருக்கு வாழ்த்துச் செய்தி தெரிவிப்பதிலும் கடமைப்பட்டுள்ளது.

கணேசாவின் நூற்றாண்டு விழா சிறப்புடன் நடைபெறவும் கணேசானந்தம் நூற்றாண்டு மலர் சிறப்புடன் வெளிவந்து மக்களுக்கு நற்செய்திகளை வழங்க வேண்டுமென்று எல்லாம் வல்ல மனோன்மணி அம்பாளை வேண்டி வாழ்த்துகின்றேன்

சி.தயாளன்
உபதலைவர்.
நாரந்தனை வடக்கு கிராம அபிவிருத்திச் சங்கம்.

# எமது அதிபர்



திருமதி பிரேமவல்லி சற்குணராஜா



## அதிபர் பார்வையில்...............

சிவநெறிச் சிறப்பும் செந்தமிழ்ச் செழிப்பும் தவ நெறி அறியா அறநெறிப் பண்பும் மனோன் மணி அம்பாள் மகிமையும் சேர நிலவள நீர்வள எழில் மிகு தொழில்களின் சீரின் பெருமை பெறும் நாரந்தனை வடக்குப்பகுதியில் விநாயகரின் நாமத்தில் கல்விக் கூடமாக விளங்கிக் கொண்டிருப்பது யா/நாரந்தனை கணேச வித்தியாலயமாகும்.

1991 ஆம் ஆண்டு இராணுவ நடவடிக்கையின் போது நாரந்தனை மக்கள் கையில் கிடைத்த பொருட்களோடு இடம்பெயர்ந்தனர். திரும்பி வந்து பார்த்த போது ஆவணங்கள் ஒன்றுமே கிடைக்கவில்லை. வேலணைக்கல்விக் கோட்டத்தின் நிலையும் இது தான். நான் இடப்பெயர்வின் முன் கடமையாற்றிய போது தீவகப்பாடசாலைகளின் வரலாறுகள் தொகுக்கப்பட்ட ஒரு நூலை பார்த்த ஞாபகம். அதன் படி இப்பாடசாலை நாரந்தனை கந்தசாமி கோவிலுக்கு அருகில் 1916இல் இப்பாடசாலை இயங்கியுள்ளது.

இப்பாடசாலை நாரந்தனை கந்தசுவாமி மடத்தில் 1916 இல் திண்ணைப் பள்ளிக்கூடமாக இயங்கியது. அப்போது வேலணை மேற்கு தம்பு வாத்தியார் முதல் தலைமை ஆசிரியராக கடமையாற்றினார்.

இவ்வூர்ச் சைவப் பெரியாரும் மலாயன் நில அளவையாளருமான திரு.ஆறுமுகம் நாகநாதன் என்பவரால் காணி வழங்கப்பட்டு அவரது உறவினர் மற்றும் பெரியார்களால் 1919 இல் கிடுகு வேயப்பட்ட பாடசாலையாக தற்போதைய இடத்தில் இயங்கத் தொடங்கியது.

இந்து போர்ட் இராசரத்தினம் அவர்களால் 01-10-1924 இல் இப் பாடசாலை பொறுப் பேற்கப்பட்டது. 1930 ஆம் ஆண்டுகளில் வேலணை கிழக்கைச் சேர்ந்த கனகரத்தினம் ஆசிரியர், பொன்னுத்துரை ஆசிரியர் கடமையாற்றியுள்ளனர்.

1935 ஆம் ஆண்டுகளில் மண்டைதீவைச் சேர்ந்த மாணிக்கம் அவர்கள் அதிபராக கடமையாற்றியுள்ளார். இவர் அதிபராக கடமையாற்றிய அதேவேளையில் சிறந்த ஆசிரியராகவும் பாடசாலையில் தொழிற்பட்டார் .அன்றைய மக்களின் தேவைகளுக்கு ஏற்ப ஒரு முழுமையான பாடசாலையாக்குவதில் அவருடைய பங்கு காத்திரமானது. எமது கிராம மக்களால் மட்டுமன்றி யாழ்ப்பாணத்தின் அறிஞர்களால் மதிக்கப்படுபவர் ஆ.சபாரத்தினம் ஆவார் இத்துடன் பண்டிதமணி கணபதிப்பிள்ளையின் கருத்துக்களால் கவரப்பட்டு அவருடன் இருந்து சைவசமய நூல்களை ஆழமாகக் கற்றவர். ஆங்கிலத்திலும் நன்கு புலமை பெற்ற இவர் யாழ் கரம்பன் சண்முகநாத வித்தியாலய அதிபராக இருந்து உருப்பெற்றார். அவரும் நாரந்தனைக் கணேசாவில் ஆரம்பக்கல்வியை இவரின் வழிகாட்டலிலேயே பெற்றவர் ஆவார்.

1940 இல் மண்டைதீவைச் சேர்ந்த திரு.கணபதிப்பிள்ளை அவர்கள் அதிபராகவும் அதனைத் தொடர்ந்து தம்பாபிள்ளை மயிலிட்டியைச் சேர்ந்த திரு.நா.கந்தையா என்போர் கடமையாற்றினார்கள்.

மீண்டும் மண்டைதீவைச் சேர்ந்த திரு.மாணிக்கம் அவர்களே 1942-1943 வரை பாடசாலையில் அதிபராகக் கடமையாற்றினார்.

1945 ஆம் ஆண்டு நடைமுறைக்கு வந்த ஆங்கில மொழி மூல இலவசக்கல்வியின் அறிமுகத்தினால் மாணவர்கள் ஆங்கில மொழி மூலமாகவும் இலவசக் கல்வி பெறக்கூடியதாக இருந்தது. வேலணை மத்திய மகாவித்தியாலயம் தாபிக்கப்பட்டது. ஆங்கில மொழி மூலமான பாடசாலையை நோக்கிச் சென்றனர். இங்கு முதலாம் வகுப்பு தொடக்கம் ஐந்தாம் வகுப்பு வரை மட்டுமே கற்றல் கற்பித்தல் செயற்பாடுகள் நடை பெற்றன.

1946 இல் தம்பாட்டி அ.த.க பாடசாலை ஆரம்பமாக தம்பாட்டி மாணவர்கள் அங்கே செல்ல இப்பாடசாலை மாணவர் தொகையில் வீழ்ச்சி ஏற்பட்டது.

1960 இல் மாணிக்கம் அதிபர் அவர்களைத் தொடர்ந்து புங்குடுதீவைச் சேர்ந்தவர் அதிபராகக் கடமைகளைப் பொறுப்பேற்றார். அதனைத் தொடர்ந்து 1962 ஆம் ஆண்டு பகுதியில் நம்மூர் பண்டிதர் கணபதிப்பிள்ளை அவர்கள் அதிபராக பொறுப்பேற்றார். இவருடைய காலத்தில் ஊர்காவற்றுறை தொகுதி பாராளுமன்ற உறுப்பினர் நவரத்தினம் அவர்கள் இப்பாடசாலைக்கு 80′ x 20′ கட்டடத்தை உருவாக்க நிதி வழங்கினார். பாடசாலையின் இடப்பற்றாக்குறையை நிவர்த்தி செய்ய எமது ஊர்ப் பெரியவரான திரு. தில்லைநாதர் அவர்களால் 4 பரப்பு காணி அன்பளிப்பாக வழங்கப்பட்டது. அக்காணியிலே கிணறு கட்டப்பட்டமை குறிப்பிடத்தக்கது. 1967 காலப்பகுதியில் இவ்வூரைச் சேர்ந்த திரு. செ.இராசதுரை, திரு.சி.கனகரத்தினம் ஆகிய இருவரும் ஆசிரியர்களாக பாடசாலையில் கடமையாற்றினர். 1972இல் ஏற்படுத்தப்பட்ட கல்வி சீர்திருத்தத்திற்கு விஞ்ஞானக்கல்வியை கிராமப்புறங்களிலும் பெறக்கூடிய நிலை ஏற்பட்டது. சில ஆரம்பப்பாடசாலைகள் தரம் 9 வரை உள்ள பாடசாலைகளாக வகைப்படுத்தப்பட்டன. அமரர் க. கணபதிப்பிள்ளையின் முயற்சியால் இப்பாடசாலை தரம் 9 வரை கற்பிக்கும் பாடசாலையாக வகைப்படுத்தப்பட்டது. இவர் தனது அனுபவத்தாலும் நிர்வாகத் திறமையினாலும் இது மாணவர்களின் தேவையை நிறைவு செய்யக்கூடியதாக ஒரு கட்டுக்கோப்புடனான ஒரு பாடசாலையாக மாற்றியுள்ளார்.

1973 ஆம் ஆண்டு திரு.கணபதிப்பிள்ளை அதிபர் ஓய்வு பெற 1974 இல் திரு. செ.இராசதுரை அவர்கள் அதிபர் பதவியை ஏற்றார். இவர் இப்பாடசாலையின் பழைய மாணவர் தான் கற்ற பாடசாலையின் மீதும் கிராமத்தின் மீதும் அளவற்ற பற்றுக் கொண்டவர் அமரர் கணபதிப்பிள்ளையின் முகாமைத்துவத்தில் ஆசிரியராக இருந்து தன்னை செழுமைப்படுத்திக் கொண்டவர் ஆவார். இவருடைய காலத்தில் ஊர்காவற்றுறை தொகுதி பாராளுமன்ற உறுப்பினர் பொ.இரத்தினம் அவர்களால் நிதி ஒதுக்கப்பட்டு 80′x20′ கட்டடம் கட்டப்பட்டது. மலசலகூடம், 40′x20′ விஞ்ஞான கூடமும் கட்டுவிக்கப்பட்டது. 1977 இல் NCGE பரீட்சையில் 80% மான மாணவர்களும் 1978 இல் க.பொ.த சாதாரண தர பரீட்சையில் 90% மான மாணவர்களும் சித்தியடைந்துள்ளனர். இவருடைய காலத்தில் 1962இல் இணைந்த திருமதி கனம்மா சிவனையா ஆசிரியர் ஓய்வு பெறும் வரை இப்பாடசாலையில் கல்வி கற்பித்தார். திருமதி.பொன்றோஸ் எலியாஸ், திருமதி.

டெய்சி புஸ்பம் மனுவேற்பிள்ளை ஆசிரியர்களாக கடமையாற்றினர். இவர்கள் எம்மை அரவணைத்துக் கல்வி கற்பித்த ஆசிரியர்கள் ஆவார். 1979 இல் திரு.சா.தியாகலிங்கம் அவர்கள், திருமதி.நடனேஸ்வரி நடேசபிள்ளை, செல்வி.வசந்தி மாலா சுந்தரம் ஆகியோரும் ஆசிரியர்களாக கடமையாற்றினர். 1984 இல் ஆசிரியராக திரு.சு.கலாதரன் அவர்கள் கடமையேற்று பின்பு சமூகக்கல்வி ஆசிரிய ஆலோசகராகவும், 1988 சித்திரை 16 ஆம் திகதி அதிபராகவும் இப்பாடசாலையில் கடமையேற்றார். இவருடைய காலத்தில் இப்பாடசாலை பழைய மாணவர்களான க.இரஞ்சிதகுமாரி, பிரேமவல்லி, இ.இரவிச்சந்திரன், கி.மேனகா க.ஜெயந்தி ஆகியோர் கடமையாற்றியமை குறிப்பிடத்தக்கது. 1988 இல் நவரத்தினம் கேசுநாதன் அவர்கள் பாடசாலைக்கான மின் இணைப்பினை பெற்றுக் கொடுத்தார். இக் காலகட்டத்தில் பாடசாலையில் நடைபெற்ற கண்காட்சியும் பரிசளிப்பு விழாவும் வெகு சிறப்பாக நடைபெற்றது. இக்கண்காட்சியினை தீவகத்தினுள் அனைத்துப் பாடசாலைகளும் பார்வையிட்டுச் சென்றது. இக்காலத்தில் நூலகமும் ஆரம்பிக்கப்பட்டது. இல்ல விளையாட்டுப் போட்டியும் சிறப்பாக இடம்பெற்றது.

1989 இல் எமது பாடசாலையின் அதிபர் திரு.சு.கலாதரன் யா/வேலணை சைவப்பிரகாசா வித்தியாலயத்துக்கு அதிபராக கடமையேற்று செல்ல திரு.சா.தியாகலிங்கம் அதிபராக கடமையேற்றார். இவருடைய காலப்பகுதியில் திரு.பொ.அருணகிரிநாதன் அவர்கள் தற்போது தீவக கல்வி பிரதிக் கல்விப்பணிப்பாளர் அவர்களும் உப அதிபராக கடமையாற்றினார். 1990 இல் ஊர்காவற்றுறை பிரதேசத்தில் ஏற்பட்ட இராணுவ நடவடிக்கை காரணமாக மக்கள் எல்லோரும் இடம் பெயர ஒக்டோபர் மாதம் வரை தீவுப்பகுதி பாடசாலைகள் மூடப்பட்டிருந்தன. நவம்பர் மாதம் தொடக்கம் யா/நாரந்தனை கணேச வித்தியாலயத்தில் யா/தம்பாட்டி அ.த.க பாடசாலையும் இணைந்து இப்பாடசாலையில் செயற்பட தொடங்கியது. 1992 இல் இராணுவ நடவடிக்கை காரணமாக மக்கள் அனைவரும் இடம்பெயர்ந்தார்கள். ஊர்காவற்றுறை கொத்தணிப் பாடசாலைகள் மாலை நேரங்களில் யா/மத்திய கல்லூரியில் தற்காலிகமாக இயங்கியது. பின்னர் சென்.ஜோன்ஸ் அக்கடமியில் இயங்கின. அதன் பின் 1994 இல் நாவற்குளியில் யா/நாரந்தனை கணேச வித்தியாலயமும், யா/தம்பாட்டி.அ.த.க பாடசாலையும் இணைந்து செயற்படத் தொடங்கியது. அக்காலகட்டத்தில் திரு. சா.தியாகலிங்கம் அவர்கள் உயர்கல்விக்காக யாழ் பல்கலைக்கழகம் சென்றார். அக்காலகட்டத்தில் திரு.ச.கணேசதாசன் அவர்கள் யா/நாரந்தனை கணேச வித்தியாலய அதிபராகவும், திரு.ம.கந்தசாமி அவர்கள் யா/தம்பாட்டி.அ.த.க பாடசாலை அதிபராகவும் கடமையாற்றினார். இவர்களின் காலப்பகுதியில் உடற்பயிற்சிப் போட்டி வலைப்பந்தாட்டப் போட்டி ஆகிய போட்டிகளில் மாவட்ட மட்டத்திலும் வெற்றி பெற்றமை குறிப்பிடத்தக்கது. மற்றும் தமிழ்த்தினப் போட்டியில் வில்லுப்பாட்டு, பேச்சுப்போட்டி, இசைப்போட்டிகளிலும் வெற்றி பெற்றனர்.

நவம்பர் 1992 இல் இராணுவம் யாழ் நகரை கைப்பற்றிய போது மக்கள் இடம்பெயர பாடசாலையும் இடம்பெயர்ந்து விடத்தற்பளையிலும் பின்பு கெற்பலியிலும் சிறிது காலம் அல்லாரையிலும் தற்காலிகமாக இயங்கியது.

மே 1996 இல் மக்கள் யாழ் நகருக்குத் தம் சொந்த இடங்களிற்கு திரும்பிய போது யா/நாரந்தனை.றோ.க வித்தியாலயத்தில் யா/நாரந்தனை கணேச வித்தியாலயம், யா/தம்பாட்டி.அ.த.க பாடசாலை, யா/சின்னமடு றோ.க பாடசாலை என்பன அதிபர் திரு.

சா.தியாகலிங்கம் தலைமையில் இயங்கியது.

1997 இல் யா/நாரந்தனை கணேச வித்தியாலயம் தனது சொந்தக் கட்டடத்தில் அதிபர் திரு.குமரேஸ்வரநாதன் தலைமையில் இயங்கத் தொடங்கியது. சமூகத்தின் ஒத்துழைப்போடு பாடசாலை சிறப்பாக இயங்கியது. விஞ்ஞானம், ஆரம்பக்கல்விப் பாடங்களுக்கு தொண்டர் ஆசிரியர்களும், ஆங்கிலப் பாடத்துக்கு பகுதி நேர ஆசிரியராக திருமதி.க.ஸ்ரீகாந்தமூர்த்தியும் கல்வி கற்பித்தனர்.

08-07-1998 இல் மீண்டும் திரு.சா.தியாகலிங்கம் அவர்கள் அதிபராக பாடசாலையைப் பொறுப்பேற்றார். இக்காலத்தில் தம்பாட்டி மாணவர்களும் தரம் 9,10,11 வகுப்புக்களில் கல்வி கற்றுக் கொண்டிருந்தார்கள். இக்காலப்பகுதியில் மாணவர்கள் உடற்பயிற்சி போட்டியிலும், வலைப்பந்தாட்டப் போட்டியிலும் பங்குபற்றினர். அத்துடன் தமிழ்த்தினப் போட்டியிலும் நாடகம், பண்ணிசை, பாவோதல், வில்லுப்பாட்டு போன்ற நிகழ்ச்சிகளில் கோட்ட, வலயம், மாவட்ட மட்டங்களிலும் பங்குபற்றி வெற்றியும் பெற்றனர்.

மாணவர்களின் அடைவு மட்டத்தை அதிகரிக்கும் நோக்குடன் கல்வி மேம்பாட்டு பேரவையினால் ஒரு செயற்றிட்டம் ஆரம்பிக்கப்பட்டது. யாழ்ப்பாண மாவட்ட பாடசாலைகளில் இருந்து 2004 டிசம்பர் கா.பொ.த. சாதாரண தரத்திற்கு தோற்றிய மாணவரின் எண்ணிக்கையின் அடிப்படையில் பாடசாலைகள் வகைப்படுத்தப்பட்டன. 1-10 மாணவர் வகுதிப்பாடசாலைகளில் இப்பாடசாலை தீவக வலயத்தில் முதலாம் இடத்தையும் யாழ் மாவட்டத்தில் 3ம் இடத்தையும் பெற்றமையால் கேடயம் வழங்கி பாராட்டப்பட்டது. 2005 ஆம் ஆண்டு நீண்டகாலத்திற்குப் பின் தரம் - 5 புலமைப்பரிசிலில் செல்வி லக்சிகா இளமுருகன் 144 புள்ளிகள் பெற்று சித்தியடைந்தார். இவரது விடாமுயற்சியால் 20'x20' கட்டடமும் பெண்களுக்கான மலசலகூடமும் GTZ மூலமும் அதற்கான மேலதிக காணியை திருமதி. நேசமணி கந்தையாவிடம் பெற்றுக் கட்டப்பட்டது. அத்துடன் விளையாட்டு மைதானமும் திருமதி.மகேஸ்வரி விஸ்வலிங்கம் அவர்களால் அன்பளிப்பாக கிடைக்கப்பெற்றது.

நாடகங்கள், வில்லுப்பாட்டு என்பவற்றை எழுதி அவற்றை மாணவர்கள் மூலம் மேடையேற்றவும் செய்வார். இவ்வாறு 03 வருடங்கள் ஆசிரியராகவும், 07 வருடங்கள் உப அதிபராகவும், 18 வருடங்கள் அதிபராகவும் அல்லும் பகலும் அயராது உழைத்த அதிபரில் ஒருவராக பெயர்பெற்றுள்ளார் என்பது மறக்க முடியாத உண்மையாகும்.

2007 ஆம் ஆண்டு முதல் திருமதி.பிரேமவல்லி சற்குணராசா அவர்கள் கடமை நிறைவேற்று அதிபராக பாடசாலையைப் பொறுப்பேற்றார்.

**தரம் - 05 புலமைப்பரிசில் பரீட்சையில் புள்ளிகள் நூறுக்கு மேல் பெற்றோர்.**

| ஆண்டு | மாணவர் பெயர் | புள்ளிகள் | பரீட்சைக்கு தோற்றியோர் |
|---|---|---|---|
| 2015 | யோகவண்ணன் யோதிகா<br>சிவகாந்தன் விதுசா | 124<br>112 | 02 |
| 2014 | பரமானந்தன் ஆதவன் | 157 | 04 |
| 2013 | பரமசிவம் மயூரி<br>லோகேஸ்வரன் பிரியங்கா | 116<br>115 | 05 |
| 2012 | லூட்ஞானசேகரன் வைஸ்ணவி | 144 | 03 |
| 2011 | லூட்ஞானசேகரன் கஜிகரன்<br>ஞானேந்திரன் சுலக்சனா<br>சிவகாந்தன் மதுஷா | 134<br>109<br>100 | 08 |
| 2010 | புவனேந்திரன் ரம்மியா<br>பரமானந்தன் ராகவன்<br>நாகராசா தேனுஜன் | 150<br>144<br>120 | 07 |
| 2009 | புவனேந்திரன் விதுசா<br>சுரேந்திரன் சானுகா<br>தனபாலன் சுவர்ணன் | 156<br>126<br>108 | 05 |
| 2008 | அசோகன் ஜனுஜா<br>தனபாலன் கீர்த்திகன் | 138<br>128 | 03 |

2010 க.பொ.த சா/த பரீட்சையில் செல்வன்.புவனேஸ்வரன் கௌரிதரன் 8A பெற்று இப் பாடசாலைக்கு புகழைப் பெற்றுத்தந்துள்ளார்.எமது பாடசாலை 2015 ம் ஆண்டு புலமைப்பரிசில் பரீட்சையில் 70 புள்ளிகளுக்கு மேல் 100% மாணவர்கள் பெற்று மாகாண மட்டத்தில் முதன்மைப் பாடசாலை என்ற பெயரைப் பெற்றுள்ளது.

இக்காலத்தில் கணணி, குழாய் நீர்வசதி, மின்சார புனரமைப்பு சமையலறை போன்ற வசதிகள் செய்யப்பட்டன. போட்டோ பிரதி இயந்திரம் திருமதி.தியாகராசா குடும்பத்தினரால் அன்பளிப்பாக கிடைக்கப்பெற்றது. மற்றும் திரு.கனகரத்தினம் ஆசிரியரால் எமது பாடசாலை மாணவர்களுக்கு கற்றல் உபகரணமும் நூலக வசதியும் செய்து கொடுக்கப்பட்டது. முன்னாள் அதிபர் திரு.கணபதிப்பிள்ளை குடும்பத்தினராள் மாணவர்களுக்கு ஊக்குவிப்பு பணமும் மற்றும் இணைப்பாடவிதான செயற்பாடுகளுக்கான நிதியுதவியும் வழுங்கப்பட்டது.

எமது பாடசாலை முன்னாள் ஆசிரியரும் கனடாவாசியுமான திருமதி.மலர்விழி மூலம் மாணவர்களுக்குரிய கற்றல் உபகரணங்களுக்கான நிதியுதவி வழுங்கினார். மின்சாரப் புனரமைப்புக்கான நிதியுதவி திரு.இ.லூட்ஞானசேகரன் மூலம் திருமதி.சிவனையா குடும்பத்தினரிடம் பெற்றுத் தரப்பட்டது. விளையாட்டு மைதானத்திற்கான காணியின் கட்டட இடிபாடுகளை நீக்கி மட்டப்படுத்த வேண்டிய தேவை இருந்தது. இது உலக வங்கி

அனுசரணையுடன் மெகா நிறுவனத்தினால் மேற்கொள்ளப்பட்டது. ஊர்காவற்றுறை பிரதேச செயலகம் இதற்கான ஏற்பாடுகளை செய்து இருந்தது.

இங்கு கல்வி கற்கும் மாணவர்கள் தமது விடாமுயற்சியாலும் தீவக வலய கல்வி உத்தியோகத்தர், கோட்டக்கல்விப் பணிப்பாளர், பாடசாலை அதிபர், ஆசிரியர்களின் வழிகாட்டலினாலும் கோட்டமட்ட, வலயமட்ட போட்டிகளில் பங்கு பற்றி சான்றிதழ்களைப் பெற்றுள்ளனர்.

எமது பாடசாலையில் மாணவர் தொகை குறைவாக உள்ளமையால் அரச நிதி பங்கீடு குறைவாக கிடைக்கிறது. மேலும் ஆசிரியர் பற்றாக்குறை உள்ளது. ஆரம்பக்கல்வி இல்லாத காரணத்தினால் ஆரம்ப கல்வி மாணவர் அனுமதி குறைவாக உள்ளது. இங்கு கற்கின்ற மாணவர் தேவையை ஓரளவேனும் பூர்த்தி செய்ய வேண்டிய நிலையில் உள்ளோம். பின்வரும் விடயங்களை எம்மால் உடனடி தேவையாக அடையாளம் காணப்பட்டுள்ளது.

1. ஆரம்பக்கல்வி ஆசிரியர்கள் தேவை
2. ஆரம்ப வகுப்புகளுக்கான செயற்பாட்டறைகள் அமைப்பு
3. விளையாட்டு முற்றம் விரிவாக்கப்படல்
4. கணனி வசதி
5. பல்லூடக வசதி
6. விஞ்ஞான கூட அமைப்பு

மேலும் இப் பாடசாலைப் பழைய மாணவர்கள் வைத்தியர்கள், பொறியியலாளர்கள், முகாமையாளர்கள், நிர்வாக அலுவலர்கள், அதிபர்கள், ஆசிரியர்கள் என இலங்கையில் மட்டுமன்றி வெளிநாடுகளிலும் தொழில் புரிகின்றனர். தொடர்ந்து பழைய மாணவர்களின் பலவித பங்களிப்பிலேயே பாடசாலை வளர்ந்துவருகின்றது என்றால் மிகையாகாது. மேலும் பாடசாலையை திறம்பட நடத்த என்னுடன் தோளோடுதோள் நின்று பங்களிப்புச் செய்யும் ஆசிரியர்களின் முயற்சியும் அர்ப்பணிப்பும் பாடசாலையின் வளர்ச்சிக்கு உறுதுணையாகின்றன.

அதிபர்
**திருமதி பிரேமவல்லி சற்குணராசா**
யா/நாரந்தனை கணேச வித்தியாலயம்

# முன்னைநாள் அதிபர்கள்


அமரர் சி.மாணிக்கம்
1935-1964


அமரர் க.கணபதிப்பிள்ளை
1935-1964


திரு.செ.இராசதுரை
1935-1964


திரு.சு.கலாதரன்
1988-1989


திரு.சா.தியாகலிங்கம்
1989-1994, 1995-1997, 1998-2007


திரு.ச.கணேசதாசன்
1994-1995


திரு.க.குமரேஸ்வரநாதன்
1997-1998


திருமதி தி.சற்குணராஜா
2007-இன்று வரை



# யாழ். நாரந்தனை கணேச வித்தியாலயம்

## பாடசாலையின் வரலாறு

ஈழமணித் திருநாட்டின் வடக்கே அமைந்துள்ள சப்த தீவில் இயற்கை துறைமுகாமாகவுள்ள ஊர்காவற்றுறை பிரதேசத்திற்கு அருகாமையில் உள்ள சிறிய கிராமமே நாரந்தனையாகும். இக்கிராமம் ஆரம்ப காலங்களில் ஒரு கிராமசேவகர் பிரிவில் இயங்கி வந்தது. தற்போது நான்கு கிராம சேவையாளர் பிரிவாக பிரிக்கப்பட்டு நாரந்தனை வடக்கு, நாரந்தனை வடமேற்கு, நாரந்தனை மத்தி, நாரந்தனை தெற்கு என இயங்கி வருகின்றது .இக்கிராம சேவகர்கள் பிரிவுகள் யாவும் ஊர்காவற்றுறை பிரதேச சபைக்குட்பட்டு செயற்படுகின்றன. நாரந்தனை வடக்கு J/55 கிராமசேவகர் பிரிவில் நாரந்தனை கணேச வித்தியாலயம் அமைந்துள்ளது. இக் கிராமம் இயற்கை அன்னையின் கொடைகளான பனைவளம் தென்னைவளம், கடல்வளம், விவசாய நிலவளம், நெல்வயல்கள் குளங்கள் என்பவற்றை ஒருங்கே கொண்டமைந்துள்ளது.

**பாடசாலையின் தோற்றமும் வளர்ச்சியும்**

பிரித்தானியர் கிழக்கிந்திய வர்த்தக கம்பனியின் உதவியுடன் இலங்கையின் கரையோரப் பகுதிகளை கைப்பற்றியிருந்தனர். வர்த்தக நோக்கத்திற்காக வருகை தந்த பிரித்தானியர் தமது கிறிஸ்தவ சமயத்தைப் பரப்புவதிலும் மக்களுடன் தமது தொடர்பாடலுக்காக ஆங்கில மொழியை புகுத்துவதிலும் மும்முரமாக ஈடுபட்டனர். ஊராத்தோட்ட (ஊர்காவற்றுறை) இயற்கைத்துறைமுகமாக அமைந்திருந்தமை இதற்கு சாதகமாக அமைந்திருந்தது.

இலங்கைத் திரு நாடு பிரித்தானியர் ஆட்சிக்காலத்திற்கு உட்படுத்தப்பட்டிருந்த போது ஆங்கிலேயர் கிறிஸ்தவ சமயத்திற்கும் மிசனரிக்கல்விக்கும் ஆங்கில மொழிக்கும் மக்களை வலுக்கட்டாயமாக ஈர்த்தனர் கிராமங்கள் தோறும் கிறிஸ்தவ ஆலயங்களும் மிசனரிப்பாடசாலைகளும் அமைக்கப்பட்டு ஆங்கிலக்கல்வி புகட்டப்பட்டது. மக்கள் அவர்களின் செயற்பாடுகளால் கவரப்பட்டும் கட்டாயத்தின் பேரிலும் மதமாற்றத்திலும், ஆங்கிலக்கல்வியை பெறுவதிலும் ஆர்வம் செலுத்தினர். இதனைப் பொறுக்க முடியாத ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலர் சைவத்தையும் தமிழையும் வளர்ப்பதற்காக அரும்பாடுபட்டார். அக்காலகட்டத்தில் நாரந்தனையிலும் அதனைச் சூழவுள்ள அயற் கிராமங்களிலும் கிறிஸ்தவ ஆலயங்களும் கிறிஸ்தவப் பாடசாலைகளுமே இயங்கிக் கொண்டிருந்தன.

மதமாற்றத்தை விரும்பாத நாரந்தனை வாழ் சைவசமய மக்கள் சைவத்தையும் தமிழையும் வளர்க்க வேண்டும் என்ற ஆவலினால் பாடசாலை ஒன்றினை அமைக்க ஒன்று திரண்டனர். அவர்களின் அயராத உழைப்பினால் பாடசாலை அமைப்பதற்கான காணியை அமரர் திரு.ஆறுமுகம் நாகநாதர் அவர்கள் வழங்கி உதவினார். திரு.கந்தையா வாத்தியார், திரு.நடராசா வாத்தியார், திரு.விசுவலிங்கம் ஐயா ஆகியோர் ஒன்றிணைந்து

பனை மரங்களை வெட்டி சீவி மாட்டுவண்டி கூட இல்லாத காலப்பகுதியில் மரங்களை தோளில் சுமந்து வந்து கொட்டில் அமைத்து பாடசாலை ஆரம்பிக்கப்பட்டதாக செவிவழி வந்த செய்திகள் கூறுகின்றன. அக்காலத்தில் பாலர்வகுப்பு தொடக்கம் ஐந்தாம் வகுப்புவரை வகுப்புக்கள் நடைபெற்றதாகவும் அறியமுடிகிறது. அந்தக் காலப்பகுதியில் தலைமை வாத்தியாராக வேலணையைச் சேர்ந்த திரு.தம்பு அவர்கள் செயற்பட்டதாகவும் திருமதி. கெங்கைமுத்து வாத்தியாரம்மா, அவரின் சகோதரர்களான திரு.நடராசா வாத்தியார், திரு. ஏகாம்பரம் வாத்தியார் ஆகியோர் ஆசிரியர்களாக கடமையாற்றியதாகவும் கூறப்படுகின்றது. அவர்களுக்கான சம்பளத்தை சிங்கப்பூரில் நிலஅளவையாளராக இருந்த திரு.ஆ.நாகநாதர் அவர்களும் அவரது உறவினர்களும் வழங்கியதாகவும் செவிவழிச் செய்திகள் கூறுகின்றன. ஆரம்பத்தில் ஆறுமுகம் வித்தியாலயம் என்ற பெயருடன் 1916ஆம் ஆண்டு இயங்கியதாக கூறப்படுகிறது. அக்காலகட்டத்தில் தம்பாட்டியைச் சேர்ந்த சைவசமயப் பிள்ளைகளும் இந்தப் பாடசாலையிலேயே படிப்பதற்கு இணைந்து கொண்டனர் அதனால் மாணவர் எண்ணிக்கையும் அதிகரித்தது.

பின்னர் திரு.இராசா தில்லைநாதன் , திரு.க.விசுவலிங்கம் ஆகியோருடன் ஊர் மக்கள் சிலரும் சேர்ந்து பணம் சேகரித்து சுண்ணாம்புக் கட்டடம் ஒன்றினை அமைத்தனர். அரைவாசி ஓலையால் வேயப்பட்ட கொட்டிலாகவும் அரைவாசி சுண்ணாம்புக் கட்டடமாகவும் பாடசாலை இயங்கியது. 1924 ஆம் ஆண்டு சைவ வித்தியா விருத்திச் சங்கத்தின் தலைவராக இருந்த "இந்து போர்ட்" இராஜரத்தினம் அவர்களிடம் பாடசாலைப் பொறுப்பு ஒப்படைக்கப்பட்டது. அதன்பின்னர் ஆறுமுகம் வித்தியாசாலை என்னும் பெயருடன் இயங்கிய பாடசாலை கணேச கனிஷ்ட வித்தியாசாலை எனும் பெயருடன் இயங்க ஆரம்பித்தது. வேலணை மேற்கு திரு.தம்பு வாத்தியாருக்கு (சிவபூசை செய்பவர்) பின்னர் 1930ஆம் ஆண்டுகளில் வேலணையைச் சேர்ந்த திரு.கனகரத்தினம் வாத்தியார், திரு.சு.பொன்னுத்துரை வாத்தியார் போன்றவர்கள் தலைமை ஆசிரியர்களாக கடமையாற்றியுள்ளார்கள்.

1935ஆம் ஆண்டுகளில் மண்டைதீவைச் சேர்ந்த திரு.மாணிக்க வாத்தியார் இங்கு வந்து தலைமை ஆசிரியராக கடமையாற்றினார். இவர் நீண்ட காலமாக தலைமை ஆசிரியராக ஓய்வு பெறும் வரை சேவை செய்தார். இவருடன் இவரது துணைவியாரும் நாரந்தனையைச் சேர்ந்தவருமான திருமதி.கெங்கைமுத்து மாணிக்கம் அவர்களும் நீண்டகாலமாக ஓய்வு பெறும் வரை சேவை செய்தார். திரு.மாணிக்க வாத்தியார் தலைமை ஆசிரியராக இருந்தபோது மாணவர்களது ஒழுங்கு கட்டுப்பாடு ஆன்மீக உணர்வு கல்விமீது ஆர்வம் என்பனவற்றில் மிகுந்த அக்கறை செலுத்தப்பட்டதாக அவரிடம் கற்ற பழைய மாணவர்கள் இன்றும் பெருமையுடன் கூறுகின்றனர். புலம்பெயர்ந்து வாழும் பழைய மாணவர்களும் இவருடைய தலைமைத்துவப் பண்பை பெருமையாக பேசிக் கொள்கிறார்கள். இவரது துணைவியார் திருமதி.கெங்கைமுத்து மாணிக்கம் ஆரம்பக்கல்வி ஆசிரியராக இருக்கும் போது மேசைமீது மணலைப்பரவி மாணவர்கள் ஒவ்வொருவருக்கும் கைவிரலைப் பிடித்து எழுத்துக்களை எழுதப் பழக்கியமை பற்றி இப்போதும் அவரது பழைய மாணவர்களால் பேசப்படுகின்றது. "வாத்தியாரம்மா" என்று எல்லோரும் அவரை அன்பாக அழைத்தனர் அவர் வடக்கு நாரந்தனை மக்களின் அன்புக்கும் நன்மதிப்புக்கும் உரியவராக திகழ்ந்தார்.

1942ஆம் ஆண்டு காலப்பகுதியிலே அரசாங்கம் தனியார் நிறுவனங்களினால் நடாத்தப்படும் பாடசாலைகளை சுவீகரிக்கும் திட்டத்தை அமுல்படுத்தியது. அத்திட்டத்தின் கீழ் நாரந்தனை கணேச கனிஷ்ட வித்தியாசாலையும் உள்ளீர்க்கப்பட்டு அரசாங்க நிர்வாக கட்டமைப்பிற்கு உள்வாங்கப்பட்டது. இக் காலப்பகுதியில் சி.டபிள்யு.டபிள்யு.கன்னங்கரா அவர்கள் இலவசக் கல்விமுறைமையை அறிமுகம் செய்தார். இதன்விளைவாக தம்பாட்டி கிராம மக்களும் தமக்கென 1946ஆம் ஆண்டு ஆரம்பப் பாடசாலையை அரசாங்கத்தின் உதவியுடன் அமைத்துக் கொண்டனர். நாரந்தனை கணேச வித்தியாசாலையில் கல்வி பயின்ற தம்பாட்டி மாணவர்கள் தம்பாட்டி அரசினர் தமிழ் கலவன் பாடசாலையில் போய்ச் சேர்ந்து கொண்டனர். இதனால் மாணவர் எண்ணிக்கையில் வீழ்ச்சி ஏற்பட்டாலும் கல்வித் தரத்தில் மாற்றம் நிகழவில்லை என அறிய முடிகிறது.

நாரந்தனை வாழ் சைவசமய பெரியோர்களின் இறையன்பையும் புனிதத்தையும் உயர் எண்ணங்களையும் புரிந்து கொண்ட இறைவன் திருவுளங்கொண்டு கல்லுடைப்போர் கல் தோண்டும் போது பாடசாலைக்கு சற்றுத் தொலைவில் அதிசயமாக தான்தோன்றீஸ்வரியாக அம்மன் விக்கிரகம் கண்டெடுக்கப்பட்டது. அத்துடன் அவ்விடத்திலேயே கொட்டில் அமைத்து அம்மனை வழிபடலாயினர். நாரந்தனை வடக்கில் வசித்வர்களான திரு.ச.உலகநாதபிள்ளை, திரு.ஆ.கனகரத்தினம், திரு.க.ஈஸ்வரநாதபிள்ளை ஆகியோர் அம்மனுக்கு செவ்வாய், வெள்ளி ஆகிய தினங்களில் கற்பூர தீபாராதனை செய்து வந்தனர் 1951ஆம் ஆண்டு அருட் தெய்வமான அதிசய அம்பாளுக்கு நிரந்தர ஆலயம் அமைப்பது தொடர்பான கூட்டமும் நாரந்தனை கணேச கனிஷ்ட வித்தியாசாலையிலேயே இடம் பெற்றுள்ளது. இந் நிகழ்வுகள் யாவும் வடக்கு நாரந்தனை மக்களுக்கு சைவத்தையும் தமிழையும் சமூக கலாசார விழுமியங்களையும் வளர்ப்பதற்கு சாதகமாக அமைந்திருந்தது.

இவர்களின் பின்னர் பண்டிதர் திரு.கந்தையா கணபதிப்பிள்ளை அவர்கள் 1965ஆம் ஆண்டில் தலைமை ஆசிரியராக பொறுப்பேற்றார் இவர் பாடசாலை மீது மிகுந்த பற்றுடன் செயற்பட்டார். பாடசாலை மாணவர்களின் பெற்றோர்கள், நலன் விரும்பிகள், பழையமாணவர்கள் ஆகியோரை அழைத்து அவர்களுடன் கலந்துரையாடி பாடசாலை அபிவிருத்திச் சங்கத்தை உருவாக்கினார். அவர்களுடைய உதவியுடன் பாடசாலையின் பௌதீக வளங்களை பெற்றுக் கொள்வதற்கான நடவடிக்கைகளை மேற்கொண்டதன் பயனாக ஊர்காவற்றுறைத் தொகுதி பாராளுமன்ற உறுப்பினர் நவரத்தினம் அவர்களின் நிதி ஒதுக்கீட்டில் 80x20 அடி கொண்ட கட்டடத்தை கட்டுவித்தார். இக் கட்டிடத்தை அமைப்பதற்கு போதுமான நிலம் காணப்படவில்லை. இதனை அறிந்த திரு.தில்லைநாதர் அவர்கள் மேலும் 4 பரப்புக் காணியை இலவசமாக வழங்கி உதவினார். அத்துடன் மாணவர்களுக்கான குடிநீர் சுத்தமாகதாக இல்லாத காரணத்தால் திரு. தில்லைநாதர் அவர்களால் வழங்கப்பட்ட காணியின் கிழக்கு மூலையில் புதிதாக சிரமதானத்தின் மூலம் கிணறு ஒன்றை வெட்டுவித்துக் கட்டுவித்தார். இவ்வாறு பாடசாலையின் பௌதீக வளங்களை பெற்றுக் கொள்வதில் கண்ணும் கருத்துமாக செயற்பட்டார். அவர் தலைமை ஆசிரியராக செயற்பட்டாலும் கற்பித்தல் செயற்பாட்டிலும் தன்னை அர்ப்பணித்திருந்தார். தமிழ்மொழி, புவியியல், கணிதம் போன்ற பாடங்களைக் கற்பிப்பதில் சிறப்புத் தேர்ச்சி பெற்றவராகவும் இருந்தார். இவருடைய காலப்பகுதியில் உயர் கல்வித் தகைமையுடைய ஆசிரியர்களும் பயிற்றப்பட்ட ஆசிரியர்களும் கற்பித்தமையால் பாடசாலையின் கல்வித்தரம் உயர்வடைவதற்கு உறுதுணையாக அமைந்திருந்தது. மாணவர்களது வரவொழுங்கு,

ஒழுக்கம், கட்டுப்பாடு என்பவற்றில் மிக இறுக்கமாகச் செயற்பட்டார். அதனால் மாணவர்கள் கல்வியிலும் ஒழுக்கத்திலும் சிறந்த முறையில் வளர்க்கப்பட்டார்கள்.

மேலும் இவரது காலப் பகுதியில் முதலாம் வகுப்பு தொடக்கம் ஐந்தாம் வகுப்பு வரையுமே இருந்தது. படிப்படியாக 6,7,8,9,10 11ஆம் வகுப்பு வரையும் கல்விக் காரியாலயத்தின் அனுமதியைப் பெற்று பாடசாலையின் தரத்தை உயர்த்தி கணேச கனிஷ்ட வித்தியாலயம் என்ற நிலையில் இருந்து கணேச வித்தியாலயம் என பெயர் மாற்றம் செய்வித்தார். ஐந்தாம் வகுப்பு புலமைப்பரிசில் பரீட்சையில் திறமைச்சித்தி பெறுவதற்காக மாலை நேரங்களில் மேலதிக வகுப்புக்களை நடாத்தி வெற்றியும் கண்டார் இத்துடன் அவர் நின்று விடவில்லை. சமூகப் பணியிலும் சமயப்பணியிலும் ஈடுபட்டார். பாடசாலையில் சரஸ்வதி பூசை, கலைவிழா, பிரியாவிடை, விளையாட்டுப்போட்டி, என்பன போன்ற நிகழ்வுகளை நடாத்தி பாடசாலைச் சமூகத்துடனும் நெருக்கமான உறவைப் பேணிக்கொண்டார். தான்தோன்றி அம்மன் ஆலயத்தில் விழாக்கள் நடைபெறும்போது மாணவர்ளை பஜனையிலும் சமயச் சொற்பொழிவுகளிலும் பயிற்றுவித்து பங்கேற்கச் செய்தார். இவ்வாறு பாடசாலையின் வளர்ச்சி படிப்படியாக முன்னேற்றம் அடைந்தது.

1968ஆம் ஆண்டு பண்டிதர் திரு.க.கணபதிப்பிள்ளை அவர்களின் முயற்சியின் பயனாக மனோன்மணி பாலர் பாடசாலையும் ஆரம்பிக்கப்பட்டது. பாலர் பாடசாலையும் கணேச கனிஷ்ட வித்தியாலயமும் அருகருகே அமைக்கப்படடு ஒன்றிணைந்து செயற்பட்டது. பாலர் பாடசாலையின் ஆசிரியராக செல்வி.கருணாதேவி சிதரம்பரப்பிள்ளை அவர்கள் சிறந்தமுறையில் கடமையாற்றினார்.

பண்டிதர் திரு.க.கணபதிப்பிள்ளை அவர்கள் 1973ஆம் ஆண்டு ஓய்வு பெற்றுச் செல்ல திரு.செ.இராசதுரை அவர்கள் 1974 ஆம் ஆண்டு அதிபராக கடமையைப் பொறுப்பேற்றார். இவர் இப்பாடசாலையில் நீண்டகாலம் ஆசிரியராக கடமையாற்றிய அனுபவமுள்ளவர். பாடசாலையின் தேவைகளை நன்கு புரிந்தவர். 6,7,8,9,10,11 ஆம் வகுப்புக்கள் ஆரம்பிக்கப் பட்டபோது வகுப்பறைகள் பற்றாக்குறை ஏற்பட்டது. இதனைக் கருத்திற் கொண்டு ஊர்காவற்றுறை பாராளுமன்ற உறுப்பினராக இருந்த க.பொ.இரத்தினம் அவர்களின் நிதி ஒதுக்கீட்டின் மூலம் 80x20 அடி கொண்ட கட்டிடத்தை கட்டுவித்தார். அத்துடன் மலசலகூடம், 40x20 அடி கொண்ட விஞ்ஞானகூடம் என்பவற்றையும் கட்டுவித்தார். இவருடைய காலப்பகுதியில் பயிற்றப்பட்ட ஆரம்பக்கலவி ஆசிரியர்கள், கலை, விஞ்ஞான பட்டதாரி ஆசிரியர்கள், பயிற்றப்பட்ட ஆங்கில ஆசிரியர்கள், பயிற்றப்பட்ட கணித ஆசிரியர்கள், தொண்டர் ஆசிரியர்கள் என பல்வகைத் திறமைகளையுடைய ஆளணிவளம் காணப்பட்டமையால் கற்றல் கற்பித்தல் செயற்பாடுகளை மேம்படுத்துவதற்கு உறுதுணையாக இருந்தது. 1972ஆம் ஆண்டு கொண்டுவரப்பட்ட NCGE பரீட்சையில் 80% மான மாணவர்கள் சித்தியடைந்தார்கள். 1978, 1979 ஆம் ஆண்டுகளில் க.பொ.த.சாதாரண பரீட்சையில் 90% மான மாணவர்கள் சித்தியடைந்தனர். அவர்களில் 66% மானவர்கள் க.பொ.தஉயர் தரத்திற்கு தகுதி பெற்றார்கள்.

கல்வியில் மட்டுமல்லாது இணைப்பாடவிதானச் செயற்பாடுகளிலும் மாணவர்கள் பங்குபற்றி பரிசில்களையும், சான்றிதழ்களையும் பெற்றுள்ளனர். பாடசாலையில் நடாத்தப்படும் தமிழ்த்தினப்போடடி, விளையாட்டுப்போட்டி, பொதுஅறிவுப்போட்டி

போன்றவற்றிலும், வட்டார, மாவட்ட போட்டிகளிலும் பங்குபற்றி வெற்றி பெற்று பாடசாலைக்கு பெருமை சேர்த்துள்ளனர். பெற்றோர்தினம், நவராத்திரி, கலைவிழா, பிரிவுபசார விழா என்பன மிகச்சிறப்பாக கொண்டாடப்பட்டது. அதனைவிட 1976ஆம் ஆண்டு பொன்விழா வெகுவிமர்சையாகக் கொண்டாடப்பட்டது.

இவரது காலப்பகுதியில் ஆசிரியர்கள் தொழில் வாண்மை விருத்திக்காக ஆசிரியர் கலாசாலைக்குச் சென்று பயிற்சி பெற்றனர். ஆசிரியராக இருந்த திரு.வை.தியாகராசா அவர்கள் அதிபர் பதவி கிடைத்து அதிபராக இடமாற்றம் பெற்றுச் சென்றுள்ளார். திரு.சு.கலாதரன் சமூகக்கல்வி ஆலோசகராக பதவி உயர்வு பெற்றார். இவை யாவும் பாடசாலையின் வளர்ச்சியை எடுத்துக்காட்டுகின்றன. திரு.செ.இராசதுரை அவர்கள் அதிபராக மட்டும் செயற்படவில்லை நல்ல ஆசானாகவும் செயற்பட்டார். தமிழ், சைவசமயம், கணிதம், ஆசிரியர் இல்லாத பாடம் எதுவானாலும் கற்பிக்கும் ஆற்றல் உடையவராக காணப்பட்டார். மாணவர்களுடனும் ஆசிரியர்களுடனும் மிகவும் அன்பாக பழகும் தன்மையுடையவராக இருந்தமையால் பாடசாலையின் வளர்ச்சிக்கு அனைவரினதும் ஒத்துழைப்புக் கிடைத்தது. பெற்றோர், பழைய மாணவர் பங்களிப்பு மூலம் பாரதி சனசமூக நிலையம் பாடசாலைக்கு அருகாமையில் அமைக்கப்பட்டது. பாடசாலை அபிவிருத்திச் சங்கத்தின் செயலாளராக இருந்த அமரர் திரு.வே.நடேசபிள்ளை அவர்களின் தலைமையிலேயே பாரதி சனசமூகநிலையம் அமைக்கப்பட்டது.

திரு.செ.இராசதுரை அவர்கள் 15.04.1988 அன்று ஓய்வு பெற்றுச் செல்ல திரு.சு.கலாதரன் அவர்கள் அதிபர் பதவியை பொறுப்பேற்றார். அத்துடன் சமூகக்கல்வி ஆலோசகராகவும் செயற்பட்டார். இவருடைய காலப்பகுதியில் புதிய ஆசிரியர்களும் இப்பாடசாலைக்கு நியமனம் கிடைத்து வருகை தந்து கடமையாற்றினர். பாடசாலைக் கட்டமைப்பு மாற்றப்பட்டு கொத்தணிப்பாடசாலை அமைப்பு உருவாக்கப்பட்டது. ஊர்காவற்றுறை கொத்தணிப் பாடசாலையின் கீழ் 11 பாடசாலைகள் இயங்கின கொத்தணிப் பாடசாலைகளின் அதிபராக புனித அந்தோனியார் கல்லூரியின் அதிபர் திரு.S.A.G.இரட்ணராஜா அவர்கள் செயற்பட்டார்கள். உப அதிபராக திரு.சு.கலாதரன் அவர்கள் நியமிக்கப்பட்டார். பாடசாலையின் வளர்ச்சியில் பெரும் பங்காற்றினார் மாணவர்களின் ஓய்வு நேரத்தை பயனுள்ள வழியில் செலவிட பாடசாலை நூலகம் ஒன்றினை ஊர்மக்களின் உதவியுடன் உருவாக்கினார். பாடசாலைக்கென இலச்சினை ஒன்றினை உருவாக்க பழைய மாணவர், பெற்றோர் நலன் விரும்பிகள் ஆகியோரின் ஆலோசனையுடன் பாடசாலை இலச்சினையை உருவாக்கினார். கல்விக்கண்காட்சி , பிரியாவிடை நவராத்திரி , விளையாட்டுப் போட்டி. போன்ற நிகழ்வுகள் மிகக் கோலாகலமாக கொண்டாடி பாடசாலைச் சமூகத்தின் பெருமதிப்பையும், பாராட்டையும் பெற்றுக் கொண்டார். இவருடைய காலப்பகுதியில் திரு.நவரத்தினம் கேசுநாதன் அவர்களின் நிதி உதவியின் மூலம் பாடசாலைக்கு மின்சாரவேலைகள் செய்யப்பட்டது. மின் ஒளியில் நூலகத்தில் மாணவர்கள் கற்பதற்கு வசதியாக அமைந்திருந்தது. மாணவர்களின் கல்வியிலும் ஒழுக்கத்திலும் முன்னேற்றம் காணப்பட்டது. 1988.10.31ஆம் திகதி கட்டாய இடமாற்றம் காரணமாக இடமாற்றம் பெற்றுச் சென்றார்.

1988.11.01 தொடக்கம் திரு.சா.தியாகலிங்கம் அதிபராக பொறுப்பேற்றார். இவர் 1979ஆம் ஆண்டில் இருந்து ஆசிரியராக கடமையாற்றிய நீண்டகால அனுபவமுள்ளவர் இவருடைய

காலப்பகுதியில் உபஅதிபராக திருமதி.எ.பொன்றோஸ் செயற்பட்டார். 200இற்கும் மேற்பட்ட மாணவர்கள் கல்வி பயின்றனர். ஆசிரியர்களின் அயரா முயற்சியினால் மாணவர்களின் அடைவு மட்டம் அதிகரித்தது. தமிழ்த்தினப்போட்டி, விளையாட்டுப்போட்டி போன்றனவற்றிலும் வட்டார, மாவட்ட மட்டங்களில் நல்ல பெறுபேறுகளைப் பெறக்கூடியதாக இருந்து. இக்காலப்பகுதியில் பாடசாலை கட்டமைப்பு மாற்றம் அடைந்தது. அதனடிப்படையில் ஆரம்பக்கல்வி அபிவிருத்தித்திட்டம் பெற்றோரின் பங்களிப்புடன் ஆரம்பிக்கப்பட்டது. இக்காலகட்டத்தில் நாட்டில் ஏற்பட்ட யுத்த சூழ்நிலை காரணமாக இத்திட்டங்கள் யாவும் இடைநடுவில் கைவிடப்பட்டு ஊர் மக்கள் எல்லோரும் இடம் பெயர்ந்து வேறு இடங்களுக்குச் சென்று குடியேறினர்.

**இடப்பெயர்வின் பின் கணேச வித்தியாலயம்**

1991ஆம் ஆண்டு இடம் பெயர்ந்து ஊர்காவற்றுறையைச் சேர்ந்த 11 கொத்தணிப் பாடசாலைகளும் இணைந்து அமரர்.S.A.E.இரத்தினராஜா தலைமையில் யாழ்ப்பாணம் மத்திய கல்லூரியில் மாலை நேரப் பாடசாலையாக இயங்கின. பின்னர் சென்.ஜோன்ஸ் அக்கடமியில் இயங்கியது. யாழ் நகருக்கு அண்மையில் குடியேறிய மாணவர்களும் ஆசிரியர்களும் பாடசாலைக்கு சென்று கல்வி கற்றல் கற்பித்தல் செயற்பாடுகளை மேற்கொண்டனர். கொத்தணிப்பாடசாலைகள் 11உம் கூட்டாக இணைந்து செயற்பட்டன. இதன் பின்னரும் நாட்டுச்சூழல் காரணமாக மீண்டும் 1994ஆம் ஆண்டு இடம் பெயர்ந்து நாவற்குழிக்கு சென்று தற்காலிக முகாமில் இயங்கத் தொடங்கியது. அங்கு முகாம்களில் வாழ்ந்து கொண்டிருந்த நாரந்தனை பிள்ளைகளும் யாழ் குடாநாட்டின் பல பாகங்களிலும் குடியேறியிருந்த ஆசிரியர்களும் யுத்த சூழலிலும் பல்வேறு சிரமங்கள் மத்தியில் பாடசாலையை நடத்தினர் கணேச வித்தியாலயமும் தம்பாட்டி அரசினர் தமிழ்க் கலவன் பாடசாலையும் கூட்டாக செயற்பட்டமை குறிப்பிடத்தக்க அம்சமாகும். இரு பாடசாலை அதிபர்களும் ஆசிரியர்களும் கூட்டாக இணைந்து மாணவர்களின் கல்வி நடவடிக்கைகள், பாடசாலைச் சூழல் பராமரிப்பு, மாணவர் ஒழுக்கம் என்பவற்றில் கவனம் செலுத்தினர். முகாமில் இயங்கிய சூழ்நிலையிலும் மாணவர்களின் கல்விச் செயற்பாட்டிலும் இணைப்பாடவிதானச் செயற்பாட்டிலும் வட்டார, மாவட்ட போட்டிகளில் பங்குபற்றுவதற்குரிய பயிற்சிகளை வழங்கியதனூடாக மாணவர்கள் பரிசில்களையும் சான்றிதழ்களையும் பெற்றனர். அதிபர் திரு.சா.தியாகலிங்கம் அவர்கள் உயர் கல்விக்காக கற்கை லீவில் செல்ல திரு.கணேசதாசன் அதிபர் பதவியைப் பொறுப்பேற்றார்.

அதிபராக பொறுப்பேற்ற திரு.கணேசதாசன் அவர்களின் காலப்பகுதியிலும் இராணுவ நடவடிக்கை தொடர்ந்தது. பாடசாலையின் செயற்பாடுகளை முனனெடுக்க முடியாத நிலையில் இடப்பெயர்வு தொடர்ந்தது. விடத்தற்பளை, கெற்பலி என இடம் பெயர்வு காரணமாக பாடசாலையின் செயற்பாடுகளை முறையாக முன்னெடுக்க முடியாதநிலை காணப்பட்டது. எனினும் திரு.கணேசதாசன் அவர்கள் உடற்கல்வி ஆசிரியர் என்றபடியால் மாணவர்களின் உடல்உள சமநிலையை பேணக்கூடிய வகையில் பயிற்றுவித்து உடற்பயிற்சிப் போட்டிகளில் வட்டார, மாவட்ட மட்டங்களில் முதலிடங்களை மாணவர் பெற வழிப்படுத்தியுள்ளார்.

1996ஆம் ஆண்டு நாட்டுச் சூழல் ஓரளவு சுமூக நிலைமைக்கு திரும்ப சொந்த

இடங்களில் பாடசாலைகளை நடாத்தும்படி யாழ் வலயக் கல்விப்பணிப்பாளராக இருந்த அமரர் திரு.இ.சிவானந்தன் அவர்களின் பணிப்பின் பேரில் 1996ஆம் ஆண்டு யூன் மாதம் நாரந்தனை றோமன் கத்தோலிக்க தமிழ்க் கலவன் பாடசாலையில் தம்பாட்டி அரசினர் தமிழ்க் கலவன் பாடசாலையும், கணேச வித்தியாலயமும் கூட்டாக செயற்பட்டன. 1997இல் அதிபர் திரு.சா.தியாகலிங்கம் அவர்கள் சுகவீனம் காரணமாக தற்காலிக இடமாற்றம் பெற்றுச் செல்ல யா/நாரந்தனை றோமன் கத்தோலிக்க தமிழ்க் கலவன் பாடசாலை அதிபர் திரு.த.சத்தியதாசன் அவர்களின் கீழ் கணேச வித்தியாசாலை இயங்கிக் கொண்டிருந்தது. அதன் பின்னர் 1997ஆம் ஆண்டு சொந்த கட்டிடத்தில் இயங்க வேண்டும் என்ற கோரிக்கையின் பேரில் கணேச வித்தியாசாலை சொந்த கட்டிடத்தில இயங்க ஆரம்பித்தது. அப்போது திரு.க.குமரேசநாதன் அவர்கள் அதிபராக பொறுப்பேற்றார். கடமையேற்ற போது பழையமாணவர்கள், பெற்றோர்கள் நலன்விரும்பிகள் கிராம அலுவலர் திரு.க.சகாதேவன் பழையமாணவன் திரு.கோ.இளங்கோவன் போன்றவர்களின் கூட்டு முயற்சியினால் பாடசாலை திருத்த வேலைகள் செய்யப்பட்டு சமய ஆசாரப்படி சொந்தக் கட்டிடத்தில் கணேச வித்தியாலயம் இயங்கத் தொடங்கியது. அமரர் பண்டிதர் திரு.க.கணபதிப்பிள்ளை அவர்களின் புதல்வர் புலம்பெயர் நாட்டில் வசிக்கும் திரு.க.விஜயநாதன் அவர்களும் நிதியுதவி வழங்கியுள்ளார்.

ஆசிரியர்கள் மாணவர்கள் மிக்க மகிழ்ச்சியுடன் தங்களது கற்றல் கற்பித்தல் செயற்பாடுகளில் ஈடுபட்டனர். இணைப்பாடவிதானச் செயற்பாடுகள், சமயநிகழ்ச்சிகள் பரீட்சைகள், கோட்ட , வலயமட்ட போட்டிகள் என்பவற்றில் பங்குபற்றி சான்றிதழ்களையும் பரிசில்களையும் பெற்றனர். இந்த காலப் பகுதியில் அதிபர் திரு.சா.தியாகலிங்கம் அவர்கள் மீண்டும் இப்பாடசாலையிலேயே கடமையாற்ற வர அவரிடம் அதிபர் பதவியை ஒப்படைத்துவிட்டு திரு.குமரேசநாதன் இடமாற்றம் பெற்றுச் சென்றுள்ளார்.

08.07.1989 இல் மீண்டும் திரு.தியாகலிங்கம் அதிபராக கடமையைப் பொறுப்பேற்றார். இக்கால கட்டத்தில் தம்பாட்டி அரசினர் தமிழ் கலவன் பாடசாலையின் தரம் 9,10, 11ஐச் சேர்ந்த மாணவர்களும் இப்பாடசாலையிலேயே கல்வி கற்றனர். மாணவர்களின் கல்வியிலும், இணைப்பாடவிதானச் செயற்பாடுகளிலும் அக்கறையுடன் செயற்பட்டு தமிழ்த்தினப்போட்டி உடற்பயிற்சிப் போட்டி என்பவற்றில் மாணவர்களை பங்கு பெறச் செய்து கோட்டமட்ட, வலய மட்டங்களில் வெற்றி பெற்றுள்ளனர். 2004 ஆம் ஆண்டு க.பொ.த. சாதாரண பரீட்சைக்குத் தோற்றி தீவக வலயத்தில் 1-10 வரையுள்ள மாணவர் தொகை பிரிவில் முதலாம் இடம் பெற்றமைக்காக பாராட்டுக் கேடயம் கிடைத்தது. யாழ் மாவட்டத்தல் 1-10 வரையுள்ள மாணவர் தொகை பிரிவில் மூன்றாம் இடம் பெற்றமைக்கு பாராட்டு கிடைத்தது. தரம் ஐந்து புலமைப்பரிசில் பரீட்சையில் வெட்டுப் புள்ளிகளுக்கு மேல் பெற்று சித்தி அடைந்தனர். இவரது காலப்பகுதியில் யாழ் மாவட்ட பாராளுமன்ற உறுப்பினர் திரு.ந.மதனராஜா அவர்களின் நிதி ஒதுக்கீட்டின் மூலம் 20x20 அடி கட்டடமும் GTZ மூலம் பெண்களுக்கான மலசலகூடமும் அமைக்கப்பட்டது. மலசலகூடம் அமைப்பதற்கான காணியை திருமதி.நேசமணி கந்தையா அவர்கள் அன்பளிப்பாக வழங்கியுள்ளார். திருமதி.மகேஸ்வரி விசுவலிங்கம் அவர்கள் விளையாட்டு மைதானத்திற்கான காணியை அன்பளிப்பாக வழங்கியுள்ளார். இவ்வாறு பாடசாலையின் வளர்ச்சியில் பாடசாலைச் சமூகம் பங்கேற்றுள்ளனர். அதிபர் திரு.சா.தியாகலிங்கம் அவர்கள் இருபத்தெட்டு வருடங்கள் இப்பாடசாலையின் வளர்ச்சியில் பங்காற்றியுள்ளார்.

திரு.சா.தியாகலிங்கம் அவர்கள் ஓய்வு பெற்றுச் செல்ல திருமதி.பிறேமவல்லி சற்குணராசா அவர்கள் 2007ஆம் ஆண்டு கடமை நிறைவேற்று அதிபராக கடமையைப் பொறுப்பேற்றார். இவரது காலப் பகுதியில் தரம் ஐந்து புலமைப் பரிசில் பரீட்சையில் வெட்டுப் புள்ளிகளுக்கு மேல் புள்ளிகளைப் பெற்றும் 70 புள்ளிகளுக்கு மேல் புள்ளிகளைப் பெற்றும் மாணவர்கள் சான்றிதழ்களைப் பெற்றுள்ளனர். இதனால் முதன்மைப் பாடசாலை என்ற பெயரைப் பெற்றுள்ளது. க.பொ.த.சாதாரணப் பரீட்சையிலும் மாணவர்கள் சிறந்த பெறுபேறுகளைப் பெற்று உயர் கல்விக்காக சென்றுள்ளனர்.

பௌதிக வளங்களை மேம்படுத்தும் வகையில் மின்சார வேலைத்திட்டம். குளாய்நீர்வசதி. சமையலறை கணினி வசதி என்பன பழைய மாணவர்கள். பெற்றோர் நலன் விரும்பிகளின் உதவியுடன் மேற்கொள்ளப்பட்டது. திருமதி து. வசந்த குமாரியின் நிதியுதவின் மூலம் திருமதி.ந.தியாகராசா குடும்பத்தினரால் போட்டோபிரதி இயந்திரம்அன்பளிப்புச் செய்யப்பட்டது. திரு.கனகரத்தினம் ஆசிரியரால் கற்றல் உபகரணங்களும், நூலக வசதியும் செய்து கொடுக்கப்பட்டது. முன்னாள் அதிபர் அமரர் திரு.க.கணபதிப்பிள்ளை அவர்களின் குடும்பத்தினரால் மாணவர்களுக்கான ஊக்குவிப்புத்தொகையும் இணைப்பாடவிதானச் செயற்பாடுகளுக்கான நிதி உதவியும் வழங்கப்பட்டது. முன்னாள் ஆசிரியரும் கனடாவாசியுமான திருமதி.மலர்விழி ஜெயபாலன் அவர்களினால் கற்றல் உபகரணங்களுக்கான நிதி உதவி வழங்கப்பட்டது. முன்னாள் ஆசிரியர் திருமதி.தங்கமணி சிவனையா குடும்பத்தினர் மின்சார வேலைத்திட்டத்திற்கு நிதியுதவி வழங்கியுள்ளனர். பிரதேச செயலகம் உலக வங்கியின் உதவியுடன் விளையாட்டு மைதான புனரமைப்புக்காக உதவியுள்ளது. மேலும் பாடசாலையின் வளர்ச்சிக்கு தீவக கல்வி அலுவலர்களும். கோட்டக் கல்விப்பணிப்பாளரும் பங்களிப்புச் செய்துள்ளனர்.

இவருடைய காலப்பகுதியில் எமது மண்ணின் மைந்தரும் பாடசாலையின் பழைய மாணவருமான திரு.சி.சத்தியசீலன் அவர்களுக்கு வடமாகாண கல்வி அமைச்சின் செயலாளராக பதவி கிடைத்தமைக்காக பாராட்டுவிழா. கௌரவ முதலமைச்சர் திரு.விக்னேஸ்வரன் அவர்கள் வருகை தந்து மரம் நடுகையும் மரக்கன்றுகள் வழங்கும் நிகழ்வும். விளையாட்டுப் போட்டி. சிறுவர்தினம் . ஆசிரியர்தினம் நவராத்திரி என்பன போன்ற நிகழ்வுகள் மிகச் சிறப்பாக நடைபெற்றமை குறிப்பிடத்தக்கது.

2016ஆம் ஆண்டு பழைய மாணவர் சங்கமும் அங்குரார்ப்பணம் செய்யப்பட்டுள்ளது. அதிபரின் தலைமையின் கீழ் செயலாளராக திரு.கோ.கருணாகரனும். பொருளாளராக திரு.சி.தயாளனும் சங்க உறுப்பினர்களும் செயற்பட்டு வருகின்றனர். இவர்கள் பாடசாலையின் வளர்ச்சிக்கு பெரும் பங்காற்றுகின்றனர். நூற்றாண்டு விழாவை முன்னிட்டு வடமாகாணக் கல்வித்திணைக்களம் பெருமளவில் நிதியுதவி வழங்கியுள்ளது. இந் நிதியின் மூலம் பாடசாலையின் மீள்கட்டுமான பணிகள் இடம்பெற்றுள்ளன. புலம் பெயர்ந்து வாழும் பழைய மாணவர்கள் பாடசாலையின் வளர்ச்சிக்கு தங்களின் பங்களிப்பை நல்கி வருகின்றனர்.

இப்பாடசாலை கடந்த நூறு ஆண்டுகளாக கல்வி வளர்ச்சியில் பெரும்பங்காற்றி எமது நாட்டின் அபிவிருத்திக்கும் உலகில் முன்னணி வகிக்கும் நாடுகளான அமெரிக்கா. கனடா. அவுஸ்திரேலியா. பிரித்தானியா பிரான்ஸ். ஜேர்மனி போன்ற நாடுகளின் வளர்ச்சிக்கும் பங்கு ஆற்றிய. ஆற்றிக் கொண்டிருக்கின்ற பேராசிரியர்கள். கல்வியியலாளர்கள். வைத்தியர்கள். பொறியியலாளர்கள். கல்வி நிர்வாக உத்தியோகத்தர்கள். விஞ்ஞானிகள் வணிகவியல் துறையினர். அதிபர்கள். ஆசிரியர்கள் கலை இலக்கியப் படைப்பாளிகள் கணிதவியலாளர்கள் என பல துறையினரை உருவாக்க அடித்தளம் இட்டுள்ளமை பெருமைக்குரியதாகும்.

நிறைவுரை

**நம்பிக்கையுள்ள எதிர்காலம்.....**

நவீன விஞ்ஞான தொழில்நுட்பம் நாளுக்குநாள் வளர்ச்சியடைந்து வரும் இக்கால கட்டத்தில் மிகச்சிறிய கிராமமான எமது நாரந்தனை வாழ் சிறார்களின் எதிர்காலம் ஒளிமயமாக வேண்டும். நாட்டு யுத்தசூழலால் இடம்பெயர்ந்த மக்கள் மீண்டும் எமது மண்ணில் குடியேறி அவர்களின் பிள்ளைகளின் கல்வி நிலை கடந்த காலங்களைப் போல வளர்ச்சிபெற வேண்டும். உள்ளூரிலேயே ஆரம்பக்கல்வியை பெற வாய்ப்புக்கள் ஏற்படுத்திக் கொடுக்கப்பட வேண்டும் இதன்மூலம் பாடசாலையும் பாடசாலைச் சமூகமும் அபிவிருத்தி பெறவேண்டும். இவற்றையெல்லாம் கருத்திற் கொண்டு நாரந்தனை கணேச வித்தியாசாலையின் பழைய மாணவனும் பளை றோமன கத்தோலிக்க தமிழ்க் கலவன் பாடசாலையின் ஆசிரியருமான திரு.கோ.இளங்கோவன் அவர்கள் பாடசாலைக்கான முகநூலை ஆரம்பித்துள்ளார். தகவல்களை உடனுக்குடன் பகிர்ந்து பாடசாலையின் வளர்ச்சிக்கு பங்களிப்பு நல்குவீர்கள் என்ற நம்பிக்கையுண்டு.

நாரந்தனை கணேச வித்தியாலயத்தின வரலாற்று பதிவேடுகள் கடந்த முப்பது வருடகால யுத்தம் காரணமாக அழிவடைந்த நிலையில் காணப்பட்டாலும் செவிவழி வந்த தகவல்களின் அடிப்படையிலும். தேடிப் பெறப்பட்ட ஆவணங்களில் இருந்தும். நேர்காணல் மூலமும் வரலாறு தொகுக்கப்பட்டுள்ளது.

உசாத்துணைகள்


1. ஆக்கம் - திரு.ஆ.சபாரத்தினம் (2014)
2. பத்திரிகைச் செய்தி லக்ஸ்மன்
3. ஆக்கம் - திரு.க.சபாநாதன் (லண்டன்)
4. நாரந்தனை வரலாறு
5. ஆய்வுக்கட்டுரை - திரு.கு.கந்தரூபன்
6. ஆக்கம் - செல்வி. சி.கருணாதேவி
7. ஆக்கம் - ஆலய வரலாறு (நாரந்தனை ஸ்ரீ தான்தோன்றி மனோன்மணி ஆலயம்)
8. ஆக்கம் - திரு.செ.இராசதுரை (முன்னாள் அதிபர்)
9. ஆக்கம் - திரு.சு.கலாதரன் (முன்னாள் அதிபர்)
10. நேர்காணல் - திரு.சா.தியாகலிங்கம் (முன்னாள் அதிபர்)
11. நேர்காணல் திருமதி.பி.சற்குணராசா (அதிபர்)
12. நேர்காணல் - திரு.க.சகாதேவன் (ஓய்வு நிலை கிராம சேவகர். நாரந்தனை மக்கள் சங்க தலைவர்)



**செல்வி மேனகா கிருஷ்ணபிள்ளை**

பிரதி அதிபர்

யா/வேம்படி மகளிர் உயர்தர பாடசாலை

பழைய மாணவி. முன்னாள் ஆசிரியை



# நாரந்தனை கணேசாவின் உதயம்

தாபகர்களினால் எழுதப்படாத ஏதாவது ஆவணங்களோ சமகாலத்தில் மேற்கொள்ளப்பட்ட தொடர்பாடல் (Correspondance) பதிவுகளோ பெறப்படமுடியவில்லை. எனவே நாரந்தனை கணேச வித்தியாலயத்தின் ஆரம்பநாள் பற்றி அறிய சூழ்நிலைச் சான்று (Circumstantial Evidence) களிலேயே பெரிதும் தங்கி நிற்கவேண்டிய நிலையிலுள்ளோம்.

செ.இராசதுரை அவர்கள் ஆசிரியராக இருந்து அதிபராகப் பொறுப்பேற்றகாலம் அப்போது வட்டாரக் கல்வி அதிகாரியாக இருந்த திரு.வ.நடராசாவினால் தமது வட்டாரத்திலிருந்த 35 பாடசாலை நிர்வாகத்தினரும் தம் பாடசாலை வரலாற்றை எழுதுமாறு கேட்டுக்கொள்ளப்பட்டனர். 1920 ஆம் ஆண்டுக்குப் பின்னரான வரலாற்றையே அன்று இருந்த ஆவணங்களிலிருந்து கண்டுபிடிக்கக் கூடியதாக இருந்துள்ளது. இவற்றை விட முதலாசிரியராக வேலணை மேற்கைச் சேர்ந்த தம்பு கடமையாற்றியுள்ளமையும் அவருக்கு உதவியாகப் பாலர் வகுப்புக்கு நாரந்தனை வடக்கைச் சேர்ந்த வைரமுத்து கெங்கமுத்துவும் கடமையாற்றியுள்ளமையும் தெரியவந்துள்ளது. இந்தக் கெங்கமுத்து அம்மாதான் பின்னர் வாத்தியாரம்மா என்று அழைக்கப்பட்டவராவார். அன்று அவருக்கு 18 வயது பூர்த்தியடையாதபடியால் படிப்பிக்கத் தொடங்கிய பின்னரே இராமநாதன் கல்லூரிக்கு ஆசிரியர் பயிற்சிக்குச் சென்றுள்ளார்.

நாரந்தனை வடக்கைச் சேர்ந்த சரவணமுத்து பேரம்பலம் முதல் தொகுதி மாணவர் குழுவில் இருந்தவர். அவர் நினைவு மலர் 21.06.2014 இல் அச்சிட்டு வெளியிடப்பட்டது. அதன்படி அவர் 12.06.1903 இல் பிறந்து 22.05.2004இல் காலமாகியுள்ளார். முழு ஞாபகசக்தியுடன் கடைசிவரை வாழ்ந்தவர். வாக்கு மாறவில்லை. 2003இல் நூற்றாண்டு வாழ்ந்த முதியோர் எனப்

பிரதேச செயலகத்தில் அரசாங்க அதிபரால் பாராட்டப்பட்டுள்ளார். அவர் அன்று கணேச வித்தியாசாலைக்குப் போகும்போது கெங்கமுத்து அம்மா பாலர் பகுதியில் மணலில் 'அ', 'ஆ' எழுதிப் படிப்பித்துள்ளாராம். பின்னரே வேலணை மேற்கு வாசியான தம்பு உபாத்தியாயர் வருவாராம். அவர் திருக்கல் வண்டிலில் வந்து சுருட்டுக்கொட்டில் அருகில் தற்போது சங்கக் கடையடி என்று குறிப்பிடுபவர்) வண்டிலால் இறங்குவாராம். நீர்க்கேணி ஆவுரஞ்சிக்கல், சுமை தாங்கி இருக்குமிடத்தில் மாட்டை அவிழ்த்து வைக்கோல் போட்டு வயல்களுக்கூடாக நடந்து கணேசாவுக்கு வருவார் என்றும் கூறியுள்ளார். 1913 இல் பிறந்த பேரம்பலம் பள்ளிக்கூடத்தில் சென்றிருந்தால் 1916இல் சேர்ந்திருப்பார். 1985 இல் பிறந்த ம.தம்பு அங்கு வரும்போது 31 வயதுடையவராக இருந்தார் போலும். பிற்காலத்தில் மதுரை தமிழ்ச் சங்கப் பண்டிதரான அவருடைய கடைசி மகள் வேதநாயகி 1912இல் பிறந்தவர். அதன் பின்னரே தம்பு கணேச வித்தியாசாலைக்குப் படிப்பிக்க வந்துள்ளார்.

இப்பாடசாலை அமைக்கப்படவேண்டும் என்ற எண்ணக்கருவின் மூலகர்த்தா ஆகக் கருதப்படுபவர் மலேசியாவில் பெரும் புகழீட்டிய நில அளவையாளர் (Surveyor) ஆ.நாகநாதர் ஆவார். அவர் பற்றிய கட்டுரையொன்று அன்று வட்டுக்கேட்டை யாழ்ப்பாணக் கல்லூரியிலிருந்து வெளிவந்துகொண்டிருந்த மோர்ணிங் ஸ்ரார் (Surveyor) என்ற பத்திரிகையில் வெளிவந்துள்ளது. இதில் அவரைப் பற்றிக் குறிப்பிடும்போது அவர் தன்னைக் கற்பித்த பாடாசலைக்கு புகழ்சேர்க்கும் மாணவராக இருந்துள்ளார். என எழுதியுள்ளனர். ஊர்காவற்றுறையை யாழ்ப்பாணத்துடன் இணைக்கும் வடக்கு றோட் அவரது வழிகாட்டலிலேயே போடப்பட்டுள்ளது. அதன் பின்னரே மலேசியா சென்றுள்ளார்.

தான் மலேசியாவில் இருந்து கொண்டு தனது நெருங்கிய உறவினர்கள் ஊடாக இப்பாடசாலை உருவாக்கத்துக்கும் செயற்பாட்டுக்கும், நிதியுதவி வழங்கியுள்ளார். அதில் கல்வீட்டுச் செல்லப்பா என்று அழைக்கப்பட்ட இவருடைய மைத்துனர் முக்கியமானவர். தில்லைநாதர், விஸ்வலிங்கம், ஆகியோர் அடுத்த தலைமுறையைச் சேர்ந்தவர்கள் ஆவர். தில்லைநாதர் பாடசாலை அமைப்பதற்குத் தனது சொந்தக்காணியை நன்கொடையாக வழங்கியுள்ளார். விஸ்வலிங்கம் கட்டடம் அமைக்கும் பணியை முன்னெடுத்துள்ளார். விஸ்வலிங்கத்தின் மகள் மகேஸ்வரி தன்னுடைய சொந்தக் காணியை விளையாட்டு மைதானம் அமைப்பதற்காக நன்கொடையாக அண்மையில் வழங்கியுள்ளார்.

இவற்றை ஒப்புநோக்கும்போது இப்பாடசாலை 1916இல் ஆரம்பமானது என்ற கருத்து வலுவூட்டப்படுகின்றது. இப்பாடசாலையின் சிரேஷ்ட பழைய மாணவருள் ஒருவரான தற்போது கனடாவில் வதியும் திரு.அ.கனகரத்தினம் அவர்களும் இக்கருத்தை ஆதரிக்கின்றனர்.

முதல் ஆசிரியரான தம்பு பழைய தலைமுறை மகா பண்டிதராய் இருந்தும் கூடப் பயிற்றப் பட்ட ஆசிரியரல்ல. அன்று ஆக்கப்பட்ட புதிய சட்டங்களின் படி அரசாங்க மானிய உதவி பெறும் பாடசாலைகளில் அவர் அதிபராக இருக்கமுடியாத நிலை ஏற்பட்டது. மண்டைதீவைச் சேர்ந்த மாணிக்கம் பயிற்றப்பட்ட ஆசிரியர் ஆனபடியால் இந்துபோர்ட் (சைவ வித்தியா

விருத்திச் சங்க) நிர்வாகத்திற்குட்பட்ட கணேசாவில் முதல் உபாத்தியாயர் ஆக்கப்பட்டார் போலும். அவர் கெங்கமுத்து அம்மாவை மணம் செய்து நாரந்தனை வாசர் ஆயினார்.

இடையில் மாணிக்க உபாத்தியாரும் மனைவியும் சைவ வித்தியா விருத்திச் சங்கம் பரிபாலனம் செய்த பதுளைப் பாடசாலை ஒன்றுக்கு இடமாற்றம் பெற்றுச் சென்றுள்ளார். மாணிக்கம் ஆசிரியரின் தமையனாரான அன்றூ என்ற பெயருடையார் (திருநெல்வேலியில் மணம் செய்தவர்) தன் மனைவியுடன் கணேசாவுக்கு வந்த தலைமை உபாத்தியாயர் ஆனார். ஆனால் மாணிக்க உபாத்தியாயரும கெங்கமுத்து அம்மாவும் ஓராண்டின் பின் மீண்டும் மாற்றலாகி வந்தபோது அவ்விருவருமே மாற்றலாகிச் சென்றனர்.

வேலணை கிழக்கு கனகரத்தினம், காங்கேசு என்ற இரண்டு பயிற்சி பெற்ற ஆசிரியர்கள், இளைஞர்களாய்க் கணேசாவில் படிப்பித்துள்ளார்கள். பிறகு வேறு 'இந்து போர்ட்' பள்ளிக்குச் சென்றுவிட்டனர்.

மாணிக்கம் ஆசிரியர் வீடு செல்லும் வழியில் நீரில் மூழ்கி இறக்கும் வரையில் தலைமை ஆசிரியராய் இருந்துள்ளனர். கெங்கமுத்து அம்மா 60 வயதுவரை படிப்பித்து ஓய்வுபெற்றார்.

**ஆ.சபாரத்தினம்**

# ஆசிரியர் குழாம்



**இருப்பவர்கள் (இ-வ)** : செல்வி தி.பவிதா, திருமதி பி.பிரேமலதா, திருமதி ச.பிரேமவல்லி, திருமதி உ.சுமிதா, திருமதி வி.விஜயலக்ஷ்மி

**நிற்பவர்கள் (இ-வ)** : திரு.த.கபிலநாதன், திரு.லூ.அனிஸ்கரன்

**புகைப்படத்தில் இல்லாதவர்கள்** : திருமதி த.ராதா

# பாடசாலை அபிவிருத்திக் குழு



**இருப்பவர்கள் (இ-வ)** : திரு.த.கபிலநாதன், திருமதி பி.பிறேமலதா, திருமதி ச.பிரேமவல்லி, திருமதி உ.சுமிதா, திரு.இ.லூட் ஞானசேகரம்

**நிற்பவர்கள் (இ-வ)** : திருமதி சி.றோகிணி, திருமதி வி.சிந்துஜா, திருமதி யோ.சிவஜா

# பழைய மாணவர் சங்கம்



**இருப்பவர்கள் (இ-வ) :** திரு.சி.தயாளன், திருமதி த.பானுசா, திருமதி ச.பிரேமவல்லி, திருமதி வா.கபிலநாதன், திரு.கோ.கருணாகரன்

**நிற்பவர்கள் (இ-வ) :** திரு.க.குகப்பிரியன், திரு.க.ஜெயக்குமார், திரு.சு.கார்வண்ணன்

**புகைப்படத்தில் இல்லாதவர்கள்:** திரு.தி.மன்மதகாந்தன், திரு.அ.வத்சலன், திருமதி சதாநாயகி

# பாடசாலைச் சமூகம்



**இருப்பவர்கள் (இ-வ) :** திரு.க.கபிலநாதன், திரு.ஈ.திருக்கேதீஸ்வரன், திரு.தி.சுந்தரலிங்கம், திருமதி ச.பிரேமவல்லி, திருமதி சு.இராமலிங்கம், செல்வி.மே.கிருஸ்ணபிள்ளை, திருமதி.வி.விஜயலட்சுமி, திரு.க.சகாதேவன்

**நிற்பவர்கள் (இ-வ):** திரு.அ.விக்னராஜ், திரு.சு.கார்வண்ணன், திரு.கோ.சிவகாந்தன், திரு.ஞா.லூட் ஞானசேகரம், திரு.சி.தயாளன், திரு.லூ.திவாகரன், திரு.கோ.இளங்கோவன், திரு.க.ஜெயக்குமார், திரு.லூ.அனிஸ்கரன், திரு.க.குகப்பிரியன், திரு.கோ.கருணாகரன், திரு.த.சுவர்ணன், திருமதி.த.பானுசா, செல்வி.அ.யனுஜா



# அமரர் பண்டிதர் கந்தையா கணபதிப்பிள்ளை (வேலணை வாத்தியார்)

"கற்றவர்கள் உண்ணுங் கனியே போற்றி" என்று திருவாரூர் இறைவனைத் திருத்தாண்டகத்தில் போற்றுகின்றார் அப்பர் சுவாமிகள்.

"வாலறிவன் நற்றாள் தொழார் எனின்" - கற்றதனால் ஆய பயன் என்? என்பார் திருவள்ளுவர்.

கல்வியின் உயரிய பயன் இறை உணர்வு கைவரப் பெறுதல் என்பதுவும், கற்றுயர்ந்தார் என்போர் இறைவனைப் பற்றி நிற்போர் என்பதுவும் இவற்றினாற் பெறப்படும்.

அத்தகைய கற்றுணர்ந்த சான்றோர்கள் பலரைக் கண்டது யாழ்ப்பாணம். அதன் வடபால் சப்த தீவுகளுக்கும் நடுநாயகமாக துலங்கும் வேலணையூரில், சைவ வேளாண் குடியில் 1918 ஆம் ஆண்டு பங்குனித் திங்களில், ஒரு சின்னக் குழந்தை முன்னைத் தவத்தின் பயனாய் தோற்றம் பெற்றது. கமம் விளைத்து சிவம் தழைக்க வாழ்ந்த மக்களிடையே கதிரேசர் கந்தையா தையல் முத்து தம்பதியினருக்கு ஊரணி நீரென விளங்கப் பிறந்த அந்தப் பிள்ளை "கணபதிப்பிள்ளை" என நாமம் கண்டது.

ஞானவிநாயகனின் பெயரினை கண்ட பேற்றினாலோ என்னவோ கற்பதிலும் கற்றவழி நிற்பதிலும் அளவிலா ஆர்வம் கொண்ட அச்சிறுவன் வேலணை அமெரிக்கன் மிஷன் பாடசாலையில் ஆரம்பக் கல்வியினைப் பெற்று வளர்ந்தான். கல்வியினிடத்து உண்ணத் தெவிட்டாத உணர்வினைப் பெற்ற அவர் மெற்றிகுலேசன் பரீட்சையில் தேறி அறிவுக் கண்ணினைத் திறக்கின்ற ஆசிரியப் பணியினை வேலணை சரஸ்வதி வித்தியாலயத்தில் ஆரம்பிக்கலானார்.

நாரந்தனையில் சைவ வேளாண் குடியில் பிறந்த செல்லப்பா பார்வதிப்பிள்ளை தம்பதிகளின் சிரேஷ்ட புத்திரியான

தங்கம்மாவை 1944 ஆம் ஆண்டில் தமது வாழ்க்கைத் துணைவியாகப் பெற்று இல்லறம் நல்லறமாக நடாத்தி வந்தார்.

தமிழ் மேல் கொண்ட பற்றினால் விஷேட தமிழ் ஆசிரியர் பயிற்சியைப் பெறுவதற்கு 1946 - 1947 ஆம் ஆண்டுகளில் பலாலி ஆசிரியர் கலாசாலையில் சேர்ந்து விஷேட சித்தி பெற்றதும் புங்குடுதீவு சுப்பிரமணிய வித்தியாசாலையிலும், பின்னர் சரவணை நாகேஸ்வரி வித்தியாசாலையிலும் கல்வி புகட்டினார்.

வழங்க வழங்க மிகுக்கின்ற செல்வம் அறிவுச் செல்வமே என ஓர்ந்து, அதனைத் தேடித் தேடி வழங்குவதையே வாழ்வின் பயனாகக் கண்டார். அதன் பேறாக 1952 ஆம் ஆண்டு பண்டிதர் பரீட்சையிலும் தேறி தனது பணிக்கு வளம் சேர்த்துக் கொண்டதுடன், திருநெல்வேலி முத்துத்தம்பி வித்தியாலயத்தில் மேல்வகுப்பு மாணவர்களுக்கு தமிழ் இலக்கண இலக்கியங்களை தொடர்ந்து ஏழு வருடங்கள் கற்பித்து வந்தார். கற்றலிற் சுகமும் கற்பிப்பதில் இன்பமும் காண்கின்ற ஆசானாக விளங்கிய தன்மையினால், "நான் பண்டிதர் கணபதிப்பிள்ளையின் மாணவன்" என்று பெருமை பேசுகின்ற ஒரு சமூகத்தை தமது எச்சமாகப் பெற்றார். அன்னாரிடம் தமிழ் கற்ற மாணவர்கள் இன்றும் அவரது பேச்சு வன்மையையும் கல்வி கற்பிக்கும் ஆற்றலையும் வியந்து போற்றி வருகின்றனர்.

கற்றலில் கண்ட சுகத்தை மேலும் சுவைக்க 1960 ஆம் ஆண்டில் கலை முதற்தேர்வுப் பரீட்சையில் தோற்றி சித்திபெற்றதுடன், 1964 ஆம் ஆண்டில் அதிபர் சேவை போட்டிப் பரீட்சையிலும் தோற்றி சித்தியடைந்தார். இதைத் தொடர்ந்து கரம்பன் சண்முகநாதன் மகாவித்தியாலயத்தில் உபஅதிபராக நியமிக்கப்பட்டார்.

பணியின் இன்னொரு அம்சமான பாடசாலைகளின் அபிவிருத்தியிலும் ஆர்வத்தோடு ஈடுபட்டு, பல பாடசாலை மாணவர்களும் அவைசார்ந்த சமூகங்களும் வியத்தகு முன்னேற்றம் காண உழைத்தார். தனது புகுந்த கிராமத்திற்கு தன்னாலான பணியைச் செய்யும் பொருட்டு 1965 ஆம் ஆண்டு முதல் நாரந்தனை கணேச கனிஷ்ட வித்தியாலயத்திற்கு இடமாற்றம் பெற்று அதிபராகக் கடமையேற்றார்.

ஒன்பது வருடங்களுக்கு மேலாக, நாரந்தனை கணேச கனிஷ்ட வித்தியாலயத்தின் அதிபராகவும், சமூகசேவகராகவும் அவர் ஆற்றிய பல பணிகளின் விளைவே அப்பகுதி மக்களின் சமூக பொருளாதார முன்னேற்றமாக உருப்பெற்றது என்றால் அது மிகையாகாது. பாதி ஓலையினாலும் பாதி ஓட்டினாலும் வேயப்பட்டிருந்த கட்டிடத்தில் இயங்கி வந்த பாடசாலையை, மேலும் காணிகளைப் பெற்று அறைகளுடன் கூடிய இரண்டு கட்டிடங்களாக விசாலித்து மாணவர்கள் தொகையையும் ஆசிரியர்கள் தொகையையும் இரட்டிப்புச் செய்த பெருமை பண்டிதர் கணபதிப்பிள்ளை அவர்களையே சாரும். அரிவரி முதல் ஐந்தாம் வகுப்பு வரை இருந்த வகுப்புக்களை தான் ஓய்வு பெறும்போது கல்வி பொதுத் தராதர சாதாரண வகுப்புவரை பாடசாலையைத் தரம் உயர்த்தி, மாணவர்கள் உயர்கல்வியை உள்ளூரிலேயே பெற்றிட வழியமைத்தார்.

நாரந்தனைப் பலநோக்குக் கூட்டுறவுச் சங்கத்தின் வளர்ச்சிக்குப் பெரும் பங்காற்றியதோடு, அது நிரந்தரக் காணி, கட்டிடம், சந்தைப்படுத்தும் நிலையம் என்ற வளங்களைப் பெறவும் காரணகர்த்தாவாக விளங்கினார். வறுமை ஒழிப்புப் பணியின் மற்றொரு அம்சமாக

நாரந்தனைக் கிராமத்திலே ஒரு நெசவு நிலையம் அமைவதற்குத் தூண்டுகோலாக இருந்து, பெண்களுக்கான வேலை வாய்ப்பு, சுயசம்பாத்தியம், தன்னம்பிக்கை என்பவற்றின் வளர்ச்சிக்கு பெரிதும் உதவினார்.

வேலணை மத்திய கல்லூரி தீவுப்பகுதியின் முதற்தர கல்லூரியாக மிளிரவேண்டும் என்ற அவாவினால் உந்தப்பட்டு ஆக்கபூர்வமான பல ஆலோசனைகளைப் பெற்றோர் ஆசிரியர் சங்கத்தினூடாக வழங்கி அதன் மேம்பாட்டிற்காக உழைத்தார். ஆசிரிய சமூகத்திற்கு இழைக்கப்படும் அநீதிகளைக் கண்டித்து இலங்கைத் தமிழர் ஆசிரியர் சங்கத்தின் செயற்குழு உறுப்பினராகச் சேர்ந்து போராட்டங்கள் நடாத்தி வெற்றியும் கண்டார்.

எந்தப் பணியையும் அதன் பயன்பாடு கருதி முன்னின்று உழைத்து வெற்றி காண்பதில் பெருமிதமும் - அத்தகைய பணிகளிலேயே நிறைவும் கண்டு, வாழ்ந்த பொழுதெலாம் பயனுற வாழ்ந்தார். அவர் கடமை உணர்ச்சியும், செயற்றிறனும், நீதி நியாயத்தைப் போற்றும் திறம்பாடும் வாய்ந்த ஆசிரியர்.

"உள்ளுவதெல்லாம் உயர்வுள்ளும்" பண்போடு வாழ்ந்த பயனோ யாதோ, கல்லுடைப்போர் கல் தோண்டும்போது, நாரந்தனை வடக்கில் அதிசயமாய் வந்துதித்த தான்தோன்றி மனோன்மணி அம்மன் திருப்பணியிலும் அவர் மனம் செல்வதாயிற்று. தொழில் நிமித்தம் திருநெல்வேலி முத்துத் தம்பி வித்தியாலயத்தில் கற்பிக்கும் போது மூன்று வருடங்கள் யாழ்ப்பாணம் வண்ணார்பண்ணையில் குடும்பத்துடன் இருந்தபோதும், வார இறுதி நாட்களில் தனது விவசாயத்தைப் பார்வையிட வருவதுடன், தான்தோன்றி அம்மனுக்கு ஓர் ஆலயம் அமைத்து கும்பாபிஷேகம் நிறைவுறச் செய்வதற்கு தனது பாடசாலை தவிர்ந்த ஓய்வு நேரத்தை முழுமனதோடு ஈடுபடுத்தினார். 1958 ஆம் ஆண்டு தனது நாற்பதாவது வயதிலே தான்தோன்றி மனோன்மணி அம்மனுக்கு கும்பாபிஷே கத்தை முன்னின்று நடாத்தும் பெரும் பேற்றினையும் பெற்றார். "வஞ்சமற்ற தொழில் புரிந்துண்டு வாழும் மாந்தர் குலதெய்வமாவாள்" என்று சரஸ்வதியைப் பாடினான் பாரதி. அது போல மனோன்மணி அம்மன் பண்டிதருக்குக் குலதெய்வமாக விளங்கிய பெருங்கருணை என்னென்பது!

ஆசிரியத் தொழிலும், விவசாயமும், சமூகத் தொண்டும் செய்துகொண்டு தனது இல்லறத்தையும் நல்லறமாக ஏழு ஆண் பிள்ளைகளையும் மூன்று பெண் பிள்ளைகளையும் பெற்று இனிதே நடாத்திவந்தார். அன்னாரது மக்களும் மருமக்களும் பொறியியளாளர்களாகவும், கணக்காளர்களாகவும், விரிவுரையாளர்களாகவும் தொழில் புரிவது அவர் ஆற்றிய தொண்டின் பயனே.

**க.சபாநாதன்**
பொறியலாளர்
அவுஸ்திரேலியா



# பாடசாலை பற்றிய வரலாற்று நோக்கு

நாரந்தனை கணேச வித்தியாலயத்திற்கு 1916ஆம் ஆண்டு திரு. ஆறுமுகம் நாகநாதர் அவர்களால் காணி வழங்கப்பட்டு ஓலைக்கொட்டிலில் பாடசாலை இயங்கிக் கொண்டிருந்தது. திரு.தம்பு தில்லைநாதர், திரு.விசுவலிங்கம் ஆகியோர் ஊக்கமெடுத்து 1920ஆம் ஆண்டு 40x30 அடி கொண்ட சுண்ணாம்புக் கட்டிடமாக்கினார்கள். அப்பொழுது தலைமை ஆசிரியராக வேலணையைச் சேர்ந்த தம்பு வாத்தியார் (சிவபூசை செய்பவர்) கடமையாற்றிக் கொண்டிருந்தார். கெங்கைமுத்து வாத்தியாரம்மா இளம் உதவி ஆசிரியராக கடமை செய்தார். இக்காலப்பகுதியில் கட்டிடம் கட்டுவதற்கும் ஆசிரியர்களுக்கான சம்பளம் வழங்குவதற்கும் சிங்கப்பூரில் வாழ்ந்த எமது ஊர் பெருமக்கள் காசு வழங்கினார்கள். இந்தப் பள்ளிக் கூடத்தில் நான் 6 ,7 ஆம் வகுப்பு படிக்கும் வேளையில் பெரிய சம்பவ திரட்டுப் புத்தகத்தில் (Log book) முதலாம் பக்கத்தில் 01.10.1924 இல் "இந்து போர்ட்" இராசரத்தினம் அவர்கள் இந்தப் பாடசாலையைப் பொறுப்பேற்பதாக எழுதியிருந்ததை வாசித்தேன். பொறுப்புக் கொடுத்தது யார். பொறுப்பான ஆசிரியர் யார் இருந்தார் எனத் தெரியவில்லை. நான் 2ஆம் 3ஆம் வகுப்பு படிக்கும் போது கெங்கமுத்து வாத்தியாரம்மாவின் சகோதரர்கள் திரு.சு.நடராசா, திரு.சு.ஏகாம்பரம் ஆகியோர் ஆசிரியர்களாக கல்வி கற்பித்தார்கள். அவர்களின் ஆசிரியர் கல்வித்தரம் எனக்குத் தெரியவில்லை. கெங்கைமுத்து வாத்தியாரம்மா 1925 இற்கு பின்னர் இராமநாதன் கல்லூரியில் பயிற்சி பெற்று பயிற்றப்பட் ஆசிரியராக வந்து சேர்ந்தார். அதன் பின்னர் வேலணையைச் சேர்ந்த சு.பொன்னுத்துரை என்பவர் தலைமை ஆசிரியராக 1930களில் கடமையாற்றினார். 1935களில் மண்டை தீவைச் சேர்ந்த மாணிக்க வாத்தியார் இங்கு வந்து தலைமை ஆசிரியராக கடமையாற்றினார். அத்தோடு வாத்தியாரம்மாவையும்

திருமணம் செய்தார்.1940களின் பின் அவர்கள் இருவரும் இடமாற்றம் பெற்று வேறு பாடசாலைக்குச் சென்றார்கள்.

பின் மண்டை தீவைச் சேர்ந்த அன்று வாத்தியார் (கணபதிப்பிள்ளையும் மனைவியும்) கடமையேற்றார்கள். இவர் இரண்டு வருடம் இருந்தார்களோ தெரியாது. பின் தம்பாபிள்ளை வாத்தியார் தலைமை பொறுப்பை ஏற்றார். அதன்பின் மயிலிட்டியைச் சேர்ந்த இராமலிங்கம் இரண்டு வருடம் கடமை செய்தார். 1935ஆம் ஆண்டு நம்மூர் சிதம்பரப்பிள்ளை கந்தையா பயிற்றப்பட்ட ஆசிரியராக ஆங்கிலத்தையும் கற்பித்தார். அவர் விசுவலிங்கத்தின் மகனும் கேம்பிறிஜ் பல்கலைக்கழகத்தில் கற்றவருமாவார் பின்னர் கரம்பன் சண்முகநாதனுக்கு மாறிவிட்டார். 1939ஆம் 1940ஆம் ஆண்டுகளில் இன்னோர் அவரோடு படித்த கந்தையா வாத்தியார் (கேம்பிறிஜ் பல்கலைக்கழகம்) கரம்பன் சண்முகநாதனுக்கு மாறி வந்தார். அவர் 1942 ஆம் ஆண்டுகளில் வருடப்பிறப்பு முதல் பெரியபுராண படலம் இரவிலே 3 -4மாதம் வரை நடத்தினார். அதற்கு பயன் சொல்ல சரவணை, வேலணை மேற்கு புராணம் கற்ற சோமசுந்தரம், யாழ்ப்பாணம் மு.மயில்வாகனம் வேலணை மேற்கு தம்பு வாத்தியார் , நாகலிங்கம் வாத்தியார் இராசையா வாத்தியார், பேரம்பலம் வாத்தியார், சிறப்பு நாட்களில் வண்டில் கட்டி வருவார்கள். கடைசி நாள் புராணபடலம் முடிந்து பெரிய விழாவாக கந்தையா வாத்தியார். இந்தப் பள்ளிக்கூடம் 8ஆம் வகுப்புவரை இயங்கியது. அப்போது தம்பாட்டி பிள்ளைகளும் இங்கே வந்து கற்றனர் ஒரு பிள்ளைக்கு  நான்கு சதமாகக் கொடுத்து டதிய உணவாக சோறு கறி சமைத்துக் கொடுத்தார்கள். சமைப்பதற்கு சமையலறையும் கட்டிக் கொடுத்தார்கள். இந்தப் பள்ளிக்கூடம் 1945,1946 ஆம் ஆண்டு இலவசக்கல்வி வரும் வரை தம்பாட்டி பிள்ளைகளும் வந்து 200 பிள்ளைகளுடன் இயங்கியது. 1942, 1943 ஆண்டுகளில் மாணிக்க  வாத்தியாரும் மனைவியும் வேறு பாடசாலையிலிருந்து வந்து இந்தப்பாடசாலையைப் பொறுப்பேற்றார்கள். 1945ஆம் ஆண்டு கார்த்திகை மாதம் முதலாம் திகதி ஆங்கில இலசவக்கல்வி ஆம்பிக்க 5ஆம் வகுப்போடு தமிழ்ப்பாடசாலைகள் நின்று விட்டன. 6ஆம் வகுப்பிற்கு மேல் ஆங்கிலப்பாடசாலையை நாடின. 1946ஆம் ஆண்டுகளில் தம்பாட்டியில் ஒரு பாடசாலை தொடங்க தம்பாட்டி பிள்ளைகள் அங்கேயே கற்றார்கள். எமது ஊர்ப்பிள்ளைகளும் ஆங்கிலப் பாடசாலையை நாடினர். இதனால் எமது பாடசாலை வீழ்ச்சியுற்றது. ஆனாலும் இப்பொழுதும் இயங்கி வருகிறது.

1942ஆம் ஆண்டு எமது பாடசாலைப் பிள்ளைகள் ஆங்கிலம் கற்க வெளியில் போக நான் 8Km வகுப்பிற்கு சரவணை நாகேஸ்வரி வித்தியாசாலையில் போய் சேர்ந்தேன். 1960ஆம் ஆண்டு மாணிக்க வாத்தியார் இறைபதம் எய்த வேறொரு புங்குடுதீவு வாத்தியார் தலைமை ஆசிரியராக பணிசெய்தார். 1962இல் அவர் இடமாற்றம் பெற்றுச் செல்ல நம்மூர் பண்டிதர் கணபதிப்பிள்ளை வாத்தியார் கரம்பன் சண்முகநாத வித்தியாசாலையில் இருந்து வந்து தலைமை ஆசிரியராக பொறுப்பேற்றார். பாடசாலைக் கட்டிடம் உவைந்து பழுதடைய சரியில்லை என்று ஊர்காவற்றுறை பாராளுமன்ற உறுப்பினர் நவரத்தினம் அவர்கள் இப்பாடசாலைக்கு காசு ஒதுக்கி கொடுக்க பண்டிதர் கணபதிப்பிள்ளை வாத்தியார் பொறுப்பேற்று 80x20அடி கட்டிடத்தை உருவாக்கினார். இதற்கு முன்னர் இருந்த காணி போதாது என்று திரு.தில்லைநாதர் அவர்கள் தனது 4 பரப்புக் காணியை இலவசமாகக்

கொடுத்து உதவினார். இப்பொழுது காணி 12 பரப்பாகும். அப்பொழுதிருந்த கிணற்று நீர்சரியில்லை என்று கூடித் தீர்மானித்து புதுக் கிணறொன்றை திலலைநாதரால் வழங்கப்பட்ட காணியின் கிழக்கு மூலையில் சிரமதான முறையில் வெட்டி கட்டப்பட்டது. 1967ஆம் ஆண்டு நானும் இவ்வூர் கனகரத்தினம் வாத்தியாரும் உதவி ஆசிரியர்களாக வர 6ஆம் 7ஆம் வகுப்பை வைப்பதற்கு அனுமதி எடுத்து இவ் வகுப்பை உருவாக்கினார். இவர்கள் மாறிப் போனாலும் புதிய புதிய ஆசிரியர்கள் வந்து சேர்ந்தார்கள். 1973இல் பண்டிதர் கணபதிபிள்ளை அவர்கள் ஓய்வு பெற 1974ஆம் ஆண்டு நான் (செ.இராசதுரை) உயர் பதவி பெற்று அதிபர் பதவியை பொறுப்பேறறு நடாத்தினேன் என்னுடைய காலப்பகுதியில் தரம் 6,7,8 வரை தரம் உயர்த்தப்பட்டது. வகுப்புக்களை நடாத்துவதற்கு இடம் போதாமையால் ஊர்காவற்றுறை பாராளுமன்ற உறுப்பினர் திரு.கா.பொ.இரத்தினம் அவர்கள் காசு ஒதுக்கி கொடுக்க 80x20அடி கட்டடங்களையும், மலசலகூடங்களையும் கட்டுவித்தேன். பின்பு 40x20 அடி விஞ்ஞானகூடத்தையும் கட்டுவித்தேன். 1872ஆம் ஆண்டு NCDE என்ற பரீட்சைக்கு தோற்றி 80% மான மாணவர்கள் சித்தியடைந்தார்கள். 1978, 1979 ஆம் ஆண்டுகளில் எமது மாணவர்கள் 90% மானவர்கள் க.பொ.த சாதாரண பரீட்சையில் சித்தியடைந்து க.பொ.த உயர்தரம் படிக்க தகுதி பெற்றார்கள்.

1962இல் எமது பழைய மாணவி திருமதி.கண்ணம்மா சிவனையா (தங்கமணி ரீச்சர்) கடமை ஏற்று ஓய்வு பெறும்வரை இப்பாடசாலையிலேயே கற்பித்தார். மற்றும் திருமதி. பொன்றோஸ் எலியாஸ் , திருமதி.டெஸ்சி புஸ்பம் மனுவேற்பிள்ளைஆங்கில ஆசிரியர்), ஆசிரியர் அன்னலிங்கம் வசந்தா, திருமதி.நடனாஈஸ்வரி.நடேசபிள்ளை (விஞ்ஞான ஆசிரியர்) திருமதி.பே.வாதவாரா(கணிதம்) திரு.அன்ரனிப்பிள்ளை பயிற்றப்பட்ட ஆங்கில ஆசிரியராக வந்து சேர்ந்தார். திரு.சா.தியாகலிங்கம் பயிற்றப்பட்ட கணித ஆசிரியராக கரம்பனில் இருந்து வந்து சேர்ந்தார். இவர்கள் யாவரும் பாடசாலை வளர்ச்சிக்கு ஆக்கமும் ஊக்கமும் கொடுத்தார்கள். எமது பாடசாலையில் கல்வி பயின்றவர்கள் பொறியியலாளராக, வைத்தியர்களாக, அதிபர்களாக, ஆசிரியர்களாக விஞ்ஞானப் பட்டதாரிகளாக, விவசாய டிப்ளோமாதாரிகளாக உதவி அரசாங்க அதிபராக வணிகப்பட்டதாரிகளாக விளங்குகிறார்கள். எமது பாடசாலை மாணவர்கள் சிலர் தொண்டர் ஆசிரியர்களாக பணியாற்றி நிரந்தர ஆசிரியர்களாக பணி செய்கிறார்கள். பருத்தியடைப்பைச் சேர்ந்த செல்வன்.சி.தயாளன் சங்கீத பூசண பட்டம் பெற்றவர். எமது பாடசாலை மாணவர்கள் வட்டார பாடசாலைப் போட்டிகளில் 1ஆம்,2ஆம் தரத்தைப் பெற்றார்கள். எமது பாடசாலையில் பிரியாவிடைகள், பெற்றோர் ஆசிரியர் சங்க கூட்டங்கள், விழாக்கள், விளையாட்டு விழாக்கள் கலைவிழாக்கள் என்பன நடைபெறுகின்றன.

எமது பாடசாலைக்கு நவரத்தினம் கேசுநாதன் 1988ஆம் ஆண்டு மின் இணைப்புச் செய்து தந்தார். நாட்டு நிலைமை காரணமாக மின் இணைப்புக்கள் அழிந்து விட்டன. செல்வி புண்ணியவதி சிதம்பரப்பிள்ளை (தமிழ் பயிற்சி) 1985ஆம் ஆண்டு கடமையாற்றினார். திரு.வை.தியாகராசா என்பவர் 1977ஆம் ஆண்டுவரை உதவி அதிபராக கடமையாற்றி பின் சுருவில் பாடசாலைக்கு அதிபராக சென்றுள்ளார். செல்வி சுந்தரம் வசந்தமாலா ஆரம்பக்கல்வி ஆசிரியராக கடமையாற்றி 1980 வரை கற்பித்து வந்தார். திரு.

சுந்தரம்பிள்ளை கலாதரன் (BA, Dip.in Ed) 1984இல உதவி ஆசிரியராக கடமை ஏற்றார். அவர் முதன்மை ஆசிரியராகவும்(சமூகக்கல்வி) கடமை புரிந்தார். நான் 1988.04.16 இல் ஓய்வு பெறும் போது திரு.சு.கலாதரன் அதிபராக கடமை ஏற்றார். அவர் பின்பு வேலணை சைவப்பிரகாச வித்தியாசாலைக்கு அதிபராக இடமாற்றம் பெற்றுச் செல்ல திரு. சா.தியாகலிங்கம் அதிபராக கடமையாற்றினார். அவர் உதவி ஆசிரியராக 20ஆண்டுகளும் அதிபராக 10 ஆண்டுகளும் இப்பாடசாலையில் சேவை செய்தார். கிராம மக்களுக்கு சேவை செய்து மதிப்புக்குரியவரானார். பாடசாலை இராணுவ நடவடிக்கையால் பல இழப்பீடுகளை கடந்து யாழ் நகரில் சில சில பள்ளிக்கூடங்கள் மாறி மாறி நடைபெற்றது. 1999ஆம் ஆண்டு பழைய இடத்திற்கு கொண்டுவரப்பட்டு செல்வி.பிமோவல்லி கனகரட்ணம் அவர்களால் பொறுப்பேற்கப்பட்டு நடைபெறுகிறது. இவர் இப் பாடசாலையின் பழைய மாணவியாவார். இப்பாடசாலையின் பின்னூட்டலாக பக்கத்தில் பாலர் பாடசாலை இயங்கியது. இதனை செல்வி சிதரம்பரப்பிள்ளை கருணாதேவி அவர்கள் நடாத்தினார்கள். அவர் பாடசாலையைத் திறம்பட நடத்தினார். இதற்கு முகாமையாளராக திரு.நடேசபிள்ளை ஆசிரியரும் திரு. விஸ்வநாதன் ஆசிரியரும் இருந்தார்கள்.

கணேச வித்தியாலயத்தின் நூலகத்திற்கு வசதிக்கட்டணத்தில் சில நூல்கள் பெற்றுக் கொடுக்கப்பட்டன. ஆங்கில அகராதி, தமிழ் அகராதி, திருக்குறள் எனும் பல நூல்கள் பெற்றுக் கொடுக்கப்பட்டன.செல்வி.முத்தையா தனபதி அவர்கள் ஆரம்ப பயிற்றும் ஆசிரியராக தன்னுடைய நூல்களை வழங்கினார். நானும் சில நூல்களை வழங்கினேன். விளையாட்டு உபகரணங்களையும், உதைபந்து கரப்பந்துவலை முதலியவற்றையும் அரசாங்கம் வழங்கியது.

**செ. இராசதுரை**
முன்னாள் அதிபர்
யாழ்/ நாரந்தனை கணேச வித்தியாலயம்



# நான் பெற்ற பாக்கியம்

ஸ்ரீ தான்தோன்றி மனோன்மணி அம்பாள் திருத்தலத்துக்கு, எனது தாயாரின் நேர்த்திக் கடனை நிறைவேற்றுவதற்காகச் சில நாட்கள் சென்று வந்ததையும் வழியில் எனது வகுப்புத் தோழன் கோபாலசிங்கத்துடன் உரையாடி வந்ததையும் தவிர, வடக்கு நாரந்தனைக்கும் எனக்கும் 1978 வரை எந்தத் தொடர்பும் இருக்கவில்லை.

ஆனால் முற்பிறப்பினால் செய்த தவப் பயனால் எனக்குப் பெறுதற்கரிய திருக்கோவிற் திருத்தொண்டு செய்யும் பெரு வாய்ப்பு, குடும்பம் போல இயங்கிப் பாடசாலையொன்றில் கடமைசெய்யும் பாக்கியம் பேரன்புக்குப் பாத்திரமான மனைவி, பெருமதிப்பு மிகுந்த அவரது குடும்பத்தினரின் உறவு, தன்னலங் கருதாது, அன்புக்கும் நேர்மைக்கும் கல்விக்கும் மதிப்பளிக்கும் இன்றும் என்றும் எங்கும் நீடிக்கும் நாரந்தனைச் சமூகத்துடனான குறிப்பாக மாணவர் குழாத்துடனான தொடர்பு என்பனவெல்லாம் எனக்குத் தந்தது நாரந்தனை.

எனது கதை இவ்வாறிருந்தவாறு. யாழ்ப்பாணச் சைவசமய நிலை கடந்த ஐந்நூறு வருடங்களுக்கு மேலாகப் பல இடையூறுகளைச் சந்தித்து வந்தது. ஐரோப்பியர் இலங்கையைக் கைப்பற்றியமையால் பலர் பலவந்தமாக மதமாற்றம் செய்யப் பெற்றனர். எம்மிடமிருந்த சமூகக் குறைபாடுகள் காரணமாகத் தாமாகவும் பலர் சைவ சமயத்திலிருந்து பிற சமயங்களுக்கு மாறிக்கொண்டனர். சைவசமயமும் சைவப் பாடசாலைகளும் தப்பிப் பிழைப்பது கடினமாக இருந்தது.

இலங்கையின் பழைய இப்பொதுப் பிரச்சினையின் ஒரு மிகப் பொருத்தமான மாதிரி வடிவமாக ஆயிரத்துத் தொளாயிரத்து எழுபதுகளிலும் விளங்கியிருந்தது நாரந்தனை கணேச வித்தியாலயம்.

இப்பாடசாலையில் இருந்து ஒரு கிலோமீற்றருக்கு உட்பட்ட தூரத்தில் நாரந்தனை றோமன் கத்தோலிக்க வித்தியாலயமும் தம்பாட்டி அ.த.க. பாடசாலையுமிருக்கின்றன.

வசதி, செல்வாக்கு, பிரபல்யம் முதலிய பல காரணங்களால் கணேச வித்தியாலயத்தைச் சுற்றிய பகுதிகளில் வாழ்ந்த சைவ சமயத்தவர்கள் பலரும் தமது பிள்ளைகளைப் பிற பாடசாலைகளுக்கு அனுப்பி வந்தனர். தம்பாட்டிப் பாடசாலையும் தரமுயர்த்தப் பெற்றது. பணத்துக்கோ, பதவிக்கோ செல்வாக்குக்கோ, புகழுக்கோ சிறிதும் ஆசையில்லாதிருந்தவரும் கணேச வித்தியாலயத்திலேயே தனது ஆரம்பக் கல்வியைப் பெற்றிருந்தவரும் இப்பாடசாலைக்கு மிக அருகில் வசித்தவருமான திரு.செ.இராசதுரை அவர்கள் பதவி வகித்தார்கள். ஆற்றலும் அனுபவமும் மிகப் பெற்றிருந்த அதிபரின் கீழ் ஆற்றலும் அனுபவமும் கொண்ட ஆனாலும் இளம் வயதினராகவும் இருந்து சிறந்த ஆசிரியர்கள் பணிபுரிந்தார்கள்.

அதிபர் ஒருபோதும் மறந்தும் தனது அறையில் இருக்கமாட்டார். அவரது அறையில் அவருக்கு ஒரு மேசையே இருந்தது. கதிரை இருக்கவில்லை. அதிகாரிகள் வந்தபோது சில கதிரைகள் தற்காலிகமாக அலுவலகஞ் சென்று திரும்பும். அதிபர் பாடசாலைக்கு வராத அல்லது பிந்திவரும் அல்லது முந்திச் செல்லும் ஆசிரியர்களின் வகுப்புக்களில் இருந்து கற்பித்துக் கொண்டேயிருப்பார்.

இப்பாடசாலையில் மாணவர் எண்ணிக்கை மிகவும் குறைவாக இருந்தபோதிலும் அவாகள் கல்வித் தரத்திலும் ஒழுக்கத்திலும் மிக உயர் நிலையில் இருந்ததுடன், மிகுந்த ஊக்கமுள்ளவர்களாகவும் காணப் பெற்றிருந்தனர். இப்பாடசாலை, அங்கத்தவர் எண்ணிக்கை கூடிய ஒரு தனிக்குடும்பம் போல அன்பு, ஆதரவு, ஒத்துழைப்பு, விட்டுக்கொடுப்பு முதலான நற்பண்புகளுடன் இனிதே நடைபெற்று வந்தது.

இது இவ்வாறிருக்க இலங்கை அரசியற் சுதந்திரம் பெறுமுன்னர், மாணவர் எண்ணிக்கையே சைவப் பாடசாலையொன்று நிலைத்திருப்பதற்குப் பிரதான காரணியாகவிருந்தது. இதனால் சைவப் பாடசாலையொன்றுக்குப் பாடசாலைப் பரிசோதகர் காலையில் சென்று கணக்கெடுத்துவிட்டு அடுத்த பாடசாலைத் தெருவீதி வழியாக மகிழுந்தொன்றில் செல்வதற்கு முன்னர் முன்னமே தயார் நிலையில் இருந்த மாற்றுடைகளை மாணவர் சிலருக்கு அணிவித்து குறுக்குவழியாக மாட்டு வண்டியில் அவர்களை அடுத்த பாடசாலைக்குக் கொண்டு சென்று அங்கிருந்த வகுப்புகளை நிரப்பி அப்பாடசாலையின் எண்ணிக்கையை அதிகமாகக் காட்டியிருந்தனர் சில அதிபர்களும் நலன்விரும்பிகளும்.

எமது அன்புக்குரிய அதிபருக்கு குறைவான மாணவர் எண்ணிக்கையைக் காரணங்காட்டித் தனது பாடசாலையின் சிறந்த ஆசிரியர்களை அயற்பாடசாலைகளுக்கு இடமாற்றம் செய்துவிடுவார்களோ என்ற ஐயம் எப்போதுமே இருந்து வந்தது. அயற் பாடசாலையினரும் அதற்காகப் பலவழிகளில் முயன்றும் வந்தனர். இதனால் ஒவ்வொரு தவணையும் நடைபெறும் பொதுப் பரீட்சைக்குக் கட்டணம் கட்டுமாறு வட்டாரக் கல்வி அதிகாரி கேட்கும்போதெல்லாம் அதிபர் தனது சொந்தச் சம்பளத்தில் ஒருபகுதியைச் சேர்த்துக் கட்டி, வினாத்தாள்கள் அளவுக்கு அதிகமாகக் கிடைத்ததனால் இப்பாடசாலையில் கற்று பல வறிய மாணவர்களிடமிருந்து அதிபர் ஒருபோதும் பணம் அறவிடவேயில்லை.

இந்த இனிய குடும்பத்தில் ஒரு அங்கத்தவனாகும் - இப்பாடசாலையில் ஆசிரியனாகும் வாய்ப்பு எனக்கும் கிட்டியது. அதிபரின் அன்பான அழைப்பும் அயல்நாட்டு இராணுவத்தினரின் அட்டகாசங்களுக்கு மத்தியில் வீட்டுக்கருகில் வேலைத்தலமொன்று கிடைத்த சந்தர்ப்பமும் எனக்கு நல்ல வாய்ப்பாயிற்று.

புதிதாகப் பட்டப்பின்படிப்பும் கல்வி டிப்ளோமாவை நிறைவுசெய்து வந்த நானும் என்னால் ஆன கற்பித்தலில் ஈடுபட்டேன். பாடசாலைக்கு அருகில் வசித்த காரணத்தால் சமூகத்துக்கும் சிறந்த ஆசிரியக் குடும்பத்தில் ஒரு அங்கத்தவனாதலால் பாடசாலைக் கல்வி, இணைப்பாடவிதானச் செயற்பாடுகளிலும் முழு அளவில் ஈடுபட வாய்ப்பாயிருந்தது.

இராணுவச் சுற்றிவளைப்பு, ஏனைய கெடுபிடிகள், சிரமதானங்கள் முதலிய சந்தர்ப்பங்களின்போது பிரதேச குடிமகனாகவும் எனது பங்கைச் சிறப்பாகச் செய்யக் கூடியதாக இருந்தது.

இச்சமயத்தில் ஆசிரியர் பதவியுடன் மேலதிகமாக வேலணைத் தீவும் மண்டைதீவும் கொண்ட வேலணைக் கல்விக் கோட்டப் பாடசாலைகளுக்கான சமூகக்கல்வி வலய ஆலோசகராகவும் எனக்கு நியமனம் கிடைத்திருந்தது. யாழ். மாவட்டத்தில் இடம்பெற்ற நேர்முகத் தேர்வில் மிக அதிக புள்ளிகளைப் பெற்றுத் தெரிவு செய்யப் பெற்றதன் மூலம் நாரந்தனை கணேச வித்தியாசாலைக்கு யாழ். கல்வித் திணைக்களத்தில் நன்மதிப்பைத் தேடிக் கொடுத்தேன். இப் பதவி மூலம் கொழும்பு தேசியக் கல்வி நிறுவகத்தில் அடிக்கடி பல வாரங்கள் தங்கியிருந்து கற்கும் வாய்ப்பு உண்டானது. வேலணை அல்லாத 14 பாடசாலைகளுக்குச் சென்று ஆசிரியர்களின் கற்பித்தல் வேலைகளைக் கவனிப்பதும் அங்குள்ள ஆசிரியர்களைக் கூட்டி நான் கொழும்பில் கற்று வந்தவற்றை வார இறுதி நாட்களில் அடிக்கடி எடுத்துரைப்பதும் எனது மேலதிகக் கடமைகளாயின.

இவையனைத்தும் எனது வகுப்பறைக் கற்பித்தலை மிகத் திறமையாகவும் அதிகாரிகள் வருகை தந்து பார்த்துப் பாராட்டும்படி நடத்தவும் பெரிதும் உதவின.

இவ்வாறாக பல சந்தர்ப்பங்களிலெல்லாம் திரு.இராசதுரை அவர்கள், அதிபர் பதவியை என்னை ஏற்றுக்கொள்ளுமாறும் தான் ஓய்வு பெறப் போவதாகவும் தெரிவித்து வந்தார். அதிபருக்குக் கட்டாய ஓய்வுநாள் வரை அவரது வேண்டுகோளை முற்றாக மறுத்து வந்த எனக்கு அவர் வயது பூர்த்தி அடைந்து ஓய்வுபெற்றபோது 16.04.1988 அப்பதவி கிடைத்தது.

எனக்கு கிடைத்த இப்பதவியில் ஆறு மாதங்கள் மாத்திரம் இருந்தேன். அப்படியிருந்தும், அப்பதவி தனிப்பட்ட முறையில் எனக்குப் பல அரிய சந்தர்ப்பங்களை ஏற்படுத்தியது. ஊரவர்கள் அனைவரினதும் பூரணமான ஒத்துழைப்புடன் அதிபர் இராசதுரைக்கு மிகக் கோலாகலமாக ஒரு பிரியாவிடை நிகழ்வு எனது தலைமையில் இடம்பெற்றது. பல கல்வி அதிகாரிகள் உட்படப் பலர் கலந்துகொண்டனர்.

அப்போது இருந்த கொத்தணிப் பாடசாலை அமைப்பில் ஊர்காவற்றுறைக் கொத்தணியின் கீழ் இருந்த 11 பாடசாலைகளில் எமது பாடசாலையும் ஒன்றாகவிருந்தது. அனைவரும் அறிந்த அவர்போல் விளங்கிய ஆளுமை மிகுந்திருந்த புனித அந்தோனியார் கல்லூரி அதிபர், அமரர் இரட்ணராஜா ஊர்காவற்றுறைக் கொத்தணி அதிபராகப் பதவி வகித்தார். நான் அதிபராகப் பதவியேற்ற சில நாட்களிலேயே அவரின் கீழ் உதவிக்

கொத்தணி அதிபராக நியமனம் பெற்றேன்.

உயரத் தொடங்கியது.

அடுத்து புதிதாக ஆரம்பிக்கப்பெற்ற வேலணைக் கல்விக் கோட்ட அபிவிருத்திக் கழகத்தின் செயலாளராகவும் என்னைத் தெரிவு செய்தனர்.

எமது ஓய்வுபெற்ற அதிபர் திரு.இராசதுரையின் நெருங்கிய நண்பர் உறவினர் திரு. நவரத்தினம் கேசநாதன் அவர்கள் எமது பாடசாலைக்கு அன்பளிப்பாகப் பல ஆயிரம் ரூபாய் செலவில் மீள் இணைப்பை ஏற்படுத்தித் தந்தார்.

பாடசாலை ஒளிமயமானது தற்போது இலங்கையிலும் உலகின் பல நாடுகளிலும் மிகச் சிறப்பான பதவிகளை வகிக்கும் பலர் மாணவராகவும் சிலர் தொண்டு அடிப்படையில் ஆசிரியராகவும் விளங்கி பாடசாலைக்குச் சிறப்புச் சேர்த்தனர். அவர்கள் இன்றும் இப்பாடசாலையின் பெருமைகளைப் பறைசாற்றி வருகின்றனர்.

ஊரிலுள்ள அனைவரும் செய்த அன்பளிப்பினால் பேறுபெற்ற ஆயிரக்கணக்கான நூல்களை இரவுபகலாக செல்வி மேனகா கிருஸ்ணபிள்ளை அவர்கள் முறைப்படி இலக்கிட்டு, உறையிட்டு, வகைப்படுத்தினார். இதனால் பாடசாலை நூலகம் ஒன்று முறையாக ஆரம்பிக்கப்பெற்றது. பாடசாலை நடைபெறாத சமயங்களில் மின்சார வெளிச்சத்தில் நூல்களை வாசிக்கக் கிடைத்த வாய்ப்பைப் பலர் பயன்படுத்தியதுடன் தமது அன்பளிப்புக்களின் உயர்வான நிலையையும் பயன்பாட்டையும் கண்டு மகிழ்ந்தனர்.

பாடசாலையும் கல்வித் திணைக்களமும் இப்பதவிகளையும் பெருமைகளையும் எனக்குத் தந்த வேளையில், திருவருள் பெருகு ஸ்ரீதான்தோன்றி மனோன்மணி அம்பாளின் திருவருட் கடாட்சத்தினாலே பல லட்ச ரூபாய் செலவில் அம்பாளின் திருக்கோவிலில் இடம்பெற்ற திருப்பணி வேலைகளுக்கும் பின்னர் இடம்பெற்ற அப்பிராட்டியின் புனருத்தாரண கும்பாபிஷேக விழாவுக்கும் பொருளாளராகவிருந்த பெரும்பாக்கியமும் எனக்குக் கிடைத்திருந்தது. பாடசாலைக்குத் தெற்குத் திசையில், பாடசாலைக்கும் அருகில் இருக்கும் சிறிய குளத்துக்கும் இடையில் உள்ள காணியைப் பாடசாலை பெற்றுக் கொள்ள நானும் எனது அன்புக்குரிய மாணவர்களின் தந்தையார், பாடசாலை வளர்ச்சியில் மிகவும் ஒத்துழைப்புத் தந்த சமூக நலன்விரும்பி, எனது நண்பர் அமரர் சோ.சிவராஜசிங்கம் அவர்களும் முயற்சி மேற்கொண்டோம். அந்தக் காணிக்குப் பதிலாக அக்காணி உரிமையாளருக்கு அதைவிட விலையுயர்ந்ததும், வைரவர் கோவிலுக்குப் பக்கத்தில் உள்ளதும் திரு.முத்தையா சபாநாதன் குடும்பத்தினருக்குச் சொந்தமானதுமான காணியை அன்பளிப்பாகப் பெற்று வழங்க அவர்களின் சம்மதங்கள் பெறப்பெற்றன.

சிறிய குளத்தைச் சுத்தப்படுத்தி ஆழமாக்கி அள்ளப்படும் மண்ணைக் கொண்டு பாடசாலைக்கும் சிறிய குளத்துக்கும் இடையில் விவசாயத் திணைக்கள அதிகாரி க.சுந்தரேசன் (மேற்குக் கரம்பொன்) திணைக்களத்தின் மூலமாகச் செய்ய முன்வந்திருந்தார். எனது நண்பரும் பின்னர் கணேச வித்தியாலய அதிபராகப் பதவி வகித்தவருமான ஆசிரியர் திரு.சா.தியாகலிங்கம் பலமுறை என்னும் விவசாயத் திணைக்களம் வந்து ஒத்துழைத்திருந்தார்.

மேலும் அச்சிறிய குளத்திலிருந்து குழாய் வழியாக நீரைப் பெற்றுப் புதிய நிலத்துடன் சேர்ந்த பாடசாலைக்கு வருடம் முழுவதும் விவசாய நீர் வழங்கும் திட்டத்துக்குரிய அன்பளிப்புக்களுக்கான ஒழுங்குகளை எமது முன்னாள் அதிபர் திரு. கணபதிப்பிள்ளை அவர்களின் ஞாபகார்த்தமாகச் செய்வதற்கு அவரது புத்திரரும் எமது பாடசாலையின் பழைய மாணவருமான திரு.க.விஜயநாதன் அவர்கள் அவரது குடும்பத்தின் சார்பாக ஏற்றுக்கொண்டிருந்தார். ஆனால் எதுவுமே நடைபெறவில்லை.

இக்கட்டுரையை எழுதும் போது இரண்டு வாழ்த்துரைகள் எனது நினைவுக்கு வருகின்றன.

ஒன்று, எனது மனைவியின் தாய்வழிப்பாட்டி அமரர் தம்பு பொன்னம்மா அவர்கள் தான் முதல் முதல் கணேச வித்தியாலயத்துக்கு ஆசிரியராகச் சென்றபோது எனது பூட்டனார் என்ற உறவிலிருந்த அமரர் சைவப்பெருந்தகை ஸ்ரீமான் தம்பு உபாத்தியார் வேலணையிலிருந்து வந்து தன்னையும் ஏனைய பலரையும் கணேச வித்தியாலயத்தில் கற்பித்ததாகவும் இப்போது நான் கற்பிக்கச் செல்வது பொருத்தமுடையதே எனவுங்கூறி வாழ்த்தி அனுப்பினார். மேலும் நான் முதல் நாளில் அதிபராகப் பதவியேற்கச் சென்றபோது காத்திருந்து அவரது ஊரவரும் மகாஜனாக் கல்லூரியில் புகழ்பெற்ற அதிபராகவும் விளங்கிய அமரர் துரையப்பாபிள்ளையின் சேவைநலம் பாராட்டுவிழா மலர் ஒன்றைத் தந்து "இவரைப் போல பெரிய புகழ்பெற்ற அதிபராக வர வாழ்த்துகிறேன். தான்தோன்றி அம்பாள் எல்லாம் தருவாள்" என்று வாழ்த்தினார்.

எனக்கு 31.10.1988 முதல் கட்டாய இடமாற்றம் கிடைத்தது. ஆனால் பாடசாலைக்கு நல்ல அதிபர் ஒருவர் அன்பர் திரு.சா.தியாகலிங்கம் கிடைத்தனர்.

**திரு.சுந்தரம்பிள்ளை கலாதரன்**
முன்னாள் அதிபர்,
அவுஸ்திரேலியா



# நாரந்தனை கணேசாவுடன் ஒரு யாத்திரை

நான் 1979இல் இப் பாடசாலையில் ஆசிரியராக இணைந்த போது அதிபராக இருந்து வரவேற்றவர் என் மதிப்பிற்க்குரிய திரு. செ.இராசதுரை அவர்கள் ஆவார். இவர் மாணவர்களையும், ஆசிரியர்களையும் தனது நெருங்கிய உறவினர் போன்று நேசித்தவர். பல பாடங்களைப் போதிக்கக்கூடிய ஆற்றல் உடையவர்.பாடசாலையைத் தன் பிள்ளை போன்று பேணி வந்தவர். அன்று இப்பாடசாலை முற்றுமுழுதாக சைவசமய மாணவர்களைக் கொண்டிருந்தது. அபபோது கற்பித்த ஆசிரியர்கள் 11பேரில் 4பேர் உள்ளூர் கத்தோலிக்க ஆசிரியர்கள் இவர்களுக்கு சமய உணர்வை மீறியதாக பாடசாலை மீதான பற்று இருந்தது. கலைத்திட்ட செயற்பாட்டுடன் மட்டுமல்லாது இணைப்பாடவிதானச் செயற்பாட்டிலும் ஒரு ஒருங்கிணைப்பு இருந்தது. சரஸ்வதிபூசை போன்ற செயற்பாடுகளும் ஒருங்கிணைந்ததாக இருந்தன. பொன்றோஸ் ரீச்சர் என்று அழைக்கப்பட்ட திருமதி.பொ.எலியாஸ் உப அதிபராக இருந்தார். இவர் ஆசிரியர்களதும், மாணவர்களதும் அன்புக்குரியவராகவும், நம்பிக்கைக்குரியவராகவும் செயற்பட்டார்.

இருநூறிற்கும் மேற்பட்ட மாணவர்கள் கல்வி பயின்றனர். அனைத்து ஆசிரியர்களும் ஒருங்கிணைந்து செயற்பட்டு அடைவு மட்டத்தை உயர்த்தக்கூடியதாக இருந்தது. தமிழ்த்தினப் போட்டி, விளையாட்டுப்போட்டி போன்றனவற்றிலும் வட்டார, மாவட்ட மட்டங்களில் நல்ல பெறுபேறுகளைப் பெறக்கூடியதாக இருந்தது. பெற்றோருடைய பழையமாணவருடைய பங்களிப்பு உற்சாகம் தருவதாக இருந்தது.அமரர் வே.நடேசபிள்ளை அவர்கள் நீண்ட காலம் பாடசாலை அபிவிருத்திச் சங்க செயலாளராக இருந்து பெற்றோரின் ஒத்துழைப்பிற்கு முன்மாதிரியாக இருந்துள்ளார். அவருடைய தலைமையின் கீழேயே பாடசாலைக்கு அருகில் பாரதி சனசமூகநிலையம்

அமைக்கப்பட்டது. மனோன்மணிபாடசாலையும் அங்கு இடமாற்றம் செய்யப்பட்டது. பாடசாலை அபிவிருத்தியும் கிராம அபிவிருத்தியும் சமாந்தரமாக இருந்தன அவருக்குப்பின் பாடசாலை அபிவிருத்திச் சங்கச் செயலாளராகச் செயற்பட்டவர் திரு.சு.இராமலிங்கம். அவரும் கோவில், சனசமூகநிலையம், போன்றவற்றோடு பாடசாலை அபிவிருத்திக்கும் கடுமையாக உழைத்துள்ளார். சமூகச் செயற்பாடு அவரது முழுநேரப் பணி போன்றதாகும். பா.அ.ச. செயற்பாடுகளிலே சிவம் என்று அழைக்கப்பட்ட அமரர்.சோ.சிவபாலசிங்கத்தை மறக்க முடியாது. கூட்டங்களிலே சரி என்றுபட்டதை வெளிப்படையாகக் கூறும் சிம்மக்குரல் இன்றும் என் காதிலே எதிரொலிக்கின்றது. சபையால் தீர்மானிக்கப்பட்டால் தனது கருத்துக்கு முரணாக இருந்தாலும் அதனைச் செயற்படுத்துவதில் அவன் ஒரு செயல் வீரன். பாடசாலைக்கு நூல் சேகரிக்கப்பட்ட போது தனது வீட்டு நூலகத்தில் இருந்த பெறுமதியான நூல்களை வழங்கியதோடு பண உதவியும் செய்திருந்தார். பின் வந்த காலம் ஒரு சோதனைக்காலமாக அமைந்துவிட்டது. இனமுரண்பாடு ஆயுத மோதலாக மாற்றம் பெற்றதைத் தொடர்ந்த காலம் மூன்று கட்டங்களாக அணுகப்படவேண்டியதாக மாறிவிட்டது.

1988இல் நண்பர் திரு.சு.கலாதரன் அதிபராக பொறுப்பேற்றார். இளமைத்துடிப்புடன் புதிய ஆசிரியர்கள் ரவிச்சந்திரன் ,பிறேமாரீச்சர் மேனகாரீச்சர் மீறாரீச்சர், ஜெயந்திரீச்சர் இணைந்தனர் அவற்றில் முதல் நால்வர் எமது பழையமாணவர்கள். பிரதிக் கல்விப்பணிப்பாளராக இருந்து அண்மையில் ஓய்வு பெற்ற திரு.பொ.அருணகிரிநாதனும் அப்போது இடமாற்றம்பெற்று வந்திருந்தார். நீண்ட காலம் அர்ப்பணிப்புடன் பணியாற்றிய நடனேஸ்வரிரீச்சர், மாலாரீச்சர் போன்றோரும் பணியாற்றினர். முன்னாள் அதிபரின் உறவினர் திரு.கேசுநாதனின் அனுசரணையுடன் பாடசாலைக்கு மின்னிணைப்பு வழங்கப்படுகின்றன. கனதியான நூலகம் அமைக்கும் செயற்திட்டம் ஆரம்பிக்கப்படுகின்றது. திரு.சு.கலாதரன் இடமாற்றம் பெற நான் அதிபர் பதவியைப் பொறுப்பேற்றேன். அன்று கல்வி முகாமைத்துவக் கட்டமைப்பில் மாற்றம் ஏற்பட்டிருந்தது. கோட்டம் என்ற அலகு உருவாக்கப்பட்டு பாடசாலைக்கும் கல்வி அலுவலர்களிற்கும் இடையிலான தூரம் குறைக்கப்பட்டது. அமரர் சி.புலேந்திரன் வேலணைக் கோட்டக் கல்வி அதிகாரியாகச் செயற்பட்டார். அவருடைய தளபதியாக அமரர் சு.சண்முகநாதன் கல்வி அதிகாரி தொழில்பட்டார். அவர் அன்று தீவகத்தில் கற்பித்த ஆசிரியர்கள் பலருடைய அபிமானத்திற்குரிய ஆசிரியர். அவர்களுடைய வழிகாட்டலில் பல திட்டங்கள் உருவாக்கப்பட்டன. ஆரம்பக்கல்வி அபிவிருத்தி தொடர்பான செயற்றிட்டம் பெற்றோரின் பங்களிப்புடன் ஆரம்பிக்கப்பட்டது. பாழாய்ப்போன இடப்பெயர்வு எல்லாவற்றையும் தவிடு பொடியாக்கியது. இத்துடன் முதற்கட்டம் முடிவுற்றது. ஆதி மூலத்தை விட்டு 'எழுந்தருளி' மூர்த்தியுடன் வீதியுலா புறப்பட்டோம் என்றுதான் கூற வேண்டும். .

இரண்டாம் கட்டம் யாழ்ப்பாணத்தில் 1991இல் ஆரம்பமாகியது. ஊர்காவற்றுறை கொத்தணி பாடசாலைகள் 11உம் இணைந்து யாழ்ப்பாணத்தில் அமரர் எஸ்.ஏ.ஈ.இரத்தினராஜா தலைமையில் இயங்கின சிறிது காலம் யாழ்ப்பாணம் மத்தியகல்லூரியில் மாலைப்பாடசாலையாக இயங்கியபின் சென் ஜோன்ஸ் அக்கடமியில் இயங்கத் தொடங்கியது. யாழ் நகருக்கு அண்மையில் குடியேறிய எமது மாணவர்களும் ஆசிரியர்களும் சமூகமளித்தனர். இதைக் கொத்தணி என்பதை (Cluster) விட பூச்செண்டு

(Bouqet) ஆகச் செயற்பட்டோம். என்று கூற வேண்டும் ஒரே கூரையின் கீழ் இருந்து செயற்பட்டோம். முன் மாதிரியாக தொழிற்பட்டோம்.

அடுத்த வீதி உலா நாவற்குழி நோக்கியதாக இருந்தது. நாரந்தனையைச்சேர்ந்த பல மாணவர் இடம் பெயர்ந்து நாவற்குழியில் இடம்பெயாந்தோர் முகாமில் தங்கியிருந்தனர். 1994இல் அவர்களை நோக்கி பாடசாலையும் இடம் பெயர்ந்தது. தற்காலிக கொட்டகைகளில் இயங்கத்தொடங்கியது. எல்லா ஆசிரியர்களும் குடாநாட்டின் பல பகுதிகளில் இருந்தும் சென்று வநதனர் அன்று செம்மணி வெளியைத்தாண்டிய நாவற்குழிப்பயணம் மிக அவதானத்துடன் மேற்கொள்ளவேண்டிய பயணம் இன்று போல் "காப்பெற்" வீதியோ அல்லது மோட்டார் சைக்கிள் சவாரியோ இல்லை.ஆசிரியர்கள் செம்மணியில் அணி சேர்ந்து சைக்கிளில் வருவார்கள். "கோள் மூட்டிகள்" என்ற பரிபாசையில் அழைக்கப்பட்ட ஹெலிகொப்டரின் நடமாட்டத்தை அவதானித்தே பயணம் செய்ய வேண்டும். குண்டு வீச்சு விமானங்களுக்கு குண்டு வீச வேண்டிய இடத்தை உறுதிப்படுத்த உதவுவதால் கோள்மூட்டி" என்ற பெயர் பெற்றிருக்கும்.

கடினமான பயணம் ஆனால் ஆத்ம திருப்தி தருவதாக இருந்தது. இன்று பசுமையான நினைவுகளாகவே உள்ளன. இடம் பெயர்ந்த எமது பிரதேச மாணவர்களுக்குச் சேவையாற்றுகின்றோம். என்ற திருப்தி ஒரு புறம் எமது பாடசாலையில இருந்து கிளைவிட்டு ஆண்டு 1 -9 வரையான மாணவருக்கு கல்விப் பணியாற்றிக் கொண்டிருக்கின்ற யா/ தம்பாட்டி அ.த.க.வி. உடன் இணைந்து செயற்படப் போகின்றோம் என்ற மகிழ்ச்சி 600 இற்கும் மேற்பட்ட மாணவர்கள் கல்வி பயின்றனர். மறுபுறம் எங்களுக்கு வழிகாட்டியாக இருந்தவர் யா/தம்பாட்டி அ.த.க.வி.அதிபர் திரு.ம.கந்தசாமி  அவரது உடை போன்றே வெள்ளையுள்ளம் கொண்டவர். இவருக்கு முகாமிலுள்ள மாணவர் ஒவ்வொருவரதும் பொருளாதாரப் பின்னணி நன்கு தெரியும். கோட்டமட்ட மாவட்டமட்ட போட்டிக்குச் சென்றால் கண்ணையா மாஸ்ரர் என்று அழைக்கப்பட்ட இவரும் அல்பேட்மாஸ்ரரும் இரவு பகலென்று பாராமல் பாடசாலையிலேயே தங்கி நின்று மாணவர்களைப் பயிற்றுவர். அவர் பாடசாலை ஆரம்பமாவதற்கு ஒரு மணித்தியாலம் முன்னதாகவே வந்து பாடசாலைச்சூழல் பராமரிப்பு மாணவர்ஒழுக்கம் தொடர்பாகக்கவனம் செலுத்திவிடுவார். இன்னொரு சிறப்பும் உண்டு. எமது பாடசாலை ஆசிரிய அணியுடன் எமது பழைய மாணவர்களான சர்வமாலா ரீச்சர், வாசுகிரீச்சர், ஆகியோரையும் உள்ளடக்கிய தம்பாட்டி அ.த.க.வி. ஆசிரியர் அணியும் ஒருங்கிணைந்து செயற்பட்டமையாகும். கொண்டாட்டம் ஒன்றிலே உறவினர்கள் இணைந்ததைப் போன்று இரண்டு பாடசாலைச் சமூகங்களும் ஒருங்கிணைந்து செயற்பட்டன.

தற்போது புனித பத்திரிசியார் கல்லூரியில் கற்பிக்கும் திரு.வசீகரனின செயற்பாடு அளப்பரியது. றோமன் கத்தோலிக்க சமயம் கற்பித்த தொண்டராக வந்த அவர் பல பாடங்களைக் கற்பிப்பவராக நிர்வாகத்திற்கு உதவுபவராக செயற்பட்டார். பாடசாலையின் அருகிலேயே தங்கி இருந்து மாணவருக்கு விசேட வகுப்புக்களும் எடுத்துள்ளார். இடையில் நான் படிப்பு லீவில் பல்கலைக்கழகம் சென்ற போது திரு.ச.கணேசதாசன் பொறுப்பேற்றார்.

றிவிரெச இராணுவநடடிக்கையைத் தொடர்ந்து மீண்டும் இடப்பெயர்வு விடத்தல்பளை, கெற்பலி என்று தொடர்ந்துள்ளது. இத்துடன் இரண்டாம் கட்டம் நிறைவு பெற்றது.

மூன்றாம் கட்டம் எமது சொந்த இடமான நாரந்தனை திரும்புவதாக இருந்துள்ளது. உடனடியாக எமது சொந்தக்கட்டிடத்தில் இயங்கமுடியவில்லை. அப்போது தான் நாரந்தனையில் மக்கள் மீளக் குடியேறத் தொடங்கியிருந்தனர் போக்குவரத்து கடினமானதாக இருந்தது. யாழ்ப்பாணத்தில் இருந்து ஊர்காவற்றுறைக்கு செருக்கன் வீதியால் மட்டும் ஒரு சேவை நடைபெற்றது. வடக்கு றோட்டால் பஸ் சேவை நடைபெறவில்லை. 1996 யூன் மாதம் தொடக்கம் யா/நாரந்தனை றோ.க.ம.வி, யா/தம்பாட்டி அ.த.க.வி., யா/சரவணை சின்னமடு றோ.க பாடசாலை ஆகியவற்றுடன் இணைந்து செயற்பட்டோம். அன்று சின்னமடு றோ.க. அதிபராக நண்பர் திரு.த.சத்தியதாசன் பணியாற்றினார். அன்று பொன்னாலைப்பாலம் போக்குவரத்திற்கு திறக்கப்படவில்லை காரைநகருக்கு ஊர்காவற்றுறையூடாகத்தான பயணம். பல காரைநகர்ப் பாடசாலை ஆசிரியர்களும் எம்மோடு இணைந்திருந்தனர். பல தடவைகள் இராணுவச் சுற்றிவளைப்பின் காரணமாக எமது யாழ்ப்பாணத்திலிருந்தான பயணம் (பழைய) பண்ணையுடன் இடை நிறுத்தப்பட்டது. அனறு நண்பர் சத்தியதாசனும் மேரி அஞ்சலா ரீச்சரும் தான் சிரேஸ்ட மாணவரின் உதவியுடன் கல்வி நடவடிக்கைகளை தொடர்ந்துள்ளனர். நாரந்தனை றோ.க. இடைத்தங்கல்(transit)இடமாகையால் சுவாமி வீதியுலா முடிந்து இளைப்பாற்று மண்டபமாக அன்று றோ.க. செயற்பட்டது என்று கூறலாம். இடையில் நான் சுகவீனம் காரணமாக ஒரு வருட தற்காலிக இடமாற்றம் பெற நண்பர் திரு.க.குமரேஸ்வரநாதன் பாடசாலையைப் பொறுப்பேற்றார் அவருடைய முயற்சியினால்தான் பாடசாலை 1997இல் சொந்த இடத்தில் இயங்கத் தொடங்கியது. ஏழு வருட யாத்திரை முடிவுக்கு வந்தது.

பழைய மாணவர் பெற்றோரின் உற்சாகமான வரவேற்புடனேயே மீளக்குடியமர்ந்தோம் கட்டிடங்களைத்தவிர பௌதீக வளங்கள் ஒன்றுமில்லை. எஞ்சியிருந்த கட்டிடங்கள் ஒரு அடி உயரத்திற்கு மாட்டுச் சாணத்தால் நிரம்பியிருந்தன. இன்று மாணவர் தொகை குறைவாக உள்ளது. நாம் எதிர்பார்த்த வேகத்தில் மீளக் குடியமர்வு நடைபெறவில்லை என்றாலும் சமூக உணர்வும் பாடசாலைப் பற்றும் உடைய பழைய மாணவர்கள் பெற்றோர் அமைந்தமை எமது பணியை ஆத்ம திருப்தியுடன் செய்ய உதவியது. திரு நாகராசா, திருமதிகள் கமலகுமாரி, ரஞ்சிதகுமாரி, இந்திராணி, குறிப்பிடத்தக்கவர்கள். பாடசாலை விழாக்கள் எதுவாக இருந்தாலும் நிதி சேகரிப்பு தொடக்கம் உபசரிப்பு வரையும் இவர்களின் ஒருங்கிணைந்த செயற்பாடு எமக்கு உற்சாகமூட்டியுள்ளது. ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் ஓய்வு பெற்ற கிராம சேவகர் திரு.க.சகாதேவன் வழிகாட்டியாய இருந்துள்ளார். இவரது தன்னலமற்ற சேவை கிராம அபிவிருத்தி, பாடசாலை அபிவிருத்தி எங்கும் காணப்படும். பௌதீக வள அபிவிருத்தி குறிப்பிடத்தக்க அளவில் உள்ளது. பாடசாலை நூலகத்தை அபிவிருத்தி செய்ய பழைய மாணவரான நண்பர் திரு.க.விஜயநாதன் நிதியுதவி புரிந்துள்ளார். கல்வித் திணைக்கள அனுசரணையும் உள்ளது. இருக்கின்ற மாணவரின் அடைவுமட்டத்தை உயர்த்துவதிலும் ஆளுமை விருத்தியிலும் கவனம் செலுத்தப்படுகின்றது. இன்று அதிபராக இருக்கும் திருமதி.பி.சற்குணராஜா பாடசாலையின்

பழையமாணவி. அவர் இடப்பெயர்வின் முன் இடப்பெயர்வு. இடப்பெயர்வின் பின் ஆகிய மூன்று கட்டங்களிலும் நாரந்தனை கணேசாவில் பணியாற்றியவர். இந்த அனுபவங்களால் பாடசாலையின் குறிப்பான தனித்துவத்தை (Particularity)ப் புரிந்து கொண்டவர்.

திரு. ந. மதனராஜ் நாடாளுமன்ற உறுப்பினர் அவர்களின் பன்முகப்படுத்தப்பட்ட நிதி ஒதுக்கீட்டில் 1999 இல் 30 X 20 அளவு கட்டடம் ஒன்று அமைக்கப்பட்டது. பாடசாலை நூலகத்திற்கான தளபாடங்கள் சிறுவர் பாதுகாப்பு நிதியத்தின் உதவியுடன் பெறப்பட்டுள்ளன. பாடசாலையின் தோற்றத்தின் எண்ணக்கருவின் சிற்பியான நாகநாதரின் நெருங்கிய உறவினரான திருமதி மகேஸ்வரி விசுவலிங்கம் அவர்கள் பாடசாலைக்கு விளையாட்டு மைதானம் அமைக்க, பாடசாலைக்கு முன் அமைந்துள்ள தனது காணியை நன்கொடையாக வழங்கியுள்ளார்.

2004இல் கல்வி மேம்பாட்டுப்பேரவையால் க.பொ.த. சாதாரண தரத்திற்கு தோற்றிய மாணவரும் அடிப்படையில் பாடசாலை வகைப்படுத்தப்பட்டன. அதன் அடிப்படையில் ஒவ்வொரு பாடசாலைகளிலும் சித்தி பெற்றோர் விகிதாசாரம் கணிப்பிடப்பட்டு ஊக்கு விப்பு நடவடிக்கையாக கேடயங்கள் வழங்கப்பட்டன. 1- 10 மாணவர் தோற்றிய மாணவர் வகுதியில் இப்பாடசாலை தீவக வலய மட்டத்தில் முதலாவது இடத்தையும் பெற்று இருந்தது. கணித விஞ்ஞான பாடங்கள் கற்பித்தலுக்கான தேசிய சான்றிதழ் பெற்ற (கல்வியியல் கல்லூரி ) திரு. கு. கந்தரூபன். திரு. இ.ராஜமுகுந்தன் ஆகியோர் விசேட வகுப்புக்கள் எடுத்து இருந்தனர். வணிக பட்டதாரி ஆசிரியரான திரு. அ. சிவநேசன் பாடசாலைக்கு அண்மையில் தங்கியிருந்தவர். பாடசாலையில் விசேட வகுப்புகள் நடத்துவதோடு இரவில் மாணவர்களை தனது இருப்பிடத்திற்கு அழைத்து வகுப்புக்கள் நடத்தியுள்ளார். இவர் சமூகக்கல்வி. சைவசமயம் போன்ற பாடங்களையும் கற்பித்தவர். உப அதிபர் திருமதி. வி. சங்குணராஜா தமிழ் கற்பித்திருந்தார். தன்னுடைய ஆரம்பக்கல்வி போதனையுடன் மேலதிகமாக தமிழை மாணவருக்கு போதித்து இருந்தார். விசேட வகுப்புக்களும் எடுத்துள்ளனார். சங்கீத பட்டதாரி ஆசிரியரான செல்வி. பொ. தர்சிலா மாணவர்களுடன் கண்டிப்பாக நடப்பார். ஆனால் மாணவர் மீது அன்போடு நடந்தார். சங்கீத பாடத்தையும் மாணவர்கள் நன்றாக செய்திருந்தனர். நாரந்தனையைச் சேர்ந்த செல்வி அ.பொ.றூபினி றோ.க.வுக்கும் கணேசாவுக்கும் மனையியல் ஆசிரியராகத் தொழில்பட்டார். மனையியல் மட்டுமன்றி சித்திரமும் படிப்பித்தார். அயலிலுள்ள கத்தோலிக்க மாணவர்கள் பாடசாலையில் சேர்ந்த போது அவர்தான் றோமன் கத்தோலிக்கம் கற்பித்தார். தொடர்ந்து நாரந்தனையிலேயே பணியாற்றி ஓய்வுபெற விரும்பியிருந்தார். ஆசிரியர் தேசிய இடமாற்றக் கொள்கையினால் இடமாற்றம் பெற்றுச் சென்றுள்ளார்.

அ. வக்சலன் பாடசாலைக்கு விஞ்ஞான ஆசிரியர் இல்லாதிருந்த வேளையில் எவ்வித ஊதியமும் எதிர்பார்ப்பும் இன்றி கணிதம் விஞ்ஞானம் கற்பித்தவர். கணேசாவின் 5ம் தலைமுறை மாணவரான இவர் முழு சேர ஆசிரியர் போன்ற தொழிற்பட்டவர். 2006ஆம் ஆண்டு இராணுவ நடவடிக்கையின் போது சிறிது காலம் யாழ்ப்பாணத்தில் இருந்ததான போக்குவரத்து மட்டுப்படுத்தப்பட்டிருந்தது. யாழ்ப்பாணத்திலிருந்து ஆசிரியர்கள் வருகை

தரமுடியாதிருந்த நேரத்தில் உப அதிபருக்கு உதவியாக இருந்து மாணவர் கல்வி நடவடிக்கையை மேற்கொள்ள உதவியாக இருந்தார். பழைய மாணவர்களையும் பெற்றோர்களையும் பாடசாலை அபிவிருத்தி செயற்பாடுகளில் இணைத்து பாடசாலை முகாமைத்துவத்திற்கு உதவியாக இருந்துள்ளார்.

கணேசா வித்தியாலயத்தினதும் கிராமத்தின் மீளக்குடியமர்வின் பின்னரான அபிவிருத்தியில் அமரர் க.துரைசாமியின் வழிநடத்தல் முக்கியமானது. ஸ்ரேசன் மாஸ்டர் என்றும் கனகலிங்கம் என்றும் அழைக்கப்பட்ட இவர். கணேசாவின் மாணவர் தொகுதியில் முதலாம் தலைமுறையைச் சேர்ந்தவர். ஸ்ரேசன் மாஸ்டர் பணியில் இருந்து ஓய்வுபெற்றபின் நாரந்தனையிலே தொடர்ந்து வசித்து வந்தவர். இராணுவ நடவடிக்கையின் போது கிராம மக்கள் இடம்பெயர்ந்தபோதும் தொடர்ந்தும் நாரந்தனையிலேயே வசித்துவந்தவர். தன்னுடைய புன்சிரிப்பினாலும் சிங்களத்தையும் ஆங்கிலத்தையும் சரளமாகப் பேசும் ஆற்றலாலும் உயரதிகாரிகள், இராணுவத்தினர் போன்றோறோரையும் வசீகரித்தவர். இராணுவத்தினருக்கும் மக்களுக்கும் இடையிலான தொடர்பு இவரினாலேயே பூரணமடைந்தது. தான்தோன்றி மனோன்மணி அம்மன் பரிபாலன சபையின் தலைவராக இருந்து புனரமைப்புப் பணிக்கு உந்துசக்தியாகச் செயற்பட்டவர். நான் பாடசாலை முடிவடைந்த பின்னர் பஸ்சுக்கு காத்திருக்கும்போது அவரது வீட்டிற்கு முன் நிற்கும் வேப்பமரத்தின் கீழ் நின்று பல விடயங்களைக் கதைப்போம். ஊர்காவற்றுறைப் பிரதேசத்தின் எழுதாத பழைய வரலாறுகள் உலக விடயங்கள் சமயம், இலக்கியம் என்று தொடரும். இந்த நடமாடும் நூலகத்திலிருந்து நான் கற்றுக்கொண்ட விடயங்கள் பல.

நாரந்தனையிலே தான்தோன்றியாகக் காட்சி தந்து ஆட்சி புரிந்து கொண்டிருக்கும் மனோன்மணி அம்பாளின் கடாட்சம் துணைநிற்கும். நாம் நூற்றாண்டு விழாக் கொண்டாடும் காலத்திலேயே புனரமைக்கப்பட் அவளது ஆலயமும் குடமுழுக்குப் பெற உள்ளமை அவளுடைய மகிமையைக் காட்டுகின்றது. எனவே பாடசாலையும் துரிதமாக அபிவிருத்தியடையுமென்று நம்பலாம். தும்பிக்கையானின் பெயரைத் தாங்கிய நாம் நம்பிக்கையோடு இருப்போமாக.

**சா.தியாகலிங்கம்**
முன்னைநாள் அதிபர்
யா/நாரந்தனை கணேச வித்தியாலயம்



# அதிபர் சேவையில் மறக்க முடியாத நிகழ்வு

நாட்டில் ஏற்பட்ட அசாதாரண சூழ்நிலை காரணமாக 1990 ஆம் ஆண்டு தீவகத்தில் இயங்கிய பாடசாலைகள் எல்லாம் இடம் பெயர்ந்து யாழ்ப்பாணத்தில் இயங்கத் தொடங்கின. 1997ஆம் ஆண்டு சுமூகமான நிலைமை ஏற்பட்ட பின் தீவகத்திற்கு செல்லக்கூடிய வாய்ப்பு உருவான காரணத்தினால் யாழ்ப்பாணத்தில் தற்காலிகமாக இயங்கிக் கொண்டிருந்த தீவகப் பாடசாலைகள் திரும்பவும் தீவகத்திற்கு செல்லக்கூடியதாக இருந்தது. அந்த வகையில் பாடசாலைகளுக்கு போதிய வசதிகள் இல்லாத காரணத்தினால் சில பாடசாலைகள் கூட்டாகச் சேர்ந்து இயங்கத் தொடங்கின. யா/நாரந்தனை கணேச வித்தியாலயமும் யா/நாரந்தனை றோ.க.மகா வித்தியாலயத்துடன் கூட்டாக இணைந்து இயங்கிக் கொண்டிருந்தது.

இந்த வேளையில் நாரந்தனை கணேச வித்தியாலயத்தின் அதிபர் திடீர் சுகவீனமுற்று யாழ் வைத்தியசாலையில் அனுமதிக்கப்பட்டார். அதன் பின்னர் தற்காலிகமாக இடமாற்றம் பெற்று யாழ்ப்பாணம் சென்றுவிட்டார். அதனால் நாரந்தனை கணேச வித்தியாலயம் யா/நாரந்தனை றோ.க வித்தியாலயத்தின் அதிபர் திரு.த.சத்தியதாசன் அவர்களின் கண்காணிப்பில் இயங்கிக் கொண்டிருந்தது. தீவக மண்ணின் மைந்தரும் அமரருமாகிய திரு.சு.இரத்தினராசா யாழ்ப்பாண வலயக் கல்விப்பணிப்பாளர் அவர்கள் கூட்டாக இயங்கும் பாடசாலைகள் தங்களது சொந்தக் கட்டிடத்தில் தான் இயங்க வேண்டும் என்ற கொள்கையின் அடிப்படையில் பாடசாலைகளுக்கு அதிபர்களை நியமனம் செய்து பாடசாலைககளை தனியாக இயங்குவதற்கான ஏற்பாடுகளைச் செய்து கொண்டிருந்தார். அந்த வகையில் நாரந்தனை கணேச வித்தியாலயத்திற்கு என்னை யா/கோண்டாவில் இராமகிருஸ்ண மகாவித்தியாலயத்திலிருந்து யா/ நாரந்தனை கணேச வித்தியாலயத்திற்கு அதிபராக நியமனம் செய்தார்.

எனது சொந்த ஊராகிய நாரந்தனை வடக்கு கிராமத்தில் தான்தோன்றி மனோன்மணி அம்மனின் அருட் கடாட்சத்தினால் உருவாகிய யா/நாரந்தனை கணேச வித்தியாலயத்தில் அதிபராக கடமையாற்ற கிடைத்தமையையிட்டு பெரும் மகிழ்ச்சி அடைந்தேன். உடனடியாக 1997ஆம் ஆண்டு யா/நாரந்தனை கணேச வித்தியாலயத்தில் அதிபர் கடமையை பொறுப்பேற்றுக் கொண்டேன். கடமையேற்று ஒரு வாரத்தினுள் பெற்றோர்கள், நலன்விரும்பிகள், பழையமாணவர்கள், கிராம அலுவலர் திரு.க.சகாதேவன் ஆகியோரின் கூட்டு முயற்சியால் பாடசாலை புனருத்தாரணம் செய்யப்பட்டு சமய ஆசார முறைப்படி 1998ஆம் ஆண்டு சொந்தக் கட்டிடத்தில் இயங்கத் தொடங்கினேன். இது எனது அதிபர் சேவையில் மறக்க முடியாத ஒரு நிகழ்வாகும். மற்றும் இக் கிராமத்தின் பெற்றோர்கள், நலன்விரும்பிகள், பழைய மாணவர்கள், கிராம அலுவலர் ஆகியோர் எனக்கு அளித்த ஒத்துழைப்பு போற்றத்தக்கதாகும்.

ஆசிரியர்கள், மாணவர்கள் மிக்க மகிழ்ச்சியுடன் தங்களது கற்றல் கற்பித்தல் செயற்பாடுகளில் ஈடுபட்டார்கள். இணைப்பாடவிதான செயற்பாடுகள் சமயநிகழ்ச்சிகள் பரீட்சைகள் கோட்ட வலய மட்ட போட்டிகள் என்பவற்றில் பங்குபற்றி சான்றிதழ்களையும் பெற்றுக் கொண்டார்கள். இந்த வேளையில் முன்னைய அதிபர் திரு.சா.தியாகலிங்கம் தனக்கு யாழ்ப்பாண பாடசாலைகளில் கடமையாற்றுவதற்கு விருப்பமில்லை என்றும் தனது பாடசாலையில் கடமையாற்ற வேண்டும் என கேட்டதற்கு இணங்க எனது பாடசாலையை அவரிடம் ஒப்படைத்துவிட்டு யா/காரைநகர் வலந்தலை தெற்கு அ.மி.த.கலவன் பாடசாலைக்கு அதிபராக இடமாற்றம் பெற்றுச் சென்றேன்.

நூற்றாண்டு நிறைவில் இப்பாடசாலையின் சமூகத்தினர் ஒன்றிணைந்து தமது அன்னையின் புகழை மீளவும் நிலை நிறுத்தும் நிகழ்வாக இவ்விழாவை எடுப்பது மகிழ்ச்சிக்குரிய செயலாகும். இப்பணியில் ஈடுபடும் அனைவரையும் பாராட்டுவதுடன் பற்றுறுதியுடன் வழிகாட்டும் அதிபரையும் வாழ்த்துகிறேன். பாடசாலை மேலும் பல துறைகளிலும் வளர்ச்சி பெற எங்கள் தான்தோன்றி மனோன்மணி அம்மனை வேண்டுகின்றேன்.

"வாழ்க வையகம்
வாழ்க வளமுடன்"

**க.குமரேஸ்வரநாதன் (ஜே.பி)**
ஓய்வு நிலை அதிபர் (தீவகம்)

## இந்து மன்றம்



## ஆரம்பக்கல்வி மன்றம்





# நாரந்தனை - வாழ்வும் வளமும்

யாழ்ப்பாணக் குடாநாட்டில் உள்ள குடியிருப்புக்களில் நாரந்தனை முக்கியதொரு இடத்தை வகித்து வந்துள்ளது. இக்கிராமத்தின் வரலாறு யாழ்ப்பாண இராச்சிய காலத்தைக் கடந்து நிற்கின்றது. போர்த்துக்கேயர் ஆட்சிக்காலத்தில் இக்கிராமம் பலநிலைகளில் கவனயீர்ப்புக்குரியதாக விளங்கியது. போர்த்துக்கேயர் காலத்தின்பின் ஒல்லாந்தர், பிரித்தானியர் ஆட்சிக்காலத்திலும் சுதந்திரத்திற்குப் பின்னைய காலத்திலும் நாரந்தனை விவசாயத்தை தளமாகக் கொண்டு பொருளாதார வளர்ச்சியில் படிப்படியாக முன்னேறி வந்தது. மேலும் இக்கிராமம் கடற்றொழிலாலும், பனைசார் தொழிலாலும் வலுப்பெற்றிருந்தது. ஊர்காவற்றுறை புனித அந்தோனியார் கல்லூரியின் செல்வாக்கால் இங்கு கல்வி கற்றவர் பலர் ஆசிரியர்களாகவும் அரச பணியாளர்களாகவும் விளங்கினர்.

கற்றோர் சிலர் மலேசியா சென்று பெரும் பொருளீட்டி நாடு திரும்பி கிராமத்தில் பெரிய மனைகள் அமைத்துச் செல்வச் செழிப்புடன் விளங்கினர். இக்கிராமத்தின் கத்தோலிக்க சமூகத்தைச் சேர்ந்த பலர் குருவானவர்களாகவும் அருட்சகோதரிகளாகவும் சேவையாற்றி நாரந்தனையின் பெயரை உலகறியச் செய்தனர். சுதேச வைத்தியத்திலும் நாரந்தனை முத்திரை பதித்துள்ளது. வைத்திய கலாநிதி அமரர் சிவராசா , வைத்திய கலாநிதி ஜேம்ஸ் நிக்கிலஸ் (கறுவல் பரியாரி) ஆகிய இருவரும் வைத்தியத் துறையில் புகழ் பத்தவர்களாக விளங்கினர். 1990 வரையில் இக்கிராமம் பல துறைகளில் சிறப்புற விளங்கியது.

1991இல் இடம்பெற்ற யுத்தத்தால் இக்கிராமத்தில் வாழ்ந்த அனைவரும் இடம்பெயர்ந்து யாழ்ப்பாணம் சென்றனர். 1980களின் பிற்பகுதிகளில் ஊர்காவற்றுறை பிரதேசத்தில்

யுத்தம் காரணமாக இடம்பெயர்ந்து நாரந்தனையில் தஞ்சம் புகுந்தவர்கள் மீண்டும் இடப்பெயர்வுக்கு உட்பட்டனர். இடம்பெயர்ந்தவர்கள் யாழ்ப்பாணத்திற்கும் கொழும்பிற்கும் பிறநாடுகளுக்கும் சென்றனர்.

1991ஆம் ஆண்டு ஏப்பிரல் மாதத்திலிருந்து 1996ஆம் ஆண்டு மே மாதம் வரை இக்கிராமம் மக்களற்ற சூனியப்பிரதேசமாக மாறியது. இந்த ஐந்து வருட காலத்தில் கிராமத்தின் வீட்டுத் தொகுதிகளும் பௌதீக கட்டுமானங்களும் பெரும் அழிவுக்குள்ளாகின. மேலும் வாழிடப் பரப்புகள் விவசாய நிலங்கள் மற்றும் ஏனைய நிலங்கள் புதர் மண்டியும் பாம்பு, பட்சிகள் பெருகியும் உடனடியாக மக்களின் மீள்குடியேற்றத்திற்கு உரியதாக அமையவில்லை. 1966 ஆம் ஆண்டு மே மாதத்தில் இருந்து மீள்குடியேற்றம் ஆரம்பிக்கப்பட்டு இன்று 20 வருடங்கள் கழிந்தும் கிராமம் முன்னைய நிலையை அடையவில்லை. அரசும், அரச சார்பற்ற நிறுவனங்களும் பல்வேறு வாழ்வாதாரத் திட்டங்களை முன்னெடுத்த போதும், மறுபக்கத்தில் வீடமைப்பு, வீதி மேம்பாடு, கல்வி, சுகாதாரம், மின்சாரம், தொலைத்தொடர்பு, போக்குவரத்து போன்ற துறைகளில் குறிப்பிடத்தக்க முன்னேற்றங்கள் ஏற்பட்டிருந்த போதும்கூட மீள்குடியேற்றத்தில் முழுமையாக வெற்றி காண முடியவில்லை. எனினும், இன்னும் சில ஆண்டுகளில் நாரந்தனை முன்னேற்ற நிலைக்கு வந்துவிடவேண்டும் என்ற மக்களின் விருப்பும், பிரார்த்தனையும் கைகூடும் என்ற நம்பிக்கை யாவரிடமும் காணப்படுகிறது. தீவுகள், வடக்கு பிரதேச செயலகம் இவ்விலக்கை அடைய அயராது உழைத்து வருவது மகிழ்ச்சிக்குரியது.

இப்பின்புலத்தில் நாரந்தனையின் பௌதீக, சமூக , பொருளியற்பண்புகளை நோக்கலாம்:

நாரந்தனைக் கிராமம் மேற்கில் கரம்பனையும் கிழக்கில் சரவணையையும் தெற்கில் புளியங்கூடலையும் வடக்கில் யாழ்ப்பாணக் கடல்நீர் ஏரியையும் எல்லைகளாகக் கொண்டுள்ளது. இதன் மொத்த நிலப்பரப்பு அண்ணளவாக 7 சதுரகிலோமீற்றர் ஆகும். நாரந்தனை என்ற பொதுவான கிராமப்பரப்புக்குள் பல உபகுடியிருப்புக்கள் இனங்காணப்படுகின்றன. இவை கிராமத்தின் பொதுப்பண்பை கொண்டிருக்கின்றபோதும் தமக்கென சில தனித்துவமான சமூகப் பொருளாதாரப் பண்புகளைக் கொண்டிருக்கின்றன. உதாராப்பிட்டி, துளவிக்குளம், மாவடியாகாடு, செட்டியார் தோட்டம், கண்டைக்காடு, அம்மன்கோவிலடி, குக்குறுணி, தம்பாட்டி, தம்பிரான் தோட்டம், அம்பலபுலம், பெரியபுலம், வீரன்கல், கத்திவயல், நாரந்தனை மத்தி, கொட்டன்காடு, கந்தசாமி கோவில் வீதி, சூரியவத்தை, வண்ணநகர், புதுக்குடியிருப்பு என்பன இக்கிராமத்தின் உப குடியிருப்புக்கள் ஆகும்.

வடமாகாணம் இலக்கம் 16 கிராம விதானை பிரிவு நாரந்தனை 1962 வரைக்கும் ஒரு விதானை பிரிவாக இருந்தது. 1939க்கு முன் இப்பிரிவு சரவணை உடையார் பிரிவுக்கு உட்பட்ட விதானை பிரிவாக இருந்துள்ளது. 1939இல் இலங்கையில் உடையார் பிரிவு முறை நீக்கப்பட்டது கவனத்துக்குரியது. தீவுகள் மணியகாரன் முறையிலும் 1939க்குப் பின்னர் தீவுகள் காரியாதிகாரி (D.R.O) பிரிவிலும் நாரந்தனை குறிப்பிடத்தக்க இடத்தை வகித்து வந்தது. 1962இல் கிராம விதானை முறை ஒழிக்கப்பட்டு கிராமசேவகர் முறை

அறிமுகமான போது நாரந்தனை தனியான ஒரு கிராம சேவகர் பிரிவாக இருந்தது. (N.P.14 நாரந்தனை) இப்பிரிவு 1962இல் இருந்து 1987 வரை எல்லை மாறாமல் இருந்தது. 1987இல் நாரந்தனை (N.P.14) என்ற கிராமம் J/32 நாரந்தனை என்றும் J/33 நாரந்தனை வடக்கு என்றும் இரு பிரிவுகளாக பிரிக்கப்பட்டது. 1990இல் இக்கிராமம் நான்கு கிராமசேவகர் பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டது. அவையாவன, J/55 நாரந்தனை வடக்கு, J/56 நாரந்தனை வடமேற்கு, J/57 நாரந்தனை, J/58 நாரந்தனை தெற்கு ஆகும். இக்கிராமம் தற்போது நிர்வாக ரீதியில் நான்கு கிராம நிலதாரி பிரிவுகளான போதும் கிராமத்தின் பொதுப்பண்பு உறுதியாகக் காணப்படுகின்றது. முன்னைய நான்கு பிரிவுகளும் தீவுகள் வடக்கு பிரதேச செயலகத்திற்கு உட்பட்டவையாகும்.

நாரந்தனைக் கிராமம் உள்ளூராட்சிக் கட்டமைப்பில் ஊர்காவற்றுறைப் பிரதேசசபைக்கு உட்பட்டதாகும். 1951க்கு முன் அன்றைய நாரந்தனைக் கிராமசபை பெரிய ஆட்புலபரப்பைக் கொண்டதாக இருந்ததுடன், கரம்பனிலிருந்து சரவணை, வேலணை, சுருவில், புளியங்கூடல் ஆகிய பகுதிகளை உள்ளடங்கியதாக விளங்கியது. கிராமசபையின் தலைவர்களாக விளங்கிய அமரர்கள் வைத்திய கலாநிதி சிவராசா மற்றும் கைத்தொழில் அதிபர் சண்முகலிங்கம் அவர்களின் ஆளுமை, சேவைகள் என்றும் நினைவுகூரத்தக்கவை. 1952இல் நாரந்தனை கிராமசபை, நாரந்தனை, வேலணை என இரு கிராமசபைகளாகப் பிரிக்கப்பட்டது. 1980 இல் மாவட்ட அபிவிருத்திச்சபை உருவாக்கப்பட்டு அதன் கீழ் பட்டினசபை , கிராமசபை உள்வாங்கப்பட்டன. இத்திட்டம் தோல்வியில் முடிய பட்டின சபைகளையும் கிராமசபைகளையும் உள்வாங்கிய பிரதேசசபைகள் நாடெங்கும் உருவாகின. இந்நிலையில் இன்றைய ஊர்காவற்றுறை பட்டினசபை நாரந்தனை கிராமசபை அனலைதீவு கிராமசபை எழுவைதீவு கிராமசபை ஆகியவற்றை உள்ளடங்கியதாக இருக்கின்றது. முன்னைய நாரந்தனை கிராமசபை ஊர்காவற்றுறை பிரதேசசபைக்குள் ஒரு உபகாரியாலயமாக இன்றும் இயங்கி வருகின்றது

நாரந்தனைக் கிராமத்தின் பௌதீக நிலத்தோற்றத்தை நோக்குகையில் இது ஒரு சமதரையாக இருப்பினும் இதன் மையப்பகுதி சிறு உயரம் கொண்ட நீர்ப்பிரிவு மேடாக உள்ளது. மழைக்காலங்களில் இப்பிரிவுக்கு தெற்கில் உள்ள பிரதேசத்து நீர் தெற்கு நோக்கிப் பாய்ந்து சுருவில் குடாக்கடலை சென்றடைகின்றது. இந்நீர்ப்பிரிவு மேட்டிலிருந்து வடக்காகப் பாயும் நீர் வடக்கு றோட்டைக் கடந்து யாழ்ப்பாணக்கடல் நீர் ஏரியை அடைகின்றது. யாழ்ப்பாணக் கடல்நீரிக்கும் வடக்கு நாரந்தனை குடிமனைகளுக்கு இடையில் தரவை நிலம் காணப்படுகின்றது. இத்தரவை நிலம் மாரிகாலத்தில் நுண் வெள்ளச் சமவெளியாகக் காணப்படும். இக்கிராமத்தில் குடிமனைகள் காணப்படும் இடங்கள் ஒப்பீட்டு ரீதியில் இயற்கையாக, சற்று உயரமான பகுதிகளாக உள்ளன. தோட்ட நிலங்களினதும் மற்றும் பல வீடுகள் அமைந்துள்ள நிலங்களினதும் நிலப்பயன்பாட்டு வரலாற்றை ஆராயின் இவைகளில் பெரும்பாலானவை ஆரம்பத்தில் வயல் நிலங்களாக இருந்து, பின் கொட்டு மண் இட்டு தோட்ட நிலங்களாக, மேட்டு நிலங்களாக மாற்றமுற்றவையாகும். 1970 களில் மிளகாய்ச் செய்கையின் வருமானத்தால் பல நெற்காணிகள் கொட்டு மண் இட்டு மேட்டுநிலங்களாயின. இதனால் வயல் நிலங்களின் தொடர்ச்சிப்பாங்கு இல்லாது

போயிற்று. 1991க்குப் பின் வயல், தோட்ட நிலங்கள் வரம்பு கட்டி பாதுகாக்கப்படாமையால் மேட்டுநிலங்கள் தொடர்ச்சியான மண்ணரிப்புக்கு உட்பட்டு, அயற்பகுதி வயல் நிலங்களின் உயரம் மாறியுள்ளன.

நாரந்தனையில் சிறு சிறு குளங்கள் காணப்படினும் வடக்கு றோட்டில் கிழக்கு, மேற்காக நீண்டு காணப்படும் இலந்தைக்குளம் முக்கியமானதொரு நீர்நிலையாகும். இக்கிராமம் நல்ல பருவகால தரைக்கீழ் நீர்வளத்தைக் கொண்டதாகும். ஒக்டோபரில் இருந்து மே வரை இது குடிநீர்த்தேவை, வீட்டுத்தேவை, விவசாயத்தேவைகளை பூர்த்தி செய்யக்கூடிய ஆதாரத்தைக் கொண்டுள்ளது. மே தொடக்கம் செப்டெம்பர் வரையான ஆறுமாத காலப்பகுதியில் இக்கிராமத்தின் நீர்வளம் ஓரளவு குடிநீர்த்தேவைகளையும், வீட்டுத்தேவைகளையும் பூர்த்தி செய்யும் நிலையில் உள்ளது. இன்று நீரில் உவர்த்தன்மை, பிற மாசுக்களும் அதிகரித்ததால் தரமான குடிநீர் பெறுவது பிரச்சனையாக உள்ளது. இரணைமடு - யாழ்ப்பாணக் குடிநீர்த்திட்டத்தின் மூலம் இக்கிராமம் நன்னீரைப் பெறமுடியும்.

1952இல் ஊர்காவற்றுறைக் குடிநீர் திட்டத்திற்கே தேவையான நீர் நாரந்தனையில் அமைக்கப்பட்ட கிணறுகளில் இருந்தே பெறப்பட்டது. இன்று அத்திட்டம் கைவிடப்பட்டு ஊர்காவற்றுறைக் குடிநீர் திட்டத்திற்கான நீர் சாட்டி, அல்லைப்பிட்டியிலிருந்து பெறப்படுகின்றது. இரணைமடு-யாழ்ப்பாணக் குடிநீர்த்திட்ட நீர்த்தாங்கி, நாரந்தனையின் முன்னைய நீர் விநியோகத்திட்டப் பகுதியில் அமைக்கப்பட்டது குறிப்பிடத்தக்கது.

**மக்கள் தொகை**

1991 ஆம் ஆண்டு இடப்பெயர்வும், யுத்தமும் ஏற்பட்டிருக்காவிடில் இக்கிராமத்தின் மக்கள் தொகை 10,000 ஐ அண்மித்து இருக்கும். இன்று நாரந்தனையில் வாழும் மக்களின் எண்ணிக்கை 3000 ஐ எட்டியுள்ளது. இவ் எண்ணிக்கை உலகின் பல பகுதிகளில் வாழும் நாரந்தனையை பின்புலமாகக் கொண்ட மக்களில் மூன்றில் ஒன்றாகும். இலங்கைக் குடிசனக் கணிப்பின் படி நாரந்தனையின் குடிசனம் பின்வருமாறு.

| கிராமம் | ஆண்டு | குடிசனம் | குடிசனமாற்றம் |
|---|---|---|---|
| நாரந்தனை | 1911 | 1785 | - |
| | 1921 | 1969 | +184 |
| | 1946 | 2743 | +774 |
| | 1963 | 3749 | +1006 |
| | 1971 | 4141 | +342 |
| | 1981 | 4680 | +539 |
| | 2012 | 2570 | -2110 |
| | 2016 | 3000 | +430 |

1911ஆம் ஆண்டிலிருந்து 8 குடிசன கணிப்புகளுக்குரிய தரவுகள் மேலே தரப்பட்டுள்ளன. 1981 இல் 4680 பேர் நாரந்தனையில் இருந்துள்ளனர். 1981 - 2016 இடைப்பட்ட 35 வருட காலத்தில் 2மூ வருடாந்த இயற்கை அதிகரிப்பு ஏற்பட்டு இருப்பின் கிராமத்தின் மக்கள் தொகை இரட்டிப்பாக இருக்கும். 2016ஆம் ஆண்டில் 1946இல் இருந்த மக்கள் தொகையையே பெற்றிருக்கின்றது. மக்கள் தொகை அதிகரிப்பு கருவள வீழ்ச்சியாலும் இடப்பெயர்வுகளாலும் பாதிக்கப்பட்டுள்ளது.

கிராம நிலதாரி பிரிவுகள் அடிப்படையிலும் மத அடிப்படையிலும் 2012 ஆம் ஆண்டு குடித்தொகை விபரம் பின்வருமாறு.

| கிராம நிலதாரி பிரிவு இலக்கம் | கிராம நிலதாரி பிரிவு | மக்கள் தொகை | இந்துக்கள் | கத்தோலிக்கர் | ஏனைய மதத்தவர்கள் |
|---|---|---|---|---|---|
| 55 | நாரந்தனை வடக்கு | 327 | 64.22 | 33.02 | 2.76 |
| 56 | நாரந்தனை வடமேற்கு | 1065 | 84.74 | 14.74 | 0.85 |
| 57 | நாரந்தனை | 564 | 23.40 | 76.42 | 0.18 |
| 58 | நாரந்தனை தெற்கு | 614 | 2.93 | 96.25 | 0.82 |
| | | 2570 | | | |

நாரந்தனை வடமேற்கு பிரிவில் குறிப்பாக தம்பாட்டியில் மக்களின் மீள்குடியேற்றம் உயர்வாக இருக்கின்றது. மற்றைய பிரிவுகளில் மீள்குடியேற்றம் குறைவாக உள்ளது. மேல்வகுப்பு, நடுத்தர வகுப்பு பிரிவினரின் மீள்குடியேற்றம் குறைவாக இருக்கின்றது. நான்கு பிரிவுகளிலும் குடியேறிய மக்களில் மிகப்பெரும்பான்மையினர் வறியமக்களாகவும், வாழ்வாதாரத்திற்கு போராடுபவர்களாகவும் இருக்கின்றனர்.

இந்துக்களும் கத்தோலிக்கர்களும் ஏறக்குறைய சமனாக குடிசன விகிதாசாரத்தைக் கொண்டுள்ளனர். இவர்களிடையே நல்ல சமய - சமூக உறவுகள் காணப்படுகின்றன. மேலும் இவர்கள் சமயத்தால் வேறுபட்டாலும் உறவுக்காரர்கள் என்பது குறிப்பிடத்தக்கது. நாரந்தனை வடக்கு, நாரந்தனை வடமேற்கில் இந்துக்கள் பெரும்பான்மையாகவும் நாரந்தனை மற்றும் நாரந்தனை தெற்கில் கத்தோலிக்கர் பெரும்பான்மையாகவுள்ளனர். வடக்கு - தெற்கு வீதி இடைப்பட்ட பகுதி கத்தோலிக்க செல்வாக்குப்பகுதியாக இருக்க வடக்கு றோட்டுக்கு வடக்கேயுள்ள பகுதிகள் இந்துக்கள் அதிகமாகவுள்ள பகுதியாக உள்ளன.

**இன்றைய பொருளாதாரம்**

1996இல் மீளக்குடியேற்றம் ஆரம்பமான காலம் தொடக்கம் அழிந்துபோன கிராம பொருளாதாரத்தை மேம்பாடு செய்வதில் அரச, அரச சார்பற்ற நிறுவனங்கள் பங்கு

கொண்டன. அரசாங்கம் வாழ்வாதார உதவிகளுடன் விவசாய விஸ்தரிப்பு, கமநல சேவைகள் மூலம் வாழ்வாதார மேம்பாட்டு செயற்பாடுகளை முன்னெடுத்தது. விவசாயதுறையில் புகையிலைச் செய்கை முன்னெடுக்கப்பட்டபொழுதும் முன்னையநிலையை அடைய முடியவில்லை. நெற்செய்கை பெருமளவு கைவிடப்பட்ட நிலையிலேயே காணப்படுகின்றன. பெருமளவு நெற்செய்கை நிலங்களில் எருக்கு தாவரங்கள் மிகவும் பரவலாக காணப்படுகின்றது. சமுர்த்தி திட்டங்கள் மூலமும், வாழ்வின் எழுச்சி திட்டங்கள் மூலமும் சில செயற்திட்டங்கள் முன்னெடுக்கப்பட்டு வாழ்வாதாரம் மேம்படுத்தப்பட்டு வறுமை நிலைமை தணிக்கப்பட்டுள்ளது.

மீன்பிடித்தொழிலில் தம்பாட்டி மக்கள் சிறப்புற செயற்படுகின்றனர். இங்கு UNDP உதவியுடன் நண்டு பதனிடல் நிலையம் இயங்குகின்றது. தம்பாட்டி மீனவர்களின் மீன்பிடி கடற்பரப்பு மிகச்சிறியதாக இருப்பதால் இவர்களின் தொழில் விருத்திக்கு தடையாக இருக்கின்றது. எனினும் இக்கிராமத்தவர்களில் பலர் மீன்பிடியுடன் விவசாயத்தையும் மேற்கொள்வதால் வாழ்வாதாரநிலை மேம்படுத்தக் கூடியதாக இருந்தது. இக்கிராமத்தில் சங்கங்கள், சபைகள் சிறப்பாக இயங்கியதால் அரசு, அரச சார்பற்ற நிறுவனங்களிடம் இருந்து உதவிகளைப் பெற்றுள்ளன. இக்கிராமம் அரசியல் ரீதியாகவும் நிர்வாக ரீதியாகவும் கவனம் ஈர்க்கப்படுகின்றது. தங்களை மேம்படுத்த பல முயற்சிகள் மேற்கொண்டு ஓரளவு வெற்றியும் பெற்றுள்ளன. இன்று இக்கிராமம் பஸ் சேவை, மின்சாரம், நல்ல பாடசாலை, சிறப்பான வழிபாட்டுத்தலம் மற்றும் பல சேவைகளைப் பெற்று இயக்கமான கிராமமாக மாறியுள்ளது.

நாரந்தனையில் பனையை நம்பி வாழும் சமூகம் இருக்கின்றது. இச்சமூகத்தின் வளர்ச்சி பனை அபிவிருத்திச்சபை, UNDP உதவியுடன் பனம்பொருள் உற்பத்தி நிலையம் உருவாக்கப்பட்டுள்ளது. இதனால் புதிய தொழில் வாய்ப்புக்கள் வளர வழி பிறந்துள்ளது.

வடக்கு றோட்டு காப்பற் வீதியாக மாற்றப்பட்ட பின்னர் இக்கிராமம் குறிப்பாக வடறோட்டு நாரந்தனை மக்கள் யாழ்ப்பாண நகருடனும் ஊர்காவற்றுறை நகருடனும் மிகவும் இலகுவாகவும், இறுக்கமாகவும் இணைக்கப்பட்டுள்ளன. யாழ்ப்பாண நகரில் வேலை செய்வோர் இன்று மிகவும் குறுகிய நேரத்தில் மிகவும் சௌகரியமாகப் பயணம் செய்கின்றனர். இதனால் மீள்குடியேற்றம் துரிதமடைய வாய்ப்புண்டு. 777, 778 பேருந்து வழித்தடங்களில் இ.போ.ச சேவையும், தனியார் பஸ் சேவையும் சிறப்பாக இருக்கின்றது. தெற்கு றோட்டும் காப்பெற் வீதியாக மாற்ற நடவடிக்கைகள் இடம்பெற்றுக்கொண்டிருக்கின்றன. 780 பேருந்து வழித்தடங்களில் பஸ் சேவை மிகவும் சிறப்பாக இருக்கின்றது. வீதி திருத்திய பின் பிரயாணம் மேலும் வசதியாக அமையும். மக்கள் கோரிக்கைவிட்டால் 779 வழித்தடங்களில் மீண்டும் பஸ்சேவை ஆரம்பிக்கக் கூடிய வாய்ப்புண்டு.

நாரந்தனை தற்பொழுது மீள்குடியேற்ற செயற்பாட்டுடன் போராடிக்கொண்டு இருந்தாலும் எதிர்காலம் சிறப்பாக இருக்கும் என எதிர்பார்க்கலாம். யாழ்ப்பாண நகரின் வளர்ச்சியும், நகரின் இடநெருக்கடியும் நாரந்தனை போன்ற கிராமங்கள் மீள் எழ வாய்ப்பைக் கொடுக்கும். தற்பொழுது முன்வைக்கப்பட்டுள்ள Jaffna Lagoon front

யாழ்ப்பாண கடல்நீர்முகப்பு அபிவிருத்தித் திட்டத்தின் மூலம் நாரந்தனை, சரவணை, மண்கும்பான், அல்லைப்பிட்டி அபிவிருத்தி பெறுவதற்கு வாய்ப்புள்ளது. வடக்கு றோட்டு மாத்திரம் அல்ல தெற்கு றோட்டும் காப்பெற் வீதியாக இருக்கின்றது. யாழ்ப்பாணம், இரணைமடு குடிநீர் திட்டத்தில் நாரந்தனை பயன்பெறவுள்ளது. இத்தகைய சாதகமான சூழ்நிலையில் நாரந்தனைக்கு நல்ல எதிர்காலம் உண்டு. இதற்கு சில நடவடிக்கைகள் முன்னெடுக்கப்பட வேண்டும்.

I. இக்கிராமத்தின் இயற்கைவளம், பௌதீகவளம், மனிதவளம், நதிவளம், சமூகவளம் ஆகியவற்றை உச்சமுறையில் பயன்படுத்த முயற்சிக்க வேண்டும்.

II. தற்பொழுது பயன்படுத்தப்படாது இருக்கும் நிலங்களை விவசாய நடவடிக்கைகளுக்கு உட்படுத்த வேண்டும்.

III. அழிவுக்குட்பட்டு இருக்கும் வீடுகள்/வதிவிடங்கள் துரித கதியில் திருத்தி மேம்படுத்த வேண்டும்.

IV. ஊர்காவற்றுறை நகருக்கும் - தம்பாட்டிக்கும் இடையில் கரையோர வீதி அமைக்கப் பட்டால் இரு குடியிருப்புக்களும் நன்மை பெறும்.

V. தம்பாட்டி மகா வித்தியாலயம், கணேச வித்தியாலயம், நாரந்தனை மகா வித்தியாலயம் (RCTMS) ஆகிய மூன்று பாடசாலைகளின் ஆற்றல் மேம்படுத்த வேண்டும்.

VI. நாரந்தனையில் ஒரு மக்கள் வங்கிக் கிளை அமைக்கப்படவேண்டும்.

VII. தம்பாட்டி - சரவணை கடற்கரையோரத்தில் சுற்றுலா ஹோட்டல் அமைக்க வாய்ப்புண்டு.

VIII. நாரந்தனையில் நுண்நீரோந்து பரப்பு முகாமைத்துவம் என்ற நோக்கில் இலந்தைக்குளம் விருத்தி செய்யப்பட வேண்டும்.

IX. நாரந்தனையில் காணப்படும் கலை/ இலக்கிய ஆற்றல்கள் மேம்படுத்த வேண்டும்.

X. இளைஞர்கள், பெண்கள், முதியவர்களின் வாழ்வை மேம்படுத்த ஒவ்வொரு பிரிவினருக்கும் பொருத்தமான செயற்பாடுகள் முன்னெடுக்கப்பட வேண்டும்.

நாரந்தனையில் இன்றைய பிரச்சனைகளில் இருந்து விடுபட நல்ல தூரநோக்கும், சிறந்த பணியும், இலக்குகளும், இலக்குகளையடைய சரியான திறமுறைகள், சிறந்த, உயர்ந்த நெறிப்படுத்தல்களுடன் அபிவிருத்தியை முன்னெடுப்பின் குறுகிய காலத்தில் புதிய கிராமத்தை காணலாம். எல்லோரும் இணைந்து செயற்படின் குறுகிய காலத்தில் கிராமத்தை மாற்றிவிடலாம். இதுவே தருணம் இணைந்து செயற்பட்டு புதுவாழ்வு காண்போம்.

**பேராசிரியர் பொ. பாலசுந்தரம்பிள்ளை PhD Durham**
வாழ்நாட் பேராசிரியர் முன்னாள் துணைவேந்தர்



# தீவக பிரதேச கல்வி நிலை - அன்றும் இன்றும்

மிக நீண்ட கல்விப் பாரம்பரியத்தைக் கொண்ட தீவகப் பிரதேசம் கடந்த மூன்று தசாப்த காலமாக கல்வி நிலையில் பின் தங்கிக் காணப்படுவது பற்றி பல்வேறு மட்டங்களில் பரிமாறப்படும் விடயமாக காணப்படுகின்றது. ஐரோப்பியர் வருகைக்கு முன்னர் இப்பிரதேசத்தில் முறை சாராத கல்வி அமைப்பு இருந்துள்ளது பற்றி தீவகம் தொடர்பான வரலாற்றுக் குறிப்புக்களிலும் செவிவழிச் செய்திகள் மூலமும் அறிய முடிகின்றது. ஐரோப்பியர் வருகையின் பின்னரும் கூட திண்ணைப்பள்ளிகள், நிலாப்பள்ளிகள், குருகுலப்பள்ளிகள், கோவில்சார்பள்ளிகள், போன்றன இக்கிராமங்களில் செயற்பட்டுவந்துள்ளன பற்றி அறியமுடிகின்றது. குறிப்பாக பிரித்தானியர் வருகையைத் தொடர்ந்து படிப்படியாக அவர்களால் முறை சார்கல்வி நிலை முன்னெடுக்கப்படலாயிற்று. இவை தத்தம் சமயம் சார்ந்த நிலையுடன் இறுக்கமாக பிணைக்கப்பட்டதாக காணப்பட்டிருந்த போதிலும் காலப் போக்கில் முறை சார் கல்வி முறை விரைவாக மக்கள் மயப்படுத்தப்பட்ட நிலையில் தீவகத்தின் கல்வி வளர்ச்சியில் ஏனைய பிரதேசங்களைப் போல மாற்றம் ஏற்படலாயிற்று எனலாம். இவற்றிற்கு றோமன் கத்தோலிக்கப்பாடசாலைகள், இந்துப் பாடசாலைகள், அமெரிக்கன் மிசன் பாடசாலைகள், அரசினால் காலத்துக்குக்காலம் தேவைக்கேற்ப நிறுவப்பட்ட பாடசாலைகள் என்பன பெரும் பங்காற்றியுள்ளன.

தீவக பிரதேசத்தில் பல தீவுகள் உள்ளடங்கியிருக்கின்ற போதிலும் மக்கள் வாழும் தீவுகளாக நெடுந்தீவு, நயினாதீவு, அனலைதீவு, எழுவைதீவு, புங்குடுதீவு, லைடன்தீவு, மண்டைதீவு, காரைநகர் ஆகிய எட்டுத்தீவுகள் உண்டு. இத்தீவுகள் நிர்வாக ரீதியாக நான்கு பிரதேச செயலர் பிரிவுகளைக் கொண்டும் கல்வி நிர்வாக ரீதியாக தீவக கல்வி வலயம் என்ற ஒரு பிரிவாகவும் பிரிக்கப்பட்டு நிர்வகிக்கப்பட்டு வருகின்றது.

இப்பிரதேசத்தின் மொத்தக் குடித்தொகை 43696 ஆகவுள்ளது. இத்தகைய பின்னணியைக் கொண்டு கொண்டுள்ள தீவகத்தில் 1991ம் ஆண்டு வரை 76 பாடசாலைகள் இயங்கிய நிலையில் 2016ம் ஆண்டு 63 பாடசாலைகள் மட்டுமே இயங்கி வருகின்றது.

**அட்டவணை I**

**தீவகப்பாடசாலைகள் 1996 - 2016**

| பாடசாலைகள் | 1996 | 2016 |
|---|---|---|
| இந்துப்பாடசாலைகள் | 37 | 29 |
| கத்தோலிக்கப்பாடசாலைகள் | 14 | 14 |
| அமெரிக்கன் மிசன் பாடசாலைகள் | 08 | 05 |
| அரசினால் நிறுவப்பட்ட பாடசாலைகள் | 17 | 15 |
| மொத்தம் | 76 | 63 |

**ஆதாரம் : வேலணை கல்வி வலய குறிப்பேடு**

பாடசாலைகள் தேசிய மயமாக்கப்படும் வரை மத ரீதியாக நிறுவப்பட்ட பாடசாலைகள் மத ரீதியிலமைந்த நிர்வாகக் கட்டமைப்புடன் கூடிய பாடசாலைகளாக இருந்துள்ள போதிலும் மதப்பாகுபாட்டினை பெருமளவிற்கு உட்படுத்தாத நிலையில் மாணவர்கள் கல்வி கற்கும் நிலை காணப்பட்டிருந்தது. பொதுவாக கிறிஸ்தவம் சார் முறைசார் பாடசாலைகள் பெரும்பாலும் 1850 - 1925ம் ஆண்டுகளிடையில் ஆரம்பிக்கப்பட்டதாக வரலாற்றுக்குறிப்புக்கள் தெரிவிக்கின்றன. (கலை மலர் 1975, ஊர்காவற்றுறை கல்வி வட்டார ஆசிரியர் சங்கம்) இருப்பினும் புதிய குடியேற்றப்பிரதேசமான மெலிஞ்சிமுனை றோமன் கத்தோலிக்க பாடசாலை 1953ம் ஆண்டே நிறுவப்பட்டது என்பது குறிப்பிடத்தக்கது.

இதே வேளை சைவப்பிள்ளைகளின் கல்வி வளர்ச்சியில் ஆர்வம் கொண்ட சைவசமயிகளும், சைவவித்தியா விருத்தி சங்கத்தினரும் (Hindu Board) தீவகத்தில் 37 பாடசாலைகளை நிறுவினர். இப்பாடசாலைகள் பெரும்பாலும் 1900 - 1935ம் ஆண்டுகளிடையில் நிறுவப்பட்ட போதிலும் காலப் போக்கில் சைவ வித்தியாவிருத்திச் சங்கத்தின் நிர்வாகத்தின் கீழ் கொண்டுவரப்பட்டன. இவை தவிர தீவகத்தில் அமெரிக்கன் மிசனரிமாரினால் பல பாடசாலைகள் நிறுவப்பட்டபோதிலும் 1991ம் ஆண்டில் 08 பாடசாலைகள் இயங்கிய நிலையில் 2016ம் ஆண்டு 05 பாடசாலைகள் மட்டுமே இயங்கி வருகின்றன. இவை தவிர அரசினால் காலத்துக்குக்காலம் அதிகரித்து வரும் மாணவர்கள் நலன் கருதி 17 பாடசாலைகளை நிறுவிய போதிலும் 2016ல் 15 பாடசாலைகள் மட்டுமே இயங்கும் நிலையில் உள்ளது. எது எவ்வாறெனினும் அனைத்துப்பாடசாலைகளும் அரசுடமையாக்கப்பட்ட நிலையில் அரச நிர்வாகத்தினால் நிர்வகிக்கப்படுகின்றது. இவ்வாறாக நிறுவப்பட்ட பாடசாலைகள் யாவும் தீவக மாணவர்களின் கல்வி நிலையை மேம்படுத்த ஆரம்பிக்கப்பட்ட காலத்திலிருந்து செயற்பட்டு வந்தமை பற்றி பாடசாலைகளின் வரலாற்றுக் குறிப்புக்கள் மூலம் அறிய முடிகின்றது.

1980கள் வரை மேற்குறித்த பாடசாலைகளில் பயின்ற மாணவர்களின் திறமை, குடும்ப சூழல், ஆசிரியர்களின் தன்னலமற்ற, அளப்பரிய சேவை போன்றவற்றினூடாக மாணவர்களின் கல்விப் பாரம்பரியத்தின் வளர்ச்சி தொடர்ந்து வந்துள்ளதை காணமுடிகின்றது. 1940கள் வரை தீவகத்தில் சில ஆங்கிலப்பாடசாலைகள் இயங்கிய போதிலும் பெரும்பாலான பாடசாலைகளில் சுய பாஷா கல்வியே முக்கிய இடத்தில் இருந்திருக்கின்றது.

19ம் நூற்றாண்டின் இறுதி வரையில் கிறிஸ்தவ பாடசாலைகளிலே முறைசார் கல்வி முறைமை காணப்பட்டிருந்த நிலையில் தீவகத்தில் கணிசமானோர் பல்வேறு விட்டுக் கொடுப்புக்களுடன் அப்பாடசாலைகளில் கல்வி பயின்று குறிப்பாக ஆங்கிலக்கல்வியுடன் கூடிய நிலையில் நாட்டின் பல பாகங்களில் அரச, அரச சார்பற்ற நிறுவனங்களில் தொழிலாற்றும் வாய்ப்பினைப் பெற்றிருந்தனர். 20ம் நூற்றாண்டின் ஆரம்பத்திலிருந்து சைவப் பெரியோர்களின் பெருமுயற்சியினால் தீவகம் முழுவதும் 37 பாடசாலைகள் நிறுவப்பட்ட நிலையில் போட்டி மனப்பான்மையுடன் கூடிய வகையில் பாடசாலைக்கல்வியில் பெற்றோர், மாணவர்கள் ஆர்வம் கொண்டிருந்த நிலையில் தாய் மொழிக்கல்வியூடாக ஒவ்வொரு குடும்பத்திலும் கல்விக்குக் கொடுக்கும் முக்கியத்திற்கேற்ப பிள்ளைகள் பாடசாலைக்கு செல்லும் நிலை காணப்பட்டிருந்தது.

**புதிய ஆசிரியர் பரம்பரையின் தோற்றம்**

20ம் நூற்றாண்டின் ஆரம்பத்திலிருந்து சைவப்பெரியார்களினால் சைவப்பாடசாலைகள் நிறுவும் ஆர்வம் கொண்டிருந்த போதிலும் முறைசார் கல்வியை மாணவர்களுக்கு புகட்டுவதற்கேற்ற ஆசிரியர் பரம்பரை பெரியளவில் காணப்பட்டிருக்கவில்லை. இதே வேளை கிறிஸ்தவ பாடசாலைகளில் கற்ற மாணவர்கள் மதம் சார்ந்த நிலையுடன் ஆங்கில மொழியூடான கல்வியினைப் பெற்றதன் விளைவாக கணிசமானோர் தென்னிலங்கையில் தொழில் வாய்ப்பினை பெறும் நிலை காணப்பட்டிருந்தது. இவர்களில் சிலர் பாடசாலைகளில் ஆசிரியர்களாக கடமையாற்றியதுடன் சமூகப் பணியினையும் செய்து வந்துள்ளனர் என்பதற்கு தீவகத்தில் பல சான்றுகள் உண்டு. இவர்கள் தத்தம் கிராம வரலாற்றில் தற்போது நீங்காத இடத்தினையும் பெற்றிருக்கின்றனர் என்றால் மிகையாகாது நெடுந்தீவு, புங்குடுதீவு, நாரந்தனை சுருவில், ஊர்காவற்றுறை, கரம்பன் போன்ற கிராமங்களில் இத்தகைய ஆசிரியர்கள் சமூக, சமய கல்விப் பணியினை வழங்கியுள்ளதுடன் இன்றைய சமூகத்தவர்களினாலும் போற்றப்படுவதை காணமுடிகின்றது.

சைவப்பாடசாலைகள் பல தோற்றம்பெறும் போது அவற்றிற்கான ஆசிரியவளத்தினைப் பெற்றுக் கொள்வதில் ஸ்தாபகர், முகாமையாளர்களுக்கு சவால்கள் பல காணப்பட்டிருந்தன. கணிசமான ஆசிரியர்களை வெளியிலிருந்தே பெற வேண்டியிருந்தது. பல பாடசாலைகளின் வரலாற்றுக் குறிப்புக்களிலிருந்து இவற்றினை அறிந்து கொள்ள முடிகின்றது. எனினும் 20ம் நூற்றாண்டின் முதல் கால் பகுதிகளிலிருந்து சைவப்பாடசாலைகள் மற்றும் கிறிஸ்தவ பாடசாலைகளில் கற்ற சைவ சமயத்தைப் பின்பற்றுபவர்கள் பலர் ஆசிரியர்களாக உள்வாங்கப்படும் வாய்ப்பு கிட்டியது இதனால் தீவகத்தில் பாடசாலைகள்

நிறுவும் போது குறிக்கப்பட்ட கிராமத்தைச் சேர்ந்த ஆசிரியர் குழாத்தை சேவையில் அமர்த்தும் வாய்ப்புக்கிடைத்தது. இவர்கள் ஆரம்பத்தில் வேட்டி, சால்வையுடனே பாடசாலைக்கு சென்று கற்பித்தனர். காலப் போக்கில் "வெள்ளைவேட்டி நஷனல்" உடையே ஆசிரியர்களின் தேசிய உடையாக மாறியது. இத்தகைய ஆசிரியர்கள் கல்விப் பணியுடன் தமது கடமையை நிறைவு செய்திருக்கவில்லை. கிராமத்தில் மதிப்பார்ந்த உயர்நிலையில் காணப்பட்டனர். தாம் சார்ந்த கிராமத்திற்கு வழிகாட்டியாகவும், உத்தியோகப்பற்றற்ற நீதவான்களாகவும் சமயவளர்ச்சியில் நாட்டம் கொண்டவர்களாகவும் ஆலய பரிபாலனசபைகளில் முக்கியஸ்தர்களாகவும் கிராம வளர்ச்சியை முன்னெடுத்துச் செல்வதற்கு மன்றங்கள், சங்கங்களை ஏற்படுத்தி செயற்பட்டவர்களாகவும் கூட்டுறவு சங்கத்தலைவர்களாகவும் காணி தொடர்பான பிரச்சினைகளைத் தீர்ப்பவர்களாகவும், சோதிடத்தில் விற்பன்னர்களாகவும் மாணவர்களின் கல்வி மற்றும் அவர்கள் தம் ஒழுக்கங்களுக்கு அப்பால் பெற்றோரின் சீரிய வாழ்வுக்கு வழிகாட்டியாகவும் அதற்குமேலாக அவ்வக்கிராமங்களில் கிராமச்சங்கங்களுக்கு தலைவர்களாகவும் இருந்து கிராமத்தினை முன்னேற்றும் அச்சாணிகளாக செயற்பட்டுள்ளனர். இதற்கு விதி விலக்குகளும் இல்லாமலில்லை. மேலும் கிராமத்துப்பிள்ளைகள் ஒவ்வொருவரினதும் நலனில் அக்கறை கொண்டிருந்தனர். மாணவர்களின் எதிர்காலம் தொடர்பாக பெற்றோருக்கு ஆலோசனை கூறி வழிப்படுத்தியும் வந்துள்ளனர். குறிப்பாக அத்தகைய ஆசிரியர்கள் வழியால் வருகின்றார் என காணின் மாணவர்கள் மரியாதையுடன் வணக்கம் கூறி வழிவிட்டுச் செல்லும் சந்தர்ப்பங்களையும் காணக் கூடியதாக இருந்தது. அத்தகைய ஆசிரியர்கள் தமது ஆசிரியத்துவத்தினை மேம்படுத்துவதற்கு தம்மையும் கல்விப் புலத்தினூடாக உயர்த்தியுள்ளனர். குறிப்பாக பண்டிதர், வித்துவான் பல்கலைக்கழக கல்வி போன்ற கற்கை நெறியினை மேற்கொண்டு தமது அறிவுத் திறனை நூல்கள், சொற்பொழிவுகள் கோவில்களில் பாராயணம் செய்தல், நாடகங்களை அரங்கேற்றல் போன்றவற்றினூடாக வெளிக் கொணர்ந்துமுள்ளனர்.

இத்தகைய ஆசிரிய பரம்பரையினர் 1960வரை நஷனல் வேட்டியுடன் நம்மிடையே உலாவிய நிலையில் கணிசமான ஆசிரியர்கள் தமது பிள்ளைகளை நகரப்பாடசாலைகளில் கற்பதற்காக அனுப்பியதன் பெறுபேறாக அவர்களது வாரிசுகள் கல்வி, தொழில் வாய்ப்புக்களில் சிறந்தவர்களாக வரக்கூடியதாக இருந்துள்ளது இவ்வாசிரியர்கள் மட்டுமல்லாது வசதி படைத்த பெற்றோர்கள் தமது பிள்ளைகளை நகரப்பாடசாலைகளுக்கு அனுப்பும் நிலை அக்காலங்களில் காணப்பட்டிருந்தது. இவ்வாறான தற்சார்பு சுயநலம் இவர்களிடையே இருந்தபோதிலும் பாடசாலை ஆசிரியர்களில் பெரும்பாலானோர் தாம் வாழ்ந்த கிராமத்து உறவுகளின் கல்வியில் அதீத நாட்டம் கொண்டவர்களாக இருந்ததன் விளைவாக தீவகக்கல்வி வளர்ச்சில் ஒரு முதுகெலும்பாக இருந்திருக்கின்றனர் என்றால் மிகையாகாது குறிப்பாக ஐந்தாம் வகுப்பு புலமைப்பரிசில், எட்டாம் வகுப்பு புலமைப்பரிசில் பரீட்சைகள், சிரேஷ்ட பாடசாலை தராதரப்பத்திரப் பரீட்சை, க. பொ. த சாதாரணதர பரீட்சைகளுக்கு மாணவர்களைத் தயார்ப்படுத்தி அவர்களது சித்தியை உறுதிப்படுத்தி நகரப்பாடசாலைகளில் சென்று கற்பிப்பதற்கு பெரும் துணை புரிந்தவர்கள் இத்தகைய

ஆசிரியர்களேயாவர். இவ்வாறாக சென்ற மாணவர்கள் உயர்கல்வி கற்று உள்நாட்டிலும் சர்வதேசங்களிலும் தீவகத்தின் பெருமையை நிலை நாட்டி வந்துள்ளனர். வருகின்றனர். இவை தவிர இவர்களது ஆலோசனையுடன் தமிழ் நாட்டிற்கு மாணவர்களை அனுப்பி இந்தியப்பட்டதாரிகளாகி கல்விப் பணியாற்ற வழிசெய்தவர்களும் இத்தகைய ஆசிரியர்களேயாவர் என்றால் மிகையாகாது.

1960களின் பின்னர் தமிழர் பாரம்பரியத்தினை உறுதிப்படுத்தியிருந்த வேட்டி, நஷனல் சீருடையை ஆசிரியர்கள் பயன்படுத்தும் நிலை படிப்படியாக குறைவடைந்து தற்போது அது அறவே காணப்படாத நிலையை காணமுடிகின்றது. அதற்கு பதிலாக ஐரோப்பியரால் அறிமுகப்படுத்திய நீளக்கால்சட்டை, சேட் அணியும் நிலைக்கு மாற்றம் ஏற்பட்டடுவிட்டது. ஆனால் பெண்களைப் பொறுத்தவரையில் அவர்களது சீருடை அன்றும் இன்றும் ஒரே வகையானதாக இருந்த போதிலும் மாறிவரும் நாகரிக மாற்றத்திற்கேற்ப மாற்றம் பெற்று வருவதைக் காணமுடிகின்றது.

**1960களைத் தொடர்ந்த கல்வி நிலை**

பாடசாலைகள் அரசுடமையாக்கப்பட்ட பின்னர் 1960 - 1990ம் ஆண்டுகளிடையே தீவகத்தின் கல்வி நிலையில் கிராமப்புறப்பாடசாலைகளில் பங்களிப்பு பெரும்பாலும் இடைத்தரக்கல்வியை மையமாக்க கொண்டதாகவிருந்துள்ளது. தீவகப்பாடசாலைகள் சிலவற்றில் உயர்வகுப்புக்கள் ஆரம்பிக்கப்பட்ட போதிலும் அறுவடை மிகவும் மட்டுப்படுத்தப்பட்டதாகவேயிருந்தது இதனால் வசதி படைத்த பெற்றோர்கள் தமது பிள்ளைகளை நகரப்பாடசாலைகளில் உயர்வகுப்புக்களில் இணைப்பதில் ஆர்வம் கொண்டவர்களாக இருந்ததன் காரணமாக கலைத்துறைக்கு அப்பால் விஞ்ஞானத்துறைகளில் கற்பதற்கான வாய்ப்புக்கள் ஏற்படவே பல்கலைக்கழகங்களில் தீவக மாணவர்களின் எண்ணிக்கை அதிகரிக்கலாயின. இவற்றை பல்கலைக்கழகங்களில் பல்வேறு நிலைகளில் உறுதிப்படுத்தப்பட்டுள்ளது. குறிப்பாக 1960களின் பிற்பகுதியில் பேராதனைப் பல்கலைக்கழகத்தில் தீவக மாணவர்களின் பெரும்பான்மையுடன் தமிழ் சங்கத்தலைவராக இருவர் இரு தடவையாக தொடர்ச்சியாக தெரிவு செய்யப்பட்டமை குறிப்பிடத்தக்கது.

இருந்த போதிலும் இன விடுதலைப் போராட்டத்தின் ஆரம்பம் 1974ல் முளைவிட்டு படிப்படியாக வளர்ச்சி பெற்று 1983லிருந்து விரிவுபெறவே தமிழ் மக்களிடையே பொருளாதார. சமூக பண்பாட்டு நிலைகளில் தவிர்க்க முடியாத மாற்றங்களை உள்வாங்க வேண்டிய சூழ்நிலை ஏற்பட்டது. இளைஞர்கள் ஆயுதப் போராட்டத்திற்கு உள்வாங்கப்படல், சர்வதேச இடப் பெயர்வுகள் விரிவுபெறல், உள்நாட்டில் காலத்துக்குக்காலம் மக்கள் இடம் பெயர்வுகள், அசாதாரண இறப்புக்கள் போன்ற பல காரணிகள் கல்வி நிலையில் பாதிப்பினை ஏற்படுத்தத்தவறவில்லை. குறிப்பாக தீவகத்தில் இத்தகைய பாதிப்பானது ஏனைய பிரதேசங்களோடு ஒப்பிடும் போது பெரிய தாக்கத்தினை விளைவித்துள்ளன.

1991ம் ஆண்டு கடலால் சூழப்பட்ட நெடுந்தீவு, நயினாதீவு, எழுவைதீவு தவிர்ந்த ஏனைய தீவுகளில் வாழ்ந்து வந்த மக்களின் ஒட்டுமொத்த இடப் பெயர்வானது தீவகத்தின் கல்வியில் பெரும் தாக்கத்தினையும் அதனை மீட்டெடுப்பதில் பெரும் சிரமத்தினையும் தோற்றுவித்து விட்டது. மக்களோடு மக்களாக பாடசாலைகள் மற்றும் அரச, அரசசார்பற்ற நிறுவனங்களும் இடம் பெயரவேண்டிய துர்ப்பாக்கிய நிலை ஏற்பட்டது.

குறிப்பாக பாடசாலைகள் நகரப்புறங்களில் ஒட்டுக்குந்துக்குள் முடங்கவேண்டிய நிலை ஏற்பட்டது. 1996ம் ஆண்டு ஏப்ரல் மாதம் வரை இயங்க வேண்டியிருந்தது. இக்காலப்பகுதியில் தீவகத்தினைச் சேர்ந்த இடப் பெயர்வாளர்களில் மாணவர்கள், இளைஞர்கள், யுவதிகள் என பெரும் எண்ணிக்கையில் சர்வதேசங்களுக்கு புலம் பெயர்ந்துள்ளனர். அது மட்டுமல்லாது தீவகத்திலிருந்து வெளியேறிய மக்களில் பெரும்பாலானோர் விவசாயம் சார் பொருளாதாரக் கட்டமைப்புக்குட்பட்டவர்களாகவிருந்தபடியாலும் இடம் பெயர்ந்து வாழ்வதற்கான பொருளாதார வல்லமை கொண்டவர்களாக இருந்தமையாலும் நாட்டின் ஏனைய பகுதிகளில் நிரந்தரமாக வாழும் நிலையும் ஏற்பட்டது.

இந்நிலையில் 1996ம் ஆண்டு தீவகத்திற்கு மக்கள் சென்று குடியேறலாம் என அரசு அறிவித்ததைத் தொடர்ந்து பொருளாதார ரீதியில் வலுக்குறைந்த, புலம் பெயர்வதற்கான வாய்ப்புக்களைப் பெற்றிராத, விவசாயம் சார் தொழில்களைப் பெற்றிராதவர்களின் மீள் குடியேற்றமே நடைபெற ஏதுவானதாக இருந்தது. இந்நிலையில் பிரதேச மாணவர் பரம்பலுக்கு ஏற்ப பாடசாலைகள் படிப்படியாக சொந்த இடங்களில் ஆரம்பிக்கப்பட்டது. இன்னும் 14 பாடசாலைகள் திறக்கப்படவில்லை.

### தீவகக் கல்வி நிலையின் இன்றைய நிலை

1996ம் ஆண்டு முதல் தீவகத்தில் மக்கள் மீள்குடியேற்றம் நிகழ்த்துவரினும் 1991ம் ஆண்டு இடம் பெயராதிருந்த நயினாதீவு, நெடுந்தீவு, அனலைதீவு, எழுவைதீவு மக்களில் கணிசமானோர் படிப்படியாக வெளியகல்வியினை மேற்கொள்ளத் தொடங்கினர். இதனால் அத்தீவுகளில் மக்கள் எண்ணிக்கை குறைவடையலாயின. இந்நிலையில் 1996ம் ஆண்டிலிருந்து பாடசாலைகள் படிப்படியாக மீள ஆரம்பிக்கப்பட்டன. அட்டவணை II தீவகப்பிரதேசத்தில் பிரதேச ரீதியாக பாடசாலைகளின் எண்ணிக்கை பின்வருமாறு.

**அட்டவணை II**

**கிராம ரீதியாக பாடசாலைகளின் எண்ணிக்கை**

| கிராமம் | 1991ம் ஆண்டுக்கு முன்னர் | 2016ம் ஆண்டு நிலவரப்படி |
|---|---|---|
| நெடுந்தீவு | 10 | 08 |
| நயினாதீவு | 03 | 03 |
| அனலைதீவு | 03 | 03 |
| எழுவைதீவு | 02 | 02 |
| புங்குடுதீவு | 15 | 09 |
| லைடன் தீவு | 25 | 23 |
| மண்டைதீவு | 03 | 02 |
| காரைநகர் | 15 | 13 |
| மொத்தம் | 77 | 63 |

**ஆதாரம் : வேலணைக்கல்வி வலயக்குறிப்பேடு**

பொது மக்களினதும் மாணவர் எண்ணிக்கையைக் கருத்திற் கொண்டும் பாடசாலைகள் மீளத்திறக்கப்பட்ட போதிலும் மாணவர்களின் எண்ணிக்கை மிகவும் மட்டுப்படுத்தப்பட்ட நிலையிலேயே காணப்படுவதை அட்டவணை IIIன் மூலம் அறிய முடியும்.

**அட்டவணை III**

**தீவகப்பாடசாலைகளில் மாணவர் எண்ணிக்கை - 2016**

| மாணவர்கள் | பாடசாலைகள் | சதவீதம் |
|---|---|---|
| 25< | 06 | 9.5 |
| 26 - 50 | 10 | 15.8 |
| 51 - 100 | 15 | 23.8 |
| 101 - 200 | 18 | 28.6 |
| 201 - 300 | 09 | 14.3 |
| 301 - 400 | 02 | 3.2 |
| 401> | 03 | 4.8 |
| **மொத்தம்** | **63** | **100.0** |

**ஆதாரம் : வேலணை கல்வி வலயக் குறிப்பேடு**

மேற்குறித்த அட்டவணை IIIன் பிரகாரம் மொத்தமாகவுள்ள 63 பாடசாலைகளில் 16 பாடசாலைகளில் 50 மாணவர்களுக்குக் குறைவான மாணவர்களே கல்வி பயில்கின்றனர். காரைநகர் பாலாவோடை இந்து தமிழ் பாடசாலை (9) ஆயிலி சிவஞானோதய பாடசாலை, (24) புங்குடுதீவு இராஜஇராஜேஸ்வரி வித்தியாலயம் (23) நெடுந்தீவு சுப்பிரமணிய வித்தியாலயம் (20) நெடுந்தீவு மங்கயற்கரசி வித்தியாலயம் (19) நெடுந்தீவு ஸ்ரீஸ்கந்தாவித்தியாலயம் (19) ஆகிய பாடசாலைகளில் 25 மாணவர்களுக்கும் குறைவானவர்களே கல்வி பயில்கின்றனர். மேலும் தீவகத்தில் 300 மாணவர்களுக்கு மேல் கல்வி பயிலும் பாடசாலைகள் ஐந்தாகும். வேலணை மத்திய கல்லூரி (855) காரைநகர் யாழ்ற்ரன் கல்லூரி (641) காரைநகர் இந்துக் கல்லூரி (592) ஊர்காவற்றுறை சென் அன்ரனிஸ் கல்லூரி (355) புங்குடுதீவு மகாவித்தியாலயம் (312) ஆகிய பாடசாலைகளில் தீவக மொத்த மாணவர்களில் 30.4 சதவீதத்தினர் கல்வி பயில்கின்றனர். 200 மாணவர்களுக்கு மேல் கல்வி பயிலும் பாடசாலைகள் பதினான்காகும். மேற்குறித்த் பாடசாலைகளில் மொத்த மாணவர்களில் 54.9 சதவீதத்தினர் கல்வி பயில்கின்றனர் என்பது குறிப்பிடத்தக்கது. தீவகத்தில் ஏனைய 49 பாடசாலைகளில் 45.1 சதவீத மாணவர்களே கல்வி பயில்கின்றனர் என்பது குறிப்பிடத்தக்கது. அத்துடன் தற்போது இயங்கு நிலையிலிருக்கும் பாடசாலைகளில் 32 பாடசாலைகளில் ஆரம்ப பிரிவு (Type III) மட்டுமே கொண்டு இயங்கும் பாடசாலைகளாகவுள்ளன. 24 பாடசாலைகளில் ஆரம்ப, இடைத்தரக்கல்வி போதிக்கும் பாடசாலைகளாகவுள்ளன.

**ஆசிரிய வளம்**

1980களுக்கு முன்னர் தீவகப் பாடசாலைகளில் கற்பித்த ஆசிரியர்களில் பெரும்பாலானோர் மேற்குறித்த பிரதேசத்தினை பூர்வீகமாகக் கொண்டவர்களாக இருந்துள்ளனர். பெரும்பாலானோர் அக்கிராமங்களிலேயே வாழ்ந்து வந்துள்ளனர். 1991ம் ஆண்டு மீள்குடியேற்றத்தின் பின்னர் தீவகத்தைப் பிறப்பிடமாகக் கொண்ட ஆசிரியர்கள் எண்ணிக்கையில் மிக்க குறைவாகவேயிருந்து வருகின்றது. ஆசிரியர்களில் பலர் ஓய்வு பெற்றும், நகரப்பாடசாலைகளுக்கு மாற்றலாகியும், சர்வதேச இடப்பெயர்வுக்குட்பட்டும் இருந்த நிலையில் தீவகத்திற்கு வெளியிலிருந்தே ஆசிரிய வளம் உள்ளீர்க்கப்பட வேண்டிய நிர்ப்பந்தம் காணப்படுகின்றது. தற்போதைய நிலையில் 85.0 சதவீதத்திற்கு மேற்பட்ட ஆசிரியர்கள் தீவகத்திற்கு வெளியிலிருந்து வந்து சேவையாற்றுகின்றனர். இவர்களில் கடல் கடந்து சென்று சேவை புரிபவர்களில் பெரும்பாலானோர் வேலை நாட்களில் அங்கேயே தங்கி கல்வி செயற்பாடுகளில் ஈடுபடுகின்றனர். இவர்கள் சிறு எண்ணிக்கையினராவர். பெரும்பாலான ஆசிரியர்கள் நாளாந்தம் வந்து செல்பவர்களாகவுள்ளனர். போக்குவரத்துக்கான நேரத்தினை அதிகளவில் நாளாந்தம் செலவு செய்வதால் கற்பித்தல் செயற்பாடுகள் மறைமுகமான தாக்கத்தினை ஏற்படுத்தவும் செய்கின்றது.

2016ம் ஆண்டு கணிப்பீட்டின் படி தீவகக் கல்வி வலயத்திற்குட்பட்ட பாடசாலைகளில் 699 ஆசிரியர்கள் கடமையாற்றுகின்றனர். இவர்களில் 70 ஆசிரியர்கள் நெடுந்தீவுக் கோட்டத்திலும், ஊர்காவற்றுறை கோட்டத்தில் 187 ஆசிரியர்களும் வேலணைக் கோட்டத்தில் 292 ஆசிரியர்களும் காரைநகர் கோட்டத்தில் 150 ஆசிரியர்களும் சேவையில் ஈடுபட்டுள்ளனர். அட்டவணை IV ல் தீவககல்வி வலயத்தில் ஆசிரியர் மாணவர் விகிதம் தரப்பட்டுள்ளது.

**அட்டவணை IV**

**தீவக கல்வி வலயம் - ஆசிரியர் மாணவர் விகிதம் 2016**

| ஆசிரியர்/ மாணவர் விகிதம் | பாடசாலைகளின் எண்ணிக்கை |
|---|---|
| 4.9< | 03 |
| 5.0 - 9.9 | 15 |
| 10.0 13.9 | 20 |
| 14.0 16.9 | 18 |
| 17.0> | 07 |

**ஆதாரம் : வேலணை கல்வி வலய குறிப்பேடு 2016**

அட்டவணை IVஇனை அவதானிப்பின் தீவகப் பாடசாலைகளுக்கு ஆசிரியவளம் தாராளமாக வழங்கப்பட்டுள்ளது என்பதைக் கராண முடிகின்றது. 18 பாடசாலைகளில் ஆகக்கூடியதாக 10 மாணவருக்கு ஒரு ஆசிரியர் என நியமிக்கப்பட்டுள்ளனர். எனினும் கல்வித் திணைக்களத்தில் பாடசாலை ரீதியாக ஆரம்ப, இடைத்தர வகுப்புக்களுக்குரிய

ஆசிரியர்களின் எண்ணிக்கை தொடர்பான சுற்றுநிருபங்கள் உண்டு. அதனை அவர்கள் பின்பற்றியிருக்கலாம். அதற்குமப்பால் பாடசாலை ஆசிரியர் நியமனத்தில் பாடசாலைக்கு தேவையான ஆசிரியர்கள் தான் நியமிக்கப்பட்டுள்ளார்களா என்பது பற்றியும் அறிதல் அவசியமாகின்றது. எது எவ்வாறெனினும் நெடுந்தீவு சுப்பிரமணிய வித்தியாலயம், நாரந்தனை கணேச வித்தியாலயம், புங்குடுதீவு இராஜஇராஜேஸ்வரி வித்தியாலயத்தில் 5 மாணவர்களுக்கு ஒரு ஆசிரியர் நியமிக்கப்பட்டுள்ள அதே வேளை, புங்குடுதீவு அமெரிக்கன் மிசன் பாடசாலை, அனலைதீவு வடலூர் பாடசாலை, காரைநகர் அமெரிக்கன் மிசன் பாடசாலைகளில் முறையே 26.0, 230, 25.6 மாணவர்களுக்கு ஒரு ஆசிரியர் நியமனம் செய்யப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கது.

**மாணவர் பெறுபேறுகள்**

தீவக வலயக்கல்வியைப் பொறுத்தவரை மாவட்டத்தின் ஏனைய வலயங்களை விட மிகவும் தாழ்ந்த மட்டத்திலேயே கல்விப் பெறுபேறுகள் கடந்த இரண்டு தசாப்தகாலமாக காணப்படுவது தொடர்பாக கல்வியியலாளர்கள், சமூக ஆர்வலர்கள், பெற்றோர்களினால் காலத்துக்கு காலம் தெரிவிக்கப்படும் அங்கலாய்ப்பாகவுள்ளது. ஆசிரியர் வளங்களைப் பொறுத்தவரை ஆரோக்கியமானதாகவேயுள்ளதாக பொதுவாக அறிந்து கொள்ள முடிகின்றது. தீவகத்தில் பொருளாதார வசதி குறைந்த, கல்விப்பின்னணி கொண்டிராத பெற்றோர்களே பெரும்பாலானவர்களாகவுள்ளனர். இந்நிலையில் மாணவர்கள் கல்வியில் ஆர்வம் கொள்வதில் தவறுகின்றனர் என்ற கருத்தும் முன்வைக்கப்படுகின்றன. இதனால் பரீட்சைப் பெறுபேறுகள் கிடைக்கப் பெறவில்லை எனக் கூறுபவர்களும் இல்லாமலில்லை. இதனை எவ்வாறு மீட்டெடுக்க வேண்டும் என்பதில் பலரும் பலதரப்பட்ட கருத்துக்களை முன்வைக்கின்றனர். ஆனால் தொடர்ந்தும் ஒரே நிலை தான் நிலவுகின்றது.

**5ம் ஆண்டு புலமைப்பரிசில் பரீட்சை**

மாணவர்களது அடைவு மட்டத்தையும் அவர்களது திறமையையும் பெற்றோர் மற்றும் குடும்பத்தினரது மகிழ்ச்சியையும் தீர்மானிக்கும் கருவிகளாக புலமைப்பரிசில் பரீட்சை, க. பொ. த சாதாரணதரப் பரீட்சை, க. பொ. த உயர்தரப் பரீட்சைப் பெறுபேறுகள் அமைகின்றன. 1980 களுக்கு முன்னரான காலப்பகுதிகளில் 5ம் ஆண்டு மற்றும் 8ம் ஆண்டு புலமைப்பரிசில் பரீட்சைகளில் தீவகப்பாடசாலைகளின் பெறுபேறுகள் கணிசமாக உயர் மட்டத்தில் காணப்பட்டதன் விளைவாக குடாநாட்டின் முன்னணிப் பாடசாலைகளில் குறிப்பாக ஸ்ரான்லி கல்லூரி, நெல்லியடி மத்திய கல்லூரி, வேலணை மத்திய கல்லூரிகளுக்கு கிராமத்து பிள்ளைகள் சென்று கற்று தற்போது உயர் தொழில்களில் உள்நாட்டிலும் வெளிநாடுகளிலும் வாழ்ந்து வருகின்றனர். தீவகத்தின் பெரும்பாலான பாடசாலைகளில் ஆகக் குறைந்தது சராசரி இருவராவது புலமைப்பரிசில் பரீட்சையில் சித்தியடையும் நிலை காணப்பட்டிருந்தது. பொருத்தமான ஆசிரிய வளங்கள் அப்போது காணப்பட்டிருந்தது. இதற்கு பலரை உதாரணமாகக் கூட கொள்ள முடியும். ஆனால் 1996ல் மீள் இடப் பெயர்வுக்குப் பின்னர் தீவகப் பாடசாலைகளிலிருந்து மிகக் குறைந்த எண்ணிக்கையிலேயே சித்தியடைகின்றனர்.

அட்டவணை V

| அட்டவணை V தீவக வலயத்தில் புலமைப்பரிசில் பரீட்சை முடிவுகள் 2009-2015 | | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| பிரதேச ரீதியாக பாடசாலைகள் | 2009 | | 2010 | | 2011 | | 2012 | | 2013 | | 2014 | | | |
| | தோ.மா | சி | தோ. மா | சி | தோ. மா | சி | தோ. மா | சி | தோ.மா | சி | தோ.மா | சி | தோ.மா | சிசி |
| நெடுந்தீவு | 79 | 02 | 92 | 02 | 86 | 04 | 74 | 04 | 65 | 06 | 64 | 05 | 57 | 04 |
| ஊர்காவற்றுறை | 160 | 02 | 167 | 02 | 178 | 08 | 155 | 06 | 171 | 08 | 165 | 07 | 168 | 07 |
| எழுவைதீவு | 16 | 00 | 17 | 00 | 17 | 00 | 15 | 01 | 17 | 00 | 09 | 00 | 13 | 00 |
| காரைநகர் | 147 | 15 | 167 | 05 | 159 | 16 | 173 | 17 | 186 | 19 | 163 | 19 | 169 | 11 |
| புங்குடுதீவு | 87 | 01 | 87 | 01 | 101 | 01 | 78 | 01 | 78 | 00 | 85 | 01 | 81 | 00 |
| நயினாதீவு | 37 | 01 | 41 | 00 | 44 | 01 | 45 | 01 | 43 | 00 | 43 | 02 | 45 | 00 |
| மண்டைதீவு | 15 | 01 | 21 | 00 | 17 | 00 | 30 | 02 | 25 | 03 | 34 | 06 | 22 | 05 |
| வேலணை அல்லைப்பிட்டி மண்கும்பான் | 144 | 01 | 149 | 03 | 175 | 06 | 175 | 05 | 146 | 10 | 166 | 17 | 166 | 09 |
| மொத்தம் | 685 | 23 | 741 | 13 | 777 | 36 | 745 | 37 | 731 | 46 | 729 | 57 | 711 | 36 |
| சித்தி பெற்றவர்கள் வீதம் | 100.0 | 3.4 | 100.0 | 1.8 | 100.0 | 4.6 | 100 | 50 | 100.0 | 6.3 | 100.0 | 7.8 | 100.0 | 5.1 |

ஆதாரம் : வேலணைக்கல்வி வலயக் குறிப்பேடு

தோ. மா - தோற்றிய மாணவர்கள்

சி - சித்தி பெற்றவர்கள்

2009 - 2015ம் ஆண்டு வரையிலான காலப்பகுதிகளில் புலமைப்பரிசில் பரீட்சை முடிவுகள் தரப்பட்டுள்ளது. புலமைப்பரிசில் பரீட்சை முடிவுகளைப் பொறுத்தவரை காரைநகர் கோட்டம் ஏனைய கோட்டங்களை விட ஓரளவு முன்னேற்றத்தினை வெளிப்படுத்தியுள்ளது குறிப்பிடத்தக்கது.

**க. பொ. த (சாதாரணதர) பரீட்சை**

தீவக கல்வி வலயத்தில் இயங்கும் 63 பாடசாலைகளில் 31 பாடசாலைகளில் க. பொ. த (சா/த) வகுப்பு வரை போதிக்கப்படுகின்றது. 1980களுக்கு முன்னர் இப்பாடசாலைகளிலிருந்து தோற்றும் மாணவர்களில் குறைந்த பட்சம் அரைப்பங்கினராவது உயர்தர வகுப்பில் இணைவதற்கு தகுதி பெற்றுவிடுவர். நகரப்புறப்பாடசாலைகளில் கற்பதற்கான வசதி குறைந்தவர்கள் தீவகப்பாடசாலைகளில் கற்கும் அதே வேளை வசதி படைத்தவர்கள் யாழ்ப்பாணத்திலுள்ள பாடசாலைகளில் இணைந்து. அவர்களில் பெரும்பாலானோர் பல்கலைக்கழகங்கள் உட்பட உயர்கல்வி நிறுவனங்களில் பயின்று தகுதி பெற்று தகுதிக்குரிய தொழில்களைப் பெற்றிருந்தனர். அக்காலங்களில் தனியார்கல்வி நிறுவனங்கள் இல்லை. ஆசிரியர்களின் வழிகாட்டல். கற்பித்தல் மட்டுமே இருந்துவந்துள்ளது.

இந்நிலையில் 1991ம் ஆண்டு இடப் பெயர்வுக்குப் பின்னரான மீள் இடப் பெயர்வின் போது பிள்ளைகளின் கல்வியில் அதிக நாட்டமில்லாதவர்களின் வரவே அதிகமாகவிருந்துள்ளது. விவசாய பொருளாதாரத்துடன் கூடிய மற்றும் சுயதொழில்களில் வசதிபடைத்த. மற்றும் கல்வியுடன் கூடிய தொழிலாற்றல் கொண்டவர்களின் மீள் இடப்பெயர்வு மீளவும் மந்த நிலையிலேயே இருந்து வந்துள்ளது. மீள் குடியேற்றம் இடம் பெற்ற 1996ம் ஆண்டிலிருந்து யுத்தம் முடிவுக்கு கொண்டு வரப்பட்ட 2009ம் ஆண்டு வரையிலான காலப்பகுதியில் மக்கள். மாணவர்கள். ஆசிரியர்கள் உட்பட சகலரும் பல்வேறு அசௌகரியங்களுக்குட்பட்டிருந்தனர் என்பது உண்மை. ஆனால் 2010ம் ஆண்டின் பின்னர் தீவகப் பிரதேசம் அசாதாரண நிலையிலிருந்து விடுபட்டுள்ளது. கல்வித்திணைக்களத்தினர் தீவகப் பாடசாலைகளுக்கு பொருத்தமான ஆசிரியர் நியமனங்கள் வழங்கப்பட்டுள்ளதாக தெரிவிக்கப்படுகின்றது. அக்கருத்தினை ஏற்றுக் கொள்ள வேண்டியுள்ளது. அதாவது 2016ம் ஆண்டு நிலைப்படி தீவகத்தில் ஆசிரியர் மாணவர் விகிதமானது 13 ஆகவுள்ளது. இந்நிலையில் ஏன் பரீட்சை முடிவுகள் மிகவும் தாழ்ந்த மட்டத்திலேயே தொடர்ந்து இருக்கின்றது. இதற்கான காரணிகளை கல்வியியலாளர்கள். சமூக நலன்விரும்பிகளுக்கு தெரிந்திருக்கின்ற போதிலும் அதனை நியாயப்படுத்துவதில் பல இடர்பாடுகள் காணப்படுகின்றன.

## அட்டவணை VI

**தீவக வலயம்- க.பொ.த (சா.த) பரீட்சை முடிவுகள்**

**(கோட்ட மட்ட ரீதியான)**

| கோட்டம் | 2000 | | | 2011 | | | 2012 | | | 2013 | | | 2014 | | | 2015 | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | தோ. மா | சி | ச. வீ | தோ. மா | சி | ச.வீ | தோ. மா | சி | ச.வீ | தோ. மா | சி | ச.வீ | தோ. மா | சி | ச.வீ | தோ. மா | சி | ச.வீ |
| நெடுந்தீவு | 60 | 14 | 23.0 | 85 | 20 | 23.5 | 55 | 15 | 27.2 | 69 | 26 | 37.7 | 56 | 14 | 26.0 | 52 | 14 | 26.3 |
| ஊர்காவற்றுறை | 153 | 52 | 34.0 | 174 | 54 | 31.0 | 162 | 57 | 35.2 | 133 | 66 | 49.6 | 151 | 56 | 37.1 | 172 | 64 | 37.2 |
| காரைநகர் | 123 | 61 | 49.6 | 137 | 61 | 44.5 | 107 | 46 | 43.0 | 86 | 51 | 59.3 | 100 | 44 | 44.0 | 151 | 64 | 42.4 |
| வேலணை | 257 | 94 | 36.6 | 304 | 89 | 29.3 | 253 | 99 | 39.1 | 204 | 101 | 49.5 | 268 | 80 | 29.9 | 338 | 100 | 29.6 |
| மொத்தம் | 593 | 221 | 37.3 | 700 | 224 | 32.0 | 577 | 217 | 37.6 | 492 | 244 | 49.6 | 575 | 194 | 33.7 | 713 | 242 | 33.9 |

ஆதாரம்:- வேலணை கல்வி வலயக் குறிப்பேடு-2016

தோ:- தோற்றிறோர் ச.வீ:- சதவீதம்

சி:- சித்தி பெற்றோர்

தீவகத்தின் 2010 - 2015ம் ஆண்டுகளில் நடைபெற்ற மேற்குறித்த பரீட்சையில் 2013ம் ஆண்டில் ஏறத்தாழ அரைப்பங்கினர் சித்தியடைந்துள்ளனர் என்பதை புள்ளி விபரங்கள் காட்டி நிற்கின்றது. ஏனைய காலங்களில் சராசரி 35.0 வீதமானவர்களே சித்தி பெற்றுள்ளனர். யாழ்ப்பாணப் பிரதேச பாடசாலைகளுடன் ஒப்பிடும் போது இப்பெறுபேறானது மிகத் தாழ்ந்த நிலையில் உள்ளது என்பதே உண்மை நிலையாகும். மேலும் சித்தியடையும் சதவீதம் தாழ்ந்த மட்டத்தில் காணப்படுவதற்கு மிகவும் முக்கிய காரணியாகவிருப்பது கணிதம், விஞ்ஞானம் ஆகிய பாடங்களில் சித்தியடையத் தவறுவதேயாகும். மேற்குறித்த பாடங்களில் மாணவர்கள் சித்தியடையத்தவறும் பட்சத்தில் உயர் கல்வி வாய்ப்பினையோ, அரச தொழில்களைப் பெற்றுக் கொள்வதிலோ முடியாத நிலையுண்டு. எனவே இது தொடர்பில் கல்வித்திணைக்களம் ஆக்கபூர்வமான செயற்றிட்டங்களை வகுத்து செயற்படுத்துவதே தீவகக்கல்வி முன்னேற்றத்திற்கு உதவியாகவிருக்கும் எனலாம்.

### க. பொ. த (உயர்தரம்) கல்வியும் பெறுபேறுகளும்

தீவகத்தில் இயங்கும் பாடசாலைகளில் 11 பாடசாலைகளில் க. பொ. த உயர்தர வகுப்புக்கள் இயங்கி வருகின்றன. மேற்குறித்த பாடசாலைகளில் கலைப்பிரிவுக்கே மாணவர்கள் உள்வாங்கப்பட்டு வருகின்றனர். 1991ம் ஆண்டுக்கு முன்னர் வேலணை மத்திய கல்லூரி, புங்குடுதீவு மகாவித்தியாலயம் சென் அன்ரனிஸ் கல்லூரி, காரைநகர் இந்துக்கல்லூரி யாழ்ற்ரன் கல்லூரி, போன்ற பாடசாலைகளில் கலைப்பிரிவில் மாணவர்கள் சிறப்புச்சித்தி பெற்று பல்கலைக்கழகங்களுக்கு தெரிவாகி பேராசிரியர்களாகவும், நிர்வாக அதிகாரிகளாகவும் கல்வித்துறையில் சிறப்பிடம் பெற்றவர்களாகவும் திகழ்ந்துள்ளனர்.

1996ம் ஆண்டின் பின்னர் மேற்குறித்த பாடசாலைகளுக்கு மேலாக சில பாடசாலைகளில் க. பொ. த உயர்தர வகுப்புக்கள் ஆரம்பிக்கப்பட்டன. அத்துடன் வேலணை மத்திய கல்லூரி, யாழ்ற்ரன் கல்லூரிகளில் விஞ்ஞான பிரிவும் ஆரம்பிக்கப்பட்டுள்ளது. மாணவர் எண்ணிக்கை மிகவும் மட்டுப்படுத்தப்பட்ட நிலையிலேயே காணப்படுகிறது. வேலணை மத்திய கல்லூரியில் விஞ்ஞானக் கல்வியினைப் பயின்ற இரு மாணவர்களின் ஒருவரும் யாழ்ரன் கல்லூரியில் ஒருவரும் பல்கலைக்கழகம் புகுவதற்குரிய சித்தியை பெற்றுள்ளனர். இவைதவிர வர்த்தக பிரிவும் சில பாடசாலைகளில் இயங்குகின்றன.

தீவகத்தில் க. பொ. த (உயர்தரம்) வகுப்பில் இணைவதற்கும் அவர்கள் தம் பொருளாதார நிலைக்குமிடையில் நெருங்கிய சில தொடர்புண்டு. அத்தகையவர்கள் விரும்பியோ விரும்பாமலோ கலைத்துறையையே தெரிவு செய்யவேண்டியுள்ளதுடன் பாடசாலையில் காணப்படும் ஆசிரியவளத்தினைப் பொறுத்தே பாடத் தெரிவும் கட்டாயப்படுத்தப்பட்டுள்ளது விஞ்ஞானப் பிரிவில் மாணவர்கள் இணைந்து கொள்ள பின்னிற்பதற்கு பொருத்தமான ஆசிரிய வளம் கிடைக்கப் பெறாமை, தனியார் கல்வி நிறுவனங்கள் இல்லாமை, பெற்றோரின் அக்கறையின்மை போன்ற காரணிகளால் அது எட்டாக்கனியாகவிருக்கின்றது.

## அட்டவணை VII க. பொ.த.உயர்தர பரீட்சை பெறுபேறுகள் 2009-2015

| பாடசாலைகள் | 2015 | | 2014 | | 2013 | | 2012 | | 2011 | | 2010 | | 2009 | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | தோ.மா | சி. | தோ.மா | சி | தோ.மா | சி | தோ.மா | சி | தோ.மா | சி | தோ.மா | சி. | தோ.மா | சி. |
| நெடுந்தீவு மகா வித்தியாலயம் (கலை) | 11 | 10 | 06 | 06 | 10 | 04 | 12 | 10 | 13 | 11 | 12 | 11 | 17 | 14 |
| நெடுந்தீவு சைவப்பிரகாச வித்தியாலயம் | 04 | 00 | 04 | 04 | 09 | 03 | 11 | 06 | 19 | 10 | 17 | 15 | 14 | 07 |
| நெடுந்தீவு றோ.க. மகளிர் கல்லூரி | 06 | 06 | 08 | 07 | 03 | 03 | 12 | 10 | 09 | 07 | 11 | 09 | 11 | 09 |
| சென் அன்ரனிஸ் கல்லூரி | 28 | 21 | 22 | 19 | 36 | 28 | 32 | 20 | 22 | 21 | 28 | 24 | 24 | 18 |
| கரம்பன் லிற்றல் பிளவர் மகளிர் பாடசாலை | 20 | 16 | 12 | 09 | 06 | 06 | 10 | 06 | 13 | 13 | 13 | 10 | 14 | 06 |
| அனலைதீவு சதாசிவ பாடசாலை | - | - | - | - | - | - | - | - | 08 | 02 | 06 | 02 | 08 | 05 |
| காரைநகர் இந்துக் கல்லூரி | 29 | 21 | 22 | 14 | 37 | 22 | 39 | 24 | 24 | 16 | 28 | 19 | 42 | 33 |
| யாழ்றன் கல்லூரி | 17 | 14 | 21 | 13 | 15 | 06 | 16 | 06 | 17 | 12 | 23 | 17 | 26 | 11 |
| நயினா தீவு மகா வித்தியாலயம் | 17 | 09 | 12 | 06 | 17 | 08 | 20 | 09 | 21 | 16 | 15 | 09 | 22 | 16 |
| புங்குடுதீவு மகா வித்தியாலயம் | 26 | 11 | 09 | 06 | 09 | 08 | 11 | 08 | 07 | 06 | 10 | 07 | 04 | 04 |
| வேலணை மத்திய கல்லூரி | 67 | 41 | 47 | 32 | 48 | 38 | 55 | 36 | 58 | 43 | 68 | 54 | 60 | 43 |
| மொத்தம் | 225 | 149 | 163 | 116 | 190 | 126 | 218 | 135 | 211 | 157 | 231 | 177 | 242 | 166 |

**ஆதாரம் : வேலணை கல்வி வலயக் குறிப்பேடு - 2016**

அட்டவணை VII ன் பிரகாரம் தீவகப்பாடசாலைகளின் உயர்தர வகுப்புக்கான பெறுபேறுகள் திருப்தியைத் தருகின்ற போதிலும் பல்கலைக்கழகம் செல்பவர்கள் மிகக் குறைவாகவே அதாவது உயர்வான வெட்டுப்புள்ளிகளைக் கொண்டுள்ள யாழ் மாவட்டத்தில் இவர்களது பரீட்சை முடிவுகள் அதனை எட்ட முடியவில்லை. இதற்கு மாணவர்கள், ஆசிரியர்களின் பங்களிப்பு அதிகம் தேவைப்படுகின்றது. அதே வேளை விஞ்ஞானப்பிரிவினை வலுப்படுத்துவதன் மூலம் மாணவர்களது எதிர்காலத்தினை மேம்படுத்தவும் வாய்ப்புண்டு.

**முடிவுரை**

இன்றைய நிலையில் தீவகப்பிரதேசத்தின் கல்வி நிலையானது யாழ்ப்பாண மாவட்டத்தில் உள்ள ஏனைய வலயங்களோடு ஒப்பிடுமிடத்து மிகவும் பின்தங்கிய நிலையில் உள்ளது என்பது கல்விப்புலம் சார்ந்தவர்களது கருத்தாகவுள்ளது. இப்பிரதேசப் பாடசாலைகளில் கல்விநிலை பின்தங்கியிருப்பதற்கான காரணிகளைக் கண்டறிய வேண்டியது கல்வித்துறை சார் ஒவ்வொருவரினதும் கடமையாகின்றது. பாடசாலைகளில் பௌதிகவளம் ஆசிரியவளம் என்பன வளர்ச்சியடைந்து காணப்படுகின்ற போதிலும் மாணவர்களின் அடைவு மட்டத்தில் காணப்படும் பின்னடைவு எவ்வாறு நீடிக்கின்றது என்பதை அறிதல் அவசியமாகின்றது. ஆசிரியர் சமூகத்தினருடனான தொடர்பாடலின் போது மாணவர்களது வரவில் ஒழுங்கீனம், கல்வி கற்பதில் ஆர்வமின்மை, பெற்றோரின் அக்கறைக்குறைவு, குடும்பத்தலைவர்களின் தொழில்களில் பகுதி நேரமாக ஈடுபடல் போன்ற பல காரணிகள் தனித்தும் இணைந்தும் செயற்படுவதால் மாணவர்கள் சிறந்த பெறுபேறுகளைப் பெற்றுக் கொள்ள முடியவில்லை என்கின்றனர். பெற்றோர்கள், மாணவர்களுடனான கலந்துரையாடலில் பாடசாலையில் கற்பித்தல் செயற்பாடு உரிய காலத்தில் பூரணப்படுத்தப்படாத நிலை காணப்படுவதாக தெரிவிப்பதையும் மறுப்பதற்கில்லை. எனவே தீவகக்கல்வி தொடர்பான பிரச்சினைகளுக்கு எவ்வாறு தீர்வு காணப்படலாம் என்பது பற்றியறிதல் காலத்தின் தேவையாகவுள்ளது.

- 1980களுக்கு முன்னர் கடமையாற்றிய உள்ளூர் ஆசிரியர்களுக்கும் தற்போது கடமையாற்றும் ஆசிரியர்களுக்குமிடையில் ஏதாவது வேறுபாடு காணப்படுகின்றதா என்பதை கண்டறிதல் வேண்டும். குறிப்பாக முன்னாள் ஆசிரியர்கள் பெரும்பாலும் பயிற்றப்பட்ட ஆசிரியர்களாகவே காணப்பட்டனர். தற்போது பயிற்றப்பட்ட ஆசிரியர்களுடன் பட்டதாரி ஆசிரியர்களும் கற்பிப்பதில் ஈடுபாடு கொண்டுள்ளனர். குறிப்பாக இவர்கள் டிப்ளோமா, கல்வியில் முதுமாணிப்பட்டம் போன்ற உயர் கல்வித் தகுதிகளைப் பெறுவதை நோக்கமாகக் கொண்டு கல்வியில் தம்மை மேம்படுத்துபவர்களாக இருக்கின்றனர். அத்துடன் பெரும்பாலானோர் தீவகத்திற்கு வெளியிலிருந்து வந்து கற்பிப்பவர்களாகவுள்ளனர். அவர்கள் வசதியான இடங்களுக்கு மாற்றத்தினைப் பெற்றுச் செல்வதில் கண்ணும் கருத்துமாக இருந்து வருவதையும் காண முடிகின்றது. அதேநேரம் போக்குவரத்துக்கான நேரமும் இத்தகையவர்களுக்கு அதிகம் தேவைப்படுகின்றது. அத்துடன் இவர்களால் பாடசாலைச் சூழலை அறிந்து கொள்வதற்கு காலம் தேவைப்படுகின்றது.
- தீவுப்பகுதி மாணவர்களின் கல்வி நிலையை மேம்படுத்துவதற்கு கல்வி அமைச்சு இப்பிரதேசத்தினை மிகப்பின்தங்கிய பிரதேசமாக அறிவித்து ஏனைய பின் தங்கிய மாவட்டங்களுக்கு வழங்கப்படும் சலுகைகள் வழங்கப்படுவது அவசியமாகின்றது.

- தீவகத்தை சேர்ந்த கல்விப்புலம் சார்ந்த பலர் காணப்படுகின்றனர். அவர்களை இணைத்து கல்வித்திணைக்களம் ஆலோசனை சபைகளை உத்தியோகபூர்வமாகவோ அன்றில் உத்தியோகப்பற்றற்ற நிலையிலோ உருவாக்கி பின்தங்கிய நிலையிலிருந்து மீட்பதற்கான வழிவகையினை மேற்கொள்ள வேண்டியது அவசியமான ஒன்றாகும்.
- குறித்த பிரதேசங்களில் காணப்படக்கூடிய மாணவர் நிலையறிந்து பாடசாலைகள் இயங்க வைத்தல் அவசியமானது. தீவகத்தில் பாடசாலைகளை நிறுவிய போது போட்டி நிலை காணப்பட்டிருந்தது. குறிப்பாக சைவப்பிள்ளைகளுக்கு பாடசாலைகள் நிறுவுவதில் அக்காலத்தில் சைவப் பெரியோர்கள் முன்னின்றுழைத்தனர். ஆனால் போக்குவரத்து வசதி விரிவு பெற்றிருக்கின்ற இக்காலத்தில் அருகே பாடசாலைகள் அமைந்திருப்பது தொடர்பாக கல்வித்திணைக்களம் சிந்தித்து செயலாற்ற வேண்டும். தீவகத்தில் குறிப்பிடத்தக்க பாடசாலைகள் சில 500 மீற்றர் தூரத்திற்குள் அமைந்திருக்கின்றது. அத்துடன் மாணவர்களும் மிகவும் குறைவான நிலையில் காணப்படுகின்றனர். இப்பாடசாலைகளை இணைக்கும் பட்சத்தில் பல்வேறு விடயங்களில் சிறப்புற வாய்ப்புண்டு. சென்ற நூற்றாண்டில் பல பாடசாலைகள் ஒன்றிணைக்கப்பட்டுள்ளதையும் மனங்கொண்டு செயற்படல் வேண்டும்.
- ஆசிரியவளம் அதிகமாகக் காணப்படுகின்ற போதிலும் அவை உரியமுறையில் பகிரப்படவில்லை என்ற முறைப்பாடு பெற்றோர், மாணவர்களிடையே காணப்படும் பொதுவான குற்றச்சாட்டாகவுள்ளது. குறிப்பாக கணிதம், விஞ்ஞானம் ஆங்கிலம் ஆகிய பாடங்களுக்கான ஆசிரியர்கள் பாடசாலைகளில் தொடர்ந்து பற்றாக் குறையாக வேயுள்ளது. குறிப்பாக கணித பாட ஆசிரியர்களின் நியமனத்தில் கல்வித் திணைக்களம் கூடிய கவனம் செலுத்த வேண்டும்.
- தீவகத்தில் ஆரம்பப் பாடசாலைகளில் மாணவர்களிடையே மொழியாற்றல் மிகவும் குறைவாகவுள்ளது என்ற பொதுவான கருத்து உண்டு. இந்நிலையானது அவர்களது தொடர் கல்விக்கு ஊறு விளைவித்து வருகின்றது. எனவே தீவகத்தில் சில பாடசாலைகளை மாதிரி பாடசாலைகளாக மாற்றி இவை போன்ற பிரச்சினைகளுக்கு முற்றுப்புள்ளி வைக்க வேண்டியது காலத்தின் தேவையாகும்.
- தீவகப் பாடசாலைக்கல்வியினைப் பொறுத்தவரை மாகாண கல்வித்திணைக்களம், கல்வி அமைச்சு என்பன மிகக் கூடிய அக்கறை செலுத்துதல் வேண்டும். ஆசிரியரை நியமித்தல் போதுமானது என்பதற்கப்பால் கல்வி நிலையில் ஏன் பின்னடைவு ஏற்பட்டுள்ளது என்பது பற்றியும் அவற்றை எவ்வாறு நிவர்த்தி செய்ய முடியும் என்பது பற்றியும் தீவகத்தைச் சேர்ந்த மக்களுடனான கருத்தரங்குகளை நடாத்தி தீர்வுகாண முயல வேண்டும். அத்துடன் ஏனைய பிரதேசங்களிலிருந்து வேறுபட்ட பண்புகளைக் கொண்டுள்ளது என்பதை உணரும் பட்சத்திலேயே தீவகம் கல்வியின் மூலம் மீண்டெழ வாய்ப்புண்டு.

**பேராசிரியர் கா. குகபாலன்**
புவியியற் பேராசிரியர் (ஓய்வு நிலை)
யாழ்ப்பாணப் பல்கலைக்கழகம்

## பல்லாண்டென்னும் பதம் கடந்து வாழி

நாரந்தனையின் நாயகியே தான் தோன்றி மனோன்மணியே
பேராதரித்த கணேச வித்தியாசால - பூரணமாக
யெம்மறிவைப் பெருக்கிய அன்னையை போற்றவே
செம்மலரே யருள்வாய் கனிந்து.

அகவல்

பாலர் கல்வி தொட்டு சாலவே
நாலாம் வகுப்புவரை அன்னையே உன்னிடம்
பெற்ற அறிவே அத்தி வாரமாய்
ஏற்ற மளித்திட நாமும் வளர்ந்து
உய்தி பெற்றிட அருளினை யதனால்
கற்றவர் சபையதனில் அமர்ந்திடும் தகுதியும்
பெற்றனம் பேருவகை யடைந்து மேலும்
உன்திறம் இயம்பிட விழைந்து உனக்கு
பொன்மாலை சூட்டவே பேனாவை யெடுத்தே
நினைவே நீயாகிட எழுதவும் தொடங்கி
அரிவரி வகுப்பில் அக்கையை யொத்த
தெரிவை வாத்தி யாரம்மா கெங்கமுத்து
மேசையில் மணல் பரப்பியே யெழுதிட
ஆசையுடன் நாமும் எழுதிப் பழகியும்
பாடியும் ஆடியும் மகிழ்ந்திடக் கண்டு
தேடியும் கிட்டாத வாத்தி யாரம்மா
உள்ளம் குளிர்ந்து உவகையும் கொண்டு
கள்ளம் இல்லா மனத்தினள் கரையும்
சொல்வாள் கருத்தும் சொல்வாள் கேட்டு
செல்வர் நாங்கள் மகிழ்ந்து துள்ளவே
தலைமை வாத்தியார் மாணிக்கம் பெயரோன்
தலை தூக்கி யெம் கொட்டம் அடக்கிட

அஞ்சியும் நடுங்கியும் அமைதி காக்கவே
வஞ்சனை யற்றவர் தலைமை வாத்தியார்
வெஞ்சினம் மாறியே அன்புடன் கனிவாய்
அரவணைத்துக் கொண்டு புத்தியும் புகட்ட
சிரமேற் கொண்டே படித்த காலமதில்
பயிற்சி பெற்றவா ஆசிரியர் பலரிடம்
ஆயிர்த்த லின்றிப் பாடம் கற்றிடப் பள்ளியில்
ஆசிரியர் சபாரத் தினப் பெரி யோன்
மாசிலா மனத்துத் தமிழ்நிதி யவரிடம்
ஆங்கிலம் தெரிந்தும் இன்னும் யவேறு
தீங்கிலாத் துறைகள் கற்றும் கேட்டும்
மூதுரை நல்வழி நன்னெறி நாலடி
கோதிலா அறநெறி யறிந்து தெளிந்து
சுபாவின் காலமது பொற்கால மெனவே
சுபாநிதி யிவருடன் மகிழ்ந்து குலாவி
நாலாம் வகுப்பைத் தாண்டிய பொழுதில்
சாலவே ஆங்கிலம் கற்றிட விருப்புற்று
விலகியே அன்னையைப் பிரிந்து ஏங்கியே
எவ்வாறாயினும்,
செல் நெறி தன்னை நன்றாய் அமைத்தவள்
கல்வியில் ஒழுக்கமே மேலென அறைந்தவள்
ஏற்றிடும் ஏணியாய் இலங்கிய அணங்கிவள்
சாற்றிடும் தோணியாகிக் கல்விக்கரை சேர்த்தவள்
கணேச வித்தியா சாலைத் தாயிவள்
குணமிகக் குன்றில் ஏற்றிய தீபமான
அன்னையைப் போற்றி யவள் பாதமதில்
சொன்மாலை பூட்டுவோம் வாரீர் நலமே

விருத்தம்

கல்விச் செல்வத்தை கப்பலாய்த் தந்தவளே
பள்ளிப் பருவமதை பக்குவமாய்ச் சமைத்தவளே
செல்லும் இடமெலாம் சிறப்பெய்த வைத்தவளே
பல்லாண்டு எனும் பதம் கடந்து வாழி நீயே

திரு.க.ஈஸ்வரநாதபிள்ளை
(பழைய மாணவன்)



# நூற்றாண்டு காணப்போகும், நாரந்தனை - வடக்கு கணேச வித்தியாசாலை

செழிப்பும், நீண்ட வரலாறும் கொண்ட ஒரு பிரதேசமாகும். இத்தீவுக்கு வடபால் ஊர்காவற்றுறை அமைந்துள்ளது.

"ஊர்காவற்றுறையின் கிழக்குப்பக்கத்தில் நாரந்தனை என்னும் இயற்கை வளம் பொருந்தியகிராமம் அமைந்துள்ளது. நாரந்தனையின் வடபால் உள்ள பிரதேசம், வடக்கு நாரந்தனையென அழைப்பர். இதன் வடபால் அழகிய கடலோரமும், அதனைத்தொடர்ந்து செழுமை பொருந்திய நிலப் பரப்பும் உள்ளது. இயற்கை வளமும், முயற்சியில் முன்னேற்றம் காணும் பெருமக்களும் வாழ்ந்துவரும் பிரதேசமாகவும் விளங்குகின்றது.

"சிறுகற் புளித்து வயல் செழிக்கச்
செந் நெற்கதிர்கள் வளைந்தாட
மிளகாய் வெங்காயம் புகையிலையும்
பசுமைக் காட்சியை காட்டி நிற்க
செம்மாதுளையும் மாவாழையும்
செழித்துவளரும் நாரந்தனையூர்"

இத்தகைய இயற்கைவளம் பொருந்திய கிராமத்திற்றான் இற்றைக்கு நூறு வருடாங்களுக்கு முன்பு, கணேச வித்தியாசாலை தொடாங்கப்பட்டது.

இன்று ஒரு நூற்றாண்டு பூர்த்தியாகி, சிறப்புப்பெற்ற ஒரு வித்தியாலயமாக காட்சி அளித்துக்கொண்டிருக்கின்றது. ஓர் ஒளி விளக்காக, கல்விச்சுடராகக் காட்சி அளிக்கின்றது. கணேச வித்தியாசாலை கல்விச் செல்வத்தை வழங்கி வரும் நிலையில் வரலாற்றுப் புகழ்மிக்க நாரந்தனை தான்தோன்றி மனோன்மணி அம்மன் ஆலயம் அருட்செல்வத்தினை நாரந்தனையூர் பெருமக்களுக்கு வழங்கி வருகிறது. இவை இரண்டும் அவ்வூர் பெருமக்களுக்கு இருவிழிகளாகக் காட்சி அளிக்கின்றன.

நூற்றாண்டு காலமாக நாரந்தனை வாழ் இளஞ்செல்வங்களுக்கு கல்வியினைக் கற்பித்து வரும்

வித்தியாலயமாக திகழ்கின்றது. பாலூட்டி, உயிரையும் உடலையும் வளர்த்து வருபவள் தாயாகும்.

அதேபோல் கல்வியினை இளஞ்செல்வங்களுக்குக் கற்பித்து உணர்வையும், அறிவையும் வளர்த்து வருபவர்களாக கணேச வித்தியாசாலை விளங்குகின்றது. பாலர் வகுப்புத் தொடக்கம் 11ஆம் வகுப்பு வரை இயங்கிக் கொண்டிருக்கும் இவ்வித்தியாலயம் அங்கு பயிலும் மாணவர்களுக்கு பல்துறைகளிலும் கல்வியினைக் கற்பித்து வருகின்றது. திறமையும், ஆற்றலும், அறிவும், அனுபவமும் கொண்ட அதிபர்களையும், ஆசிரியர்களையும் கொண்ட வித்தியாலயமாக விளங்கி வந்துள்ளது. அத்தகைய அதிபர்களினதும் ஆசிரியர்களினதும் பெருமுயற்சியால் அங்கு கல்வி பயின்று வந்த மாணவர்கள் நற்பலனைப் பெற்று வரலாயினர். ஐந்தாம் வகுப்பு புலமைப் பரீட்சைகளிலும், க.பொ.த (சாதாரணதர) பரீட்சைகளிலும் நற்பெறுபேறுகளைப் பெற்று வரலாயினர்.

வித்தியாசாலையில் பெற்று வந்த கல்வியின் அத்திவாரமே, அவர்கள் உயர்கல்வியினைப் பெற்று கல்விசார் பெருமக்களாக இன்று இருந்து வருகின்றனர். மருத்துவர்களாக, பொறியியலாளர்களாக, தொழிநுட்பவல்லுனர்களாக, பேராசிரியர்களாக, விரிவுரையாளர்களாகவும், அரச அதிகாரிகளாக, கணக்காய்வாளராக, சமூகசேவையாளராக, எழுதுவினைஞராக, கிராமசேவையாளராகவும், பட்டதாரி ஆசிரியர்களாக, பயிற்றப்பட்ட ஆசிரியர்களாக, மற்றும் பல்வேறு துறை ஆசிரியர்களாகவும், ஊடகவியலாளராகவும் , செய்தித் தொகுப்பாளராகவும் பதவிகளைப் பெற்று பணிபுரிந்து வருவதை நாம் காண்கின்றோம்.

கணேச வித்தியாசாலையில் கல்வியினைப் பெற்றுத் தேறிய பெருமக்கள் பலர் வெளிநாடுகளில் மருத்துவர்களாக, பொறியியலாளர்களாக, மற்றும் சிறப்பான தொழிற்றுறையில் பணிபுரிந்து வருவதையும் நாம் அறிகின்றோம். வித்தியாசாலையிற் கல்வியினைப் பெற்ற பலர் வணிகத்துறையிலும் பெரும் சாதனை புரிந்து புகழுடன் வாழ்கின்றனர். மேலும் பலர் சிறந்த விவசாய பெருமக்களாக நல்வருவாயினை ஈட்டி வாழ்ந்து வருகின்றனர்.

இவற்றிற்கெல்லாம் காரணம் அதிபர்களினதும், ஆசிரியர்களினதும் நிர்வாகத்திறமையும், கற்பித்தல் திறமையுமாகும். அவர்கள் அளித்த கல்வியே சூக்குமமாக இருந்து மாணவர்களை வளர்த்தது. வளமான வாழ்வினை அளித்து வந்துள்ளதென்பதை நாம் சிந்தித்துப் பார்த்தால் புலனாகும். கடுகு சிறிதெனினும் காரம் பெரிது என்பது போல, கணேசவித்தியாசாலை, தனது கல்விப்பணியை திறம்பட ஆற்றி வந்துள்ளது.

ஆனால் யுத்தத்தின் தாக்கம் வித்தியாசாலையையும் விட்டுவிடவில்லை. அந்த சூழலில் படையினரின் தாக்கம் கடுமையாக இருந்துள்ளது. அதனால் அங்கு வாழ்ந்த மக்கள் பெரும்பாலானோர் புலம்பெயர்ந்தனர். பாடசாலையும் இயங்க முடியாத நிலை ஏற்பட்டது. யுத்தம் முடிவுற்ற பின்னரே பாடசாலை சிறிது சிறிதாக இயங்கத் தொடங்கியது. இன்று ஓரளவு வளர்ச்சி பெற்று வருகிறது. எனினும் அதன் தாக்கம் முழுமையாக நீங்கவில்லை. அதிபர், ஆசிரியர்கள், ஊர்மக்கள், பழையமாணவர்கள் வித்தியாசாலையை வளர்த்தெடுப்பதில் சிரமத்துடன் பெரும்முயற்சியினை எடுத்து வருகின்றனர்.

நானும் நாரந்தனையில் வந்து நிலைகொண்டு ஐம்பது வருடங்களாகின்றன. எனது மனைவி அவரின் உறவினர்கள் யாவரும் கணேச வித்தியாசாலையிலேயே ஆரம்பக் கல்வியைக் கற்று உயர்ச்சி பெற்றவர்கள். எனது பிள்ளைகள் மூவரும் இங்கேயே ஆரம்பக் கல்வியினைப் பெற்றனர். அவர்கள் ஐந்தாம் வகுப்பு புலமைப் பரீட்சையில் திறமை தேர்ச்சியைப் பெற்று தேறியவர்கள்.

இப்பாடசாலையில் கல்வி பயின்று, அரசாங்க உயர்பதவியிலிருந்து பணிபுரியும், இப்பாடசாலை வளர்ச்சியில் பெரும் அக்கறையுற்ற ஒருவரே என்னையும் ஒரு கட்டுரை எழுதுமாறு பணித்தார். அவரின் அன்பான பணிப்புரைக்கு அமையவும், நானும் எனது உரிமையை உள்ளத்தில் கொண்டும் இக்கட்டுரையை எழுதியுள்ளேன்.

கணேச வித்தியாசாலையின் நூற்றாண்டு விழா
சிறப்பாக நிறைவுற எல்லாம் வல்ல தான்தோன்றி
மனோன்மணி அம்மனை வேண்டி நிற்போமாக!
நூற்றாண்டு விழா சிறப்பாக மலர்க!
வளர்க !! நாரந்தனைக் கணேச வித்தியாசாலை.

**ச.மகாலிங்கம்**
ஓய்வுபெற்ற ஆசிரியர்



# நெஞ்சில் நிறைந்த நாரந்தனை மாந்தர் சிலர்

**தீ**வகத்தின் பிரதான கிராமங்களுள் நாரந்தனையும் ஒன்றாகும். தற்போதைய ஊர்காவற்றுறைப் பிரதேச செயலர் பிரிவினுள் அடங்கும் 15 கிராம உத்தியோகத்தர் பிரிவுகளுள் நாரந்தனை வடக்கு, நாரந்தனை மத்தி, நாரந்தனை வடமேற்கு நாரந்தனை தெற்கு ஆகிய நான்கு பிரிவுகள் இக்கிராமத்துக்குரியவை. கடல் வளமும், கமவளமும் கலந்திருக்கும் இக்கிராமம் காராளர்களாலும், கடற்றொழிலாளர்களாலும், உத்தியோகத்தர்களாலும், வணிகர்களாலும் உழைப்பின் உன்னதத்திற்கு இடந்தந்து விளங்குவது. தென்புறமாகச் சுருவில் குறுக்குக் கடலையும், வடபுறமாக யாழ்ப்பாணக் கடனீரேரியினையும், மேற்கே கரம்பன் கிராமத்தையும், கிழக்கே சரவணை, புளியங்கூடல் கிராமங்களையும் எல்லையாகக் கொண்ட அழகிய சிற்றூர் இது.

தம்பாட்டிப் பிரதேசம் மீனவர் பகுதியாகவும், ஏனைய பகுதிகள் யாவும் விவசாயிகள் பிரதேசங்களாகவும் விளங்குகின்றன. சைவமும் கத்தோலிக்கமும் இங்கு ஆன்மீக வழிகாட்டுதல்களைச் செய்கின்றன. தான்தோன்றி அம்மன் கோயில், கந்தசுவாமி கோயில், ஞானவைரவர் கோயிலுட்படச் சைவக் கோயில்களும், புனித பீற்றர் - போல் தேவாலயம், 9 ஆம் கட்டையடி புனித இருதய ஆண்டவர் தேவாலயம் ஆகிய கத்தோலிக்கத் தேவாலயங்களும் இங்கு மக்களை நல்வழிக்கு உய்க்கின்றன. றோமன் கத்தோலிக்க மகாவித்தியாலயம், கணேச வித்தியாலயம், தம்பாட்டி அ.த.க. பாடசாலை ஆகியன நாரந்தனை மக்களின் அறிவாலயங்களாகத் திகழ்கின்றன. ஆயினும் முப்பதாண்டு கால உள்நாட்டு யுத்தமானது நாரந்தனையுட்படத் தீவகம் முழுவதையும் புரட்டிப் போட்டுப் பேரழிவுக்கு இடந்தந்து நின்றன.

இடப்பெயர்வு, புலம்பெயர்வு, உயிரிழப்பு, உடைமையிழப்பு என்றவாறு அனைவரையும் அலைக்கழித்தது. காலத்தின் கட்டாயத்தினால் நாரந்தனையும் 1996 ஆம் ஆண்டின்

பின்னர் மெல்ல மெல்ல இயல்பு நிலையை நோக்கி நகரலாயிற்று. இருந்தும் முன்னைய செழுமையும், வலிமையும், இன்னமும் திரும்பவில்லை. மக்கள் தொகையின் வீழ்ச்சி, கல்வி கற்கும் மாணவர் எண்ணிக்கையில் வீழ்ச்சி, வளப்பிரயோகங்களில் வீழ்ச்சி என்றவாறு சூழ்நிலை காணப்படுகிறது. ஆனாலும் மீண்டும் தொடங்கும் மிடுக்குடன் நாரந்தனைக் கிராமம் இயன்றளவு முன்னேறத் துடிக்கிறது. உள்நாட்டிலும், உலக நாடுகளிலும் பரந்து வாழும் நாரந்தனை வாசிகளின் ஊர்பற்றும், தியாக உழைப்பும் இதற்குத் துணை நிற்கின்றன.

கணேச வித்தியாலய மாணவர் எண்ணிக்கையின் வீழ்ச்சி நிலையிலும் அதன் நூற்றாண்டு விழாவினைப் பாடசாலை சமூகம் கொண்டாடுவதே ஒரு மீள் எழுச்சிக்கான நடவடிக்கையாகும். எத்தனையோ கல்விமான்களை உருவாக்கித் தந்த கலைக்கூடம் இப்பாடசாலை. இங்கு கற்றவர்கள், உலகெங்கும் சிறந்த பணியாற்றியுள்ளனர். ஆற்றி வருகின்றனர். மண்ணின் மைந்தர்கள் பலரும் தமது தாய்வீட்டை மறக்காது தொண்டு செய்து வருவது மகிழ்ச்சி தருவதாகும். நல்லவர்களாலும், வல்லவர்களாலும் கட்டியெழுப்பப்பட்ட இந்த வித்தியாலயம் மீண்டும் பழைய சீரையும் சிறப்பையும் பெறவேண்டும். அதற்காக அனைவரும் ஒற்றுமையுடன் உழைக்க வேண்டும். “எனது பாடசாலை” என்ற உணர்வினை வளர்த்துச் செல்ல வேண்டும்.

“நாரந்தனை” என்ற பெயருக்கான காரணம் யாதென ஆராயும்போது “நாம் வந்து அணைந்த இடம்” என்ற கருத்து முன் வைக்கப்படுகிறது. துறைமுக நகரான ஊர்காவற்றுறையைப் பல்வேறு காரணங்களுக்காக வந்தடைந்த மக்கள், சற்று அருகிலிருந்த ஊரான நாரந்தனையிலேயே தங்கிச் செல்ல நேரிட்டது. மேலும் அத்தகையவர்களை இவ்வூரவர்கள் அன்புடன் வரவேற்று உபசரித்தும் மகிழ்ந்தனர். இதனால் நாரந்தனை என்ற பெயர் ஏற்பட்டதாகலாம். அத்துடன் “நா வந்து அணைந்த” என்ற பொருளினால் நல்ல வார்த்தைகள் பேசி அரவணைத்தோரின் வாழ்விடம் இது என்ற கருத்து உள்ளதாகவும் கூறப்படுகின்றது. நடை கடற்கரைப் பிரதேசமுடையதால் “நாரைகள் வந்து தங்கும் இடம்” எனக் கொள்ள முடியும். “மொழிப் பொருட் காரணம் விளிப்புத் தோன்றா” என்பது தொல்காப்பிச் சூத்திரமாகையால் பொருத்தமானதை ஏற்றுக்கொள்வதே மேலானது. இத்தகைய சிறந்த ஊரின் பெருமையை நிலைநிறுத்தும் வண்ணம் எனது நினைவிற் பதிந்த நாரந்தனை மாந்தர்கள் சிலரைப் பற்றிக் கூறலாமெனக் கருதுகின்றேன்.

நான் வேலணை மத்திய கல்லூரியில் விடுதி மாணவனாகக் கற்றுக் கொண்டிருக்கையில் நாரந்தனையிலிருந்து செல்வி புவனேஸ்வரி வேலுப்பிள்ளை ஆசிரியை அவர்கள் எங்கள் கல்லூரியில் கணித பாட ஆசிரியையாகக் கடமையாற்றினார். அவரிடம் நீண்ட காலம் கற்கக்கூடிய சூழ்நிலை ஏற்படாவிடினும், என்னிடம் பரிவுடனும், அன்புடனும் உரையாடக்கூடிய ஆசிரியையாக அவர் விளங்கினார். சற்றுக் குள்ளமாயிருந்தாலும் அழகும், அமைதியும் நிறைந்தவர். கஷ்டமான கணித பாடத்தை மாணவர் மனமறிந்து கற்பித்தவர். அவர் திருமணம் செய்து திருமதி கல்யாணசுந்தரம் ஆனார். வேலணையைச் சேர்ந்த புகழ்பெற்ற ஆசிரியரும் பண்டிதருமான பொன்னுத்துரை அவர்களின் மூத்த புதல்வரே எமது ஆசிரியையின் கணவரனார். பிற்காலத்தில் அவர் நாரந்தனை றோ.க.பாடசாலை அதிபராயிருந்தவர். தொண்ணூறுகளில் தீவகப் பாடசாலைகள் இடம்பெயர்ந்து யாழ்ப்பாணத்தில் தற்காலிகமாக இயங்கிய வேளையில் ஊர்காவற்றுறைக்

கோட்டப் பாடசாலைகள் சில (நாரந்தனை றோ.க. உட்பட) சுண்டுக்குழி மகேந்திரா தியேட்டர் கட்டடத்தில் இயங்கின. அப்போது நடைபெற்ற நிகழ்ச்சியொன்றுக்காக திரு.கல்யாணசுந்தரம் அவர்கள் என்னை விருந்தினராக அழைத்து உரையாற்ற வாய்ப்பளித்தார். எனது ஆசிரியை பின்னாளில் கொக்குவில் ஞானபண்டித வித்தியாசாலையில் ஓய்வுக்குப் பின்னர் பகுதிநேர ஆசிரியையாகப் பணியாற்றுகையில் அவரை அங்கும் நான் சந்தித்திருக்கிறேன். அவர் என் மீது எப்போதும் பேரன்பு காட்டியவர். நான் பேருந்து நடத்துநராக ஊர்காவற்றுறை வழிப்பாதையில் பணியாற்றிய போது "கெட்டிக்கார மாணவனாயிருந்தவன் இப்படியான தொழில் ஈடுபட்டுள்ளானே" என்று கவலைப்படுவார்.

நான் பணியாற்றும் பஸ்சில் அடிக்கடி பாடசாலை சென்று வருவார். பின்னாளில் அவரும் கணவரும் எனது மணிவிழா கோப்பாய் ஆசிரிய கலாசாலையில் நடைபெற்றபோது வந்து வாழ்த்தி அன்பளிப்பும் தந்து சென்றனர். அவர்களுடைய இரு பெண்களும் மணமுடித்து ஒருவர் இலண்டனிலும், மற்றவர் கொழும்பில் மருத்துவராகவும் வாழ்கின்றனர். ஆசிரியத் தம்பதிகளும் சில ஆண்டுகளாகக் கொழும்பில் வசிக்கின்றனர். கற்பித்தலிலும், கண்ணியத்திலும் மாணவரைக் கவரும் இவர்கள் என்றும் போற்றப்பட வேண்டியவர்கள்.

பள்ளம்பலம் கிராமத்தைச் சேர்ந்த மகாலிங்கம் ஆசிரியர் நாரந்தனையில் மணமுடித்து வாழ்ந்தவர். அடிக்கடி வடக்கு றோட் பஸ்சில் பயணம் செய்வார். வேலணை மத்திய கல்லூரியில் கற்பித்தவர். வர்த்தகப் பாடத்தை மாணவர் மனமறிந்து கற்பிக்கக்கூடியவர். எனது சகோதரி எப்போதும் அவரது அர்ப்பணிப்புடனான கற்றல் ஈடுபாட்டைக் குறிப்பிடுவார். வெளிநாட்டிலிருந்து தயாகத்திற்கு வரும்போது கொழும்பில் வசிக்கும் மகாலிங்கம் ஆசிரியரைச் சென்று சந்தித்து மகிழ்வார். ஆசிரியர் இலக்கிய ஈடுபாடுள்ளவர். தமது கிராமத்திலுள்ள ஆலய, சமூக அபிவிருத்திகளில் வழிகாட்டுபவர் எனது பேரன்புக்குரியவர்.

நான் வேலணையில் கல்வி கற்றுக் கொண்டிருந்த போது நாரந்தனை ஆசிரியரும் தலைமையாசிரியருமாயிருந்த அமரர் கணபதிப்பிள்ளை அவர்களின் மைந்தன் விஜயானதன் மற்றும் கரம்பனைச் சேர்ந்தவரும் வேலணையில் மணமுடித்தவரும் நாரந்தனை கணேச வித்தியாலயத்தில் பல ஆண்டுகள் அதிபராயிருந்தவருமான தியாகலிங்கம் போன்றவர்கள் என்னுடன் ஒருங்கே கற்றவர்கள் விஜய நாதன் இளவயதில் கணித ஆசிரியரானார். மண்டைதீவிலும் கற்பித்தார். பிற்காலத்தில் பலாலி ஆசிரிய கலாசாலையில் இணைக்கப்பட்ட விரிவுரையாளரானார். ஓய்வு வயது வரமுன்னரே அவுஸ்ரேலியா சென்று அங்கு நூலகராகப் பணிசெய்தார். இலங்கை வரும்போது சந்தித்து உரையாடி மகிழ்ந்துள்ளேன். தியாகலிங்கம் அவர்கள் இடதுசாரி சிந்தனைகளால் ஈர்க்கப்பட்டவர். முதலாந்தர அதிபராயிருந்து இளைப்பாறியவர். இலங்கை ஆசிரியர் சங்கத்தின் யாழ்ப்பாணக் கிளைத் தலைவராக இருந்தவர். தற்போது மானிப்பாயிலுள்ள சர்வதேசப் பாடசாலையொன்றில் ஆங்கிலம் கற்பித்து வருகிறார்.

எனது நல்ல நண்பர். அடிக்கடி சந்தித்து மகிழ்வோம். தொண்ணூறுகளின் இடப் பெயர்வின் பின்னர் நாரந்தனை கணேச வித்தியாலயத்தை மீள இயக்கி அதிபராகச் சில காலம் பணியாற்றிய குமரேஸ்வரநாதன் அவர்களும் எனது இனிய நண்பர். நாரந்தனை வாசி தற்போது நல்லூர் சங்கிலியன் வீதியில் வசிக்கிறார். புனித பரியோவான் கல்லூரியில் சிங்களம் கற்பிக்கின்றார். அவரது தம்பியார் விக்கினேஸ்வரன் அவர்கள் யாழ்ப்பாணம்

இந்துக் கல்லூரியில் விஞ்ஞானம் கற்பித்தார். பின் தீவக வலயத்தில் விஞ்ஞானபாட உதவிக் கல்விப்பணிப்பாளரானார். நாரந்தனை வாசியும் ஊர்காவற்றுறை துறைமுகத்துக்கு அண்மையிலான நகரப் பகுதியில் "சிவகுரு" சாப்பாட்டுக் கடை நடத்தியவருமான அமரர் சிவகுரு அவர்கள் நல்லமனிதர். அனலைதீவு, எழுவைதீவு, காரைநகர் மக்கள் தமது கடற்பயணங்களின் போது சிவகுரு அப்பாவின் கடையையே நம்பியிருப்பார்கள். பொறுமையுடன் எவரையும் அரவணைத்துச் செயற்படுவார். அவரது மருமகனார் நடேசபிள்ளை அவர்கள் கடை நடத்துவதில் மாமனாருக்குத் துணையாயிருந்தார். என்மீது அன்புடையவர்கள். நான் பேருந்தில் பணி செய்கையில் அவர்களுடன் நெருங்கிப் பழகியுள்ளேன். எதிர்பாராத விதமாகச் சிவகுரு அப்பா அகால மரணமடைந்தபோது மிகவும் துக்கப்பட்டேன் அவரது பிரேதத்தைக் கூடக் காவிச் சென்றிருந்தேன்.

வடக்கு நாரந்தனையைச் சேர்ந்த திரு.நடேசபிள்ளை அவர்கள் கணித ஆசிரியராகவும், பின்னர் சேவைக்கால ஆசிரியராகவும் பணிபுரிந்தவர். ஆஜானுபாகுவான உயர்ந்த தோற்றமும் சற்று மா நிறமுடையவர். என்றும் ஒன்றாகக் கற்றவரும் மண்டைதீவு யோகலிங்கம் ஆசிரியையின் மகளுமான நடேஸ்வரியை மணமுடித்து இரண்டு பிள்ளைகளுக்குத் தந்தையாயிருந்தவர். சிறந்த ஆசிரியர் எனப் பலரும் பாராட்டினர். அடிக்கடி பைசிக்கிளில் பயணம் செய்தார். ஐம்பது வயதளவில் எதிர்பாராது திடீரென மாரடைப்பினால் மரணமுற்றார். மிகவும் நட்புடனும் அறிவு ரீதியாகவும் பழகிய நல்லாசிரியரின் நினைவு என்றும் மறையாதது. நாரந்தனை சங்கக் கடையடியில் பலசரக்குக் கடை வைத்திருந்த திருநாவுக்கரசு அவர்கள்.

பொருட்கள் வாங்குவதற்காக அடிக்கடி பஸ்சில் சென்று வரும்போது என்னுடன் அன்புடன் பழகத் தொடங்கினார். அவரது மூத்த மகன் அமிர்தலிங்கமும் அவரது மனைவி மணியக்காவும் இடம்பெயர்ந்து யாழ்ப்பாணத்தில் நாம் இருந்த போது மிக நெருங்கிப் பழகினர். இன்று கனடாவில் வாழ்கின்றனர். தாயகம் வரும்போது சந்தித்து மகிழ்ந்துள்ளேன். திருநாவுக்கரசு ஐயாவின் இரு மருமக்கள் எனது மனைவியின் ஊரினர். ஊர்காவற்றுறை ப.நோ.கூ.சங்கத்தலைவராக நீண்ட காலம் பதவி வகிக்கும் திரு.சுந்தரலிங்கம் அவர்களும் எனது அன்புக்குரியவர். அமரர் இன்பலிங்கமும் எனது நண்பர். இவர்களைப் போன்று புகையிரத நிலைய அதிபராயிருந்த அமரர் கனகலிங்கம், மாடடுப் புறோக்கர் எனச் செல்லமாக அழைக்கப்படும் அமரர் கந்தையா அவர்கள், அமரர் சேவியர் தேவராசா அவர்கள் எட்டாம் கட்டையடி சிவலிங்கம் தம்பதிகள் போன்றோரும் மறக்க முடியாத நாரந்தனைவாசிகளாவர்.

திரு.சிவலிங்கம் யாழ்ப்பாணம் தொழில்நுட்பக் கல்லூரியில் பதிவாளராயிருந்தவர். அவரது துணைவியார் நூலகர். மருத்துவர் வை.யோகேஸ்வரன் அவர்கள் தற்போது உடுவிலில் பணி செய்கிறார். திருநெல்வேலியில் வசிக்கிறார். யாழ்ப்பாணம் இந்துக் கல்லூரியின் பழைய மாணவர். இன்றும் அக்கல்லூரியின் வளர்ச்சிக்காகப் பாடுபட்டு வருபவர். அதேபோல் தமக்கு ஆரம்பக் கல்வி தந்த நாரந்தனை கணேச வித்தியாலய வளர்ச்சியிலும் அக்கறை கொண்டு உழைப்பவர். இடைக்கிடையே நாம் சந்திக்கும்போது தீவக மக்கள் என்ற உணர்வினால் ஒன்றிவிடுவோம். பிள்ளைகள் கல்வி கற்றதால் சில காலம் வேம்படி மகளிர் வளர்ச்சிக்காகவும் பாடுபட்டவர்.

தற்போது கிளிநொச்சி கரைச்சிப் பிரதேச செயலாளராகப் பணியாற்றும் தெற்கு நாரந்தனையைச் சேர்ந்த திரு. கோபாலபிள்ளை நாகேஸ்வரன் அவர்கள் எனது இனிய நண்பர். படிப்படியாக உயர்ச்சி கண்டவர். வடகிழக்கு மாகாணக் கல்வித் திணைக்கள நிர்வாக அதிகாரியாகவும் செயற்பட்டவர். அவர் படிக்கும் காலம் முதல் எனக்குப் பழக்கம். நல்ல மனிதர் அடிக்கடி என்னை நிகழ்ச்சிக்கு அழைத்து பெருமைப்படுத்துவார். மனித நேயம் மிக்க உழைப்பாளி அவர். அதேபோல் தற்போது வடமாகாண மீன்பிடி, போக்குவரத்து அமைச்சின் செயலாளராகப் பணிபுரியம் திரு. சிவலிங்கம் சத்தியசீலன் அவர்கள் சில ஆண்டுகளாக என்னைப் புரிந்துணர்வுடன் அணுகுவார். தாயகப் பற்றுமிக்கவர். சில ஆண்டுகளின் முன் தான்தோன்றியம்மன் தேர்த்திருவிழாவில் நாமிருவரும் கலந்து தேரும் இழுத்தோம். அப்போது வெளியிட்ட சிறப்பிதழை ஆய்வு செய்யும்பேறு எனக்கு கிட்டியது. அதுபோல் நாரந்தனைக் கந்தசாமி கோயிலின் தேர் வெள்ளோட்டத்திலும் கலந்துகொண்டோம். மலர் வெளியீட்டுரையை நான் நிகழ்த்தியிருந்தேன். திரு.சத்தியசீலன் அவர்கள் தமது குல தெய்வமான வைரவரிடம் மிகுந்த பக்தியுடையவர்.

இலங்கை நிர்வாக சேவையில் கரவெட்டிப் பிரதேச செயலாளராகவும், பின்னர் வடமாகாண கல்வி விளையாட்டு, பண்பாட்டு அமைச்சுச் செயலாளராகவும் பணியாற்றியவர். என்றைக்கும் இனிய பண்புடன் பழகக்கூடிய இதயமுடைவர். யாழ்ப்பாணம் இந்துக் கல்லூரி, நாரந்தனை கணேச வித்தியாலயங்கள் ஆகியவற்றின் புகழ்பூத்த மாணவர்கள் நான் பேருந்து நடத்துநராகப் பணி செய்கையில் நாரந்தனை மக்களுடன் அதிக அளவில் பழகும் வாய்ப்புக் கிட்டியது. தற்போது தேசிய கல்வி நிறுவனத்தினால் நடத்தப்படும் பட்டப்பின் கல்வி டிப்ளோமா நெறியின் இணைப்பாளராகப் பணியாற்றும் திருமதி தனலட்சுமி வில்வநாதன் எனது உடன்பிறவாச் சகோதரி வேலணை மத்திய கல்லூரியின் ஆசிரியப் பணி புரியும்போது பஸ்ஸில் அடிக்கடி சந்தித்திருக்கிறேன். நான் தமிழைக் கற்ற ஆசிரியர் திலகம் பண்டிதர் க.இராசையாவிடம் அவர் பேரன்புடையவர். அவரது காதல் திருமணத்தை எனது ஆசிரியரே ஆசீர்வதித்து நடத்திவைத்தார்.

திரு.வில்வநாதன் புங்குடுதீவினர். யாழ்ப்பாண தாதியர் கல்லூரிக்கு விரிவுரையாளராகவும் பின்னர் மட்டக்களப்பில் தாதியர் கல்லூரி அதிபராகவும் பணியாற்றி ஓய்வுபெற்றவர். ஓய்வுக்குப் பின்னர் இலங்கைத் திறந்த பல்கலைக்கழகத் தாதியர் பயிற்சிநெறி இணைப்பாளராகப் பணிபுரிந்துவருகிறார். அவரது நிர்வாகத்தில் சுமார் 15 ஆண்டுகள் நானும் விரிவுரையாயராகப் பணியாற்றியிருக்கிறேன். வில்வநாதன் தம்பதியரின் மூன்று பிள்ளைகளும் நன்கு கற்று மணமுடித்து வாழ்கிறார்கள். ஒரு பெண்ணும் ஒரு ஆணும் மருத்துவர்கள். எனக்கு தொழிற்றுறையில் இடரேற்பட்ட வேளைகளில் துணையாயிருந்தவர் திருமதி வில்வநாதன் தம்பதியர் இருவரும் என்மீது பேரன்பு கொண்டவர்கள்.

நாரந்தனை றோ.க. பாடசாலையின் அதிபராயிருந்து இடையில் வெளிநாடு சென்றுவிட்ட திரு.சத்தியதாசன் அவர்களும் எனது இனிய நண்பர். அதுபோல் கணக்காளர் தனஞ்செயராசசிங்கம் கிராம உத்தியோகத்தராயிருந்து இளைப்பாறிய சகாதேவன், யாழ்ப்பாணம் மாநகரசபை உத்தியோகத்தர் ஜெயானந்தன் ஆகிய சகோதரர்களும் எனது அன்புக்குரியவர்கள். தற்போது யாழ்ப்பாணத்தில் வாழ்கின்றார்கள். நாரந்தனையின் புகழ்பெற்ற மனிதரான விசக்கடி வைத்தியர். அமரர் தியாகராசா அவர்களும் அவரது

பிள்ளைகள், மருமக்கள், பேரப்பிள்ளைகள், யாவேரும் என் நினைவில் நிறைந்தவர்கள். எனது மனைவியின் உறவினர்கள் இருவர் அவரது மருமகன்மார். நாரந்தனையிலிருந்து யாழ்ப்பாணத்தில் வணிக நிலையங்களை நடத்திய திரு போல் மற்றும் மரியதாசும் புடவைக்கடை உரிமையாளர்கள் போன்றோரும் நினைவில் வந்து நிழலாடுகின்றனர். ஒன்பதாம் கட்டையடித் தேவாலயத்துக்கு மேற்காக வசித்த பொலிஸ் உத்தியோகத்தரும் குறிப்பிடத்தக்கவர்.

என்னுடன் ஒன்றாகக் கற்ற அமரர் தனபாலன் அவரது சகோதரிகளின் கணவன்மார், அமரர் நடராசா,(முன்னாள் மாநகரசபை உத்தியோகத்தர்) மற்றும் திருநாவுக்கரவு, நடராசாவின் மகள் கௌரி அதிபராகவும் அவரது கணவன் பரந்தாமன் யாழ் பல்கலைக்கழக வணிகத்துறை விரிவுரையாளராகவும் இருப்பது மகிழ்வுக்குரியாதாகும். இவர்களுடன் தம்பாட்டியைச் சேர்ந்த அமரர் தம்பு மற்றும் அன்னராசா போன்றவர்களும் என்னால் மறக்கமுடியாதவர்கள். ஒரு காலத்தில் என்னுடன் மிகவும் அன்போடு பழகியவர்கள். நாரந்தனையைச் சேர்நதவரும் நடத்துநர் பதவி வகித்தவருமான துரைராஜா அண்ணரும், சாரதியாகப் பணியாற்றிய நாகராசா அவர்களும் தான்தோன்றியம்மன் ஆலய பரிபாலன சபைச் செயலாளர் இராமலிங்கம் அவர்களும் பண்டிதர் ஈஸ்வரநாதப்பிள்ளை அவர்களும் என்னால் மறக்கமுடியாதவர்கள் அவர்களது அன்பு ஆழமானது.

இங்கு நான் குறிப்பிட்ட நாரந்தனை வாசிகளில் என் நெஞ்சில் நிலைத்துவிட்ட நினைவுகளிலிருந்து மீட்டெடுத்த சிலரேயாவர். இன்னும் பலர் இருக்கின்றனர். அவர்கள் என் உள்ளத்தில் பக்குவமாக அரியாசனம் போட்டு அமர்ந்துள்ளார். பழகுவதற்கு இனிமையும் பண்பும் நிறைந்த மக்களையுடைய நாரந்தனை மீண்டும் பழைய வனப்பும் பொலிவும் காண இறைவனைப் பிரார்த்திக்கின்றேன். இந்த கணேச வித்தியாலய நூற்றாண்டு விழா நன்னாளில் அதற்கான முயற்சிகள் துரிதப்படுத்தப்பட்டு நாரந்தனையூரின் பெருமை பிரகாசிக்கட்டும் அதனைக் கண்டு பேருவகை அடைவோரில் நானும் ஒருவனாக இருக்க ஆசைப்படுகிறேன்.

**கலாநிதி செ.திருநாவுக்கரசு**

## வடமாகாண சபையின் முதலாவது மரநடுகை நிகழ்வு
## 2014 நவம்பர் - 01












வடக்கு மாகாண கல்வியமைச்சின் முன்னாள் செயலாளரும், பழைய மாணவருமாகிய உயர்திரு. சிவலிங்கம் சத்தியசீலன் அவர்களின் கௌரவிப்பின் போது...












# அறிவுக் கண்ணை திறந்த எம் அன்னை

**பெ**ற்ற தாயும் பிறந்த பொன்னாடும்
நற்றவவானிலும் நனிசிறந்தனவே.

என்ற ஆன்றோர் வாக்கிற்கேற்ப எமக்கு எழுத்தறிவித்து எமது அறிவுக்கண் திறப்பதற்கு அடித்தளமாக இருந்துவரும் எம் அன்னை நூறாவது அகவையில் காலடி எடுத்து வைப்பதனால் எமது உள்ளம் பேருவகையும் பெருமையும் அடைகின்றது. நாரந்தனை கணேச வித்தியாசாலையின் கடந்த கால சுவடுகளை திருப்பிப் பார்த்தால் பல்லாயிரக்கணக்கான மாணவர்கள் அக்கலையகத்தில் தமது கல்வியை பயின்று சிறந்த கல்விமான்களாக நல்லறிஞர்களாக ஒழுக்கமும் பண்பும் நிறைந்த நற்பிரஜைகளாக உருவாகி எமது சமூகத்திற்கும் நாட்டிற்கும் சேவையாற்றி வருவது எமது அன்னையின் வளர்ப்பிற்கும் எம்மை நெறிப்படுத்தி வழிப்படுத்திய அதிபர்கள், ஆசிரியர்களின் அர்ப்பணிப்புமிக்க சேவைக்கும் கிடைத்த பெறுமதிமிக்க பரிசாகும்.

லைடன்தீவு என பெருமையுடன் அழைக்கப்படும் ஊர்காவற்றுறை பிரதேசத்தில் அமைந்துள்ள புண்ணியபூமி நாரந்தனை கிராமம் ஆகும். இக்கிராமத்தின் வடபகுதியிலே கடற்கரையிலே தான்தோன்றியாக வந்துதித்து இக்கிராம மக்களிற்கு அருள்பாலித்துக்கொண்டிருக்கும் அன்னையாம் மனோன்மணி அம்பாளின் அருட்பார்வைக்கு உட்பட்ட பிரதேசத்திலும் கிழக்குப்புறமாக இக்கிராமமக்களைக் காத்து அருள்பாலித்துக் கொண்டிருக்கும் ஞானவைரவர் ஆலயத்தின் நிழலிலும் எமது கல்விஆலயம் அமைந்துள்ளமை மிகவும் கிடைத்தற்கரியதாகும். விவசாயத்தினை தமது பிரதான வாழ்வாதாரமாகக் கொண்ட எமது கிராமமக்கள் கடின உழைப்பும் விடாமுயற்சியும் ஊக்கமும் கொண்டவர்கள் இறைபக்தியும் நேர்மையும் தமது வாழ்வின் பக்கங்களாகக்கொண்டு தர்ம வழியிலும் அறநெறியிலும் தமது வாழ்வியலை அமைத்துக் கொண்டவர்கள்.

எமது கிராமமக்களின் கடந்தகால வரலாறு பல முக்கியமான பதிவுகளை கொண்டதாக அமைந்துள்ளது. எமது மக்கள் மிகவும் அமைதியான வாழ்க்கை முறையினையும் மிகவும் சிறப்பான சமூகதொடர்பாடல்களை தன்னகத்தே கொண்டு கலாசார விழுமியங்களையும் பண்பாட்டினையும் மிகவும் உயர்ந்த நிலையில் மதிக்கும் தன்மையினையும் கொண்டு விளங்கியமை குறிப்பிடத்தக்கதாகும்.

எமது கிராம மக்களின் வாழ்க்கைக்கு அடித்தளமிட்டவை ஆலயங்களும் கல்விச்சாலைகளும் என்பது பேருண்மையாகும். சைவ பாரம்பரிய சூழலில் உருவாக்கப்பட்ட எமது பாடசாலை ஆரம்பத்தில் ஓலைக்கொட்டிலில் இயங்கி வந்ததாகக் கூறப்படுகிறது. 1924 ஆம் ஆண்டு இந்துபோட்டினால் பொறுப்பேற்கப்பட்டு அதன் நிர்வாகத்தின் கீழ் இயங்கி அரசாங்கத்தினால் சகல பாடசாலைகளும் பொறுப்பேற்கப்பட்ட போது எமது பாடசாலையும் அரசாங்க பாடசாலையாக உள்வாங்கப்பட்டது. இப்பாடசாலையின் வளர்ச்சியில் பங்கெடுத்தவர்கள் சிறப்பாக வழிநடாத்திய அதிபர்கள் அர்ப்பணிப்புடன் பணியாற்றிய ஆசிரியர்கள் பற்றிய பதிவுகள் இம்மலரில் இடம்பெற்றிருப்பதனால் அவ்விடயங்களை இக்கட்டுரையில் உள்ளடக்காது நான் இப்பாடசாலையின் மாணவனாக இருந்தகாலத்தில் என்மனப்பதிவாக உள்ள விடயங்கள் சிலவற்றை முன்வைக்க விரும்புகின்றேன்.

எமது பாடசாலைக்கு அருகாமையிலுள்ள முன்பள்ளி 1969 ஆம் ஆண்டில் ஆரம்பித்திருந்தது. அம்முன்பள்ளியின் முதலாவது அணியினராக சேர்ந்த மாணவர்களுள் நானும் ஒருவன். தேவி ரீச்சர் என எங்களால் அன்பாக அழைக்கப்படும் கருணாதேவி ஆசிரியை எங்களிற்கு எழுத்தறிவித்த குருவாகும். என் வாழ்விற்கு ஒளியேற்றிய ஆசான்கள் பலரில் அவரே எனக்கு முதலாவதாக எழுத்தறிவித்தவர் ஆகும். அவர் எங்களுக்கு அன்போடும் ஆதரவோடும் எமக்கு அறிவூட்டிய அந்த நாட்களை நாம் என்றுமே மறக்க முடியாது.

திருமதி.மகேஸ்வரி அவர்களின் வீட்டின் ஒரு பக்கத்திலேதான் எமது முன்பள்ளி அமைந்திருந்தது. அந்த வீட்டில் பெரிய ஒரு விளாமரம் இருந்தது. அதில் விழும் பழங்களை எடுத்து முன்பள்ளியில் படிக்கும் மாணவர்களிற்கு சாப்பிடுவதற்கு எமது ஆசிரியை தருவார்கள் நாங்களும் விருப்போடு அந்த முன்பள்ளியில் கல்வி கற்றோம். ஆட்டம் பாட்டம், கொண்டாட்டம் என மிகவும் மகிழ்ச்சியுடன் கல்வி கற்ற நாட்கள் இன்றும் என்மனதிலே பசுமை நிறைந்த நினைவுகளாக பதிவு செய்யப்பட்டுள்ளது.

1970 ஆம் ஆண்டு கணேச வித்தியாசாலையில் நான் முதலாம் வகுப்பிலே சேர்ந்தேன் அப்போது எமது பாடசாலையின் அதிபராக அமரர் க.கணபதிப்பிள்ளை அவர்கள் கடமையாற்றிக்கொண்டிருந்தார்கள். வேட்டியும் நஷனலும் அணிந்து கம்பீரமான தோற்றத்துடன் ஆளுமையும் அர்ப்பணிப்பும் கடமையுணர்வும் மனித நேயமும்மிக்க முன்னுதாரணமான அதிபராக இருந்து எமது பாடசாலையின் உயர்விற்கு காரணமாக இருந்தமை குறிப்பிடத்தக்கதாகும். நான் வடக்கு மாகாண கல்வி அமைச்சின் செயலாளராக கடமையாற்றிய போது எனது நிர்வாகத்தின் கீழ் 1000 இற்கும் மேற்பட்ட அதிபர்கள் கடமையாற்றியிருந்தார்கள். ஆனால் என்னை உருவாக்கிய பாடசாலையின் அதிபர் என்ற பெருமை அமரர் க.கணபதிப்பிள்ளை அவர்களையே சாரும். நான் பல வைபவங்களிலும் கூட்டங்களிலும் எமது அதிபர் அமரர் கணபதிப்பிள்ளை அவர்களை பெருமையுடன்

நினைவுகூருவது வழக்கம். தனது பிள்ளைகள் கல்விகற்கும் காலத்தில் விவசாய வேலைகளிலும் அவர்களை ஈடுபடுத்தி மிகவும் எளிமையுடன் வளர்த்திருந்தார். இன்று அவர்கள் அனைவரும் மிகவும் நல்ல நிலையில் இருப்பது முன்னுதாரணமானதாகும்.

எமக்கு முதலாம் வகுப்பு முதல் ஐந்தாம் வகுப்பு வரை பல ஆசிரியர்கள் பாடங்களை கற்பித்தார்கள். புண்ணியவதி ரீச்சர், தங்கமணி ரீச்சர், எலியாஸ் ரீச்சர், டெய்சி ரீச்சர் ஆகியோர் எங்களிற்கு மிகவும் சிறந்த முறையில் அன்பாகவும் எம்மை முன்னேற்றவேண்டும் என்ற நோக்குடனும் பாடங்களை போதித்தனர். அந்தக்காலத்தில் எங்களது வகுப்பில் 25-30 இற்கும் இடைப்பட்ட மாணவர்கள் இருப்பார்கள். வகுப்பறைக் கற்பித்தல் மிகவும் கட்டுப்பாட்டுடன் நடைபெறும். ஒவ்வொரு பாடங்களிலும் வீட்டுவேலைகளை எமது ஆசிரியர்கள் தருவார்கள் அதேபோல் வாய்ப்பாடு பாடமாக்கி சொல்லுதல் வேண்டும்.

எமது பாடசாலை நாட்கள் மறக்க முடியாதவை. இணைப்பாடவிதான செயற்பாடுகள், விளையாட்டுப்போட்டி, கலைவிழா, சாரணியம் போன்ற பல விடயங்கள் எமது பாடசாலையில் இருந்தன. எமக்கு சாரணியத்திற்கு பொறுப்பாக தனபாலசிங்கம் ஆசிரியர் இருந்தார். நான் அப்போது குருளைச்சாரணராக இருந்தேன். யாழ்ப்பாணம் சுப்ரமணியம் பூங்காவில் நடைபெற்ற சாரணர் ஜம்போறியிலும் நான் கலந்துகொண்டிருக்கின்றேன். கல்விச் சுற்றுலா, தலயாத்திரை என எமது ஆசிரியர்கள் எம்மை அழைத்துச்சென்று நல்லூர் முருகன் ஆலயம், நீர்வேலி கண்ணாடித்தொழிற்சாலை, அச்சுவேலி கைத்தொழிற்பேட்டை, தோலகட்டி நெல்லிரசம் உற்பத்தி தொழிற்சாலை, காங்கேசன்துறை சீமெந்து தொழிற்சாலை போன்ற பல இடங்களைச் சென்று பார்த்தமையும் ஞாபகத்தில் இருக்கின்றது.

எமது பாடசாலை கிராமப்புற பாடசாலையாக இருந்தபோதிலும் பல்வேறு போட்டிகளில் பங்குபற்றி பல வெற்றிகளை எமது மாணவர்கள் பெற்றிருக்கின்றார்கள். பேச்சுப்போட்டி, கட்டுரைப்போட்டி, நாடகப்போட்டி, கவிதைப்போட்டி போன்ற பல போட்டிகளில் எமது பாடசாலை முன்னிலை வகித்தமை குறிப்பிடத்தக்கதாகும். எமது பாடசாலையில் நடைபெறும் வைபவங்கள் சமூகத்தின் பங்களிப்புடன் நடைபெற்றன. பெற்றோர்கள், நலன்விரும்பிகள், ஊர்மக்கள் என எல்லோரும் தமது ஒத்துழைப்பினை வழங்குவார்கள்.

பாடசாலை முடிவுற்றபின் நாம் கிளித்தட்டு, மாபிள் அடித்தல், பிள்ளையார் பந்து, உதைபந்தாட்டம் போன்றவற்றில் ஈடுபடுவது வழக்கமாகும். எமது காலத்தில் ரியூசன் வகுப்புகள் ஆரம்பித்திருந்தது. தமிழ், கணிதம், ஆங்கிலம் போன்ற முக்கிய பாடங்களுக்கு சில மாணவர்கள் மட்டும் ரியூசன் வகுப்புகளுக்கு சென்று கற்பார்கள். எமது பாடசாலை விவசாய கிராமத்தில் அமைந்திருந்த காரணத்தினால் மாணவர்கள் தமது கல்வி நடவடிக்கைக்கு மேலதிகமாக தமது பெற்றோர்களின் விவசாய நடவடிக்கைகளிலும் ஈடுபட்டுவந்தமை குறிப்பிடத்தக்கதாகும். அந்தக்காலத்தில் மாணவர்கள் தமது ஓய்வு நேரங்களை பயனுள்ள முறையிலேயே செலவழித்துள்ளார்கள். பெற்றோர்கள் தமது பிள்ளைகளை ஆலயத்திருவிழாக்கள் மற்றும் சமய வைபவங்களுக்கு தங்களுடன் அழைத்துச்செல்வார்கள். ஆலயத்திருவிழாக்கள் மிகவும் சிறப்பாக நடைபெறும். இரவுத் திருவிழாக்கள் விடியும் வரை இடம்பெற்று பல்வேறு கலை நிகழ்ச்சிகளும் நடைபெற்றிருக்கின்றன. சமய சொற்பொழிவு, பக்திப் பாடல், மேளக் கச்சேரி, வில்லுப் பாட்டு, நாடகம், பட்டிமன்றம் போன்ற பல நிகழ்ச்சிகள் ஆலயங்களில் நடைபெறும். இவற்றினை

பார்வையிட ஊர்மக்களும் அயல்கிராம மக்களும் ஒன்று கூடுவார்கள். சமூக உறவினை மேம்படுத்தும் விழாக்களாக இவை அமைந்திருப்பது குறிப்பிடத்தக்கதாகும்.

எங்களது பாடசாலை சமய விழுமியங்களை மிகவும் உயர்வாக மதித்து நடக்கும் பாடசாலையாகும். நவராத்திரிவிழா மற்றும் குருபூசைகள் மிகவும் சிறப்பான முறையில் நடைபெறும் மாணவர்களின் ஆளுமையினை வளர்க்கும் பேச்சுப்போட்டிகள், கவிதைப்போட்டிகள், விவாதம் என்பன பாடசாலையில் ஒழுங்கு செய்யப்படும். இவை மாணவர்களிற்கு சிறந்த அனுபவத்தினை வழங்கியமை குறிப்பிடத்தக்கதாகும். எமது பாடசாலையில் தரம் 1 தொடக்கம் தரம் 11 வரை வகுப்புக்கள் இருக்கும் நாங்கள் கல்விகற்ற காலத்தில் கிட்டத்தட்ட 250 மாணவர்கள் கல்வி கற்றிருப்பார்கள். தரம் 5 இற்கு பின் குறிப்பிட்ட சில மாணவர்கள் யாழ் நகர பாடசாலைகள், வேலணை மத்திய கல்லூரி ஊர்காவற்றுறை புனித அந்தோனியார் கல்லூரி என்பவற்றில் தமது உயர் கல்விக்காக சென்று விடுவார்கள். ஏனைய மாணவர்கள் எமது பாடசாலையிலே க.பொ.த (சா/த) வகுப்பு வரை கல்விகற்று உயர்கல்விக்காக ஏனைய பாடசாலைகளுக்கு செல்வார்கள்.

எமது ஆசிரியர்கள் விருப்புடனும், அர்ப்பணிப்புடனும் எமக்கு அறிவூட்டினார்கள். இவ் வரிசையிலேயே திருமதி புண்ணியவதி ஆசிரியை எமக்கு தமிழ், சமூகவியல் ஆகிய பாடங்களை கற்பித்தார். தமது மாணவர்களின் மீது அளவு கடந்த அன்பையும் அதேவேளை கண்டிப்பினையும் கொண்டவரான எமது ஆசிரியை பாடங்களை மிகவும் நேர்த்தியான வகையில் போதிப்பார். திருமதி எலியாஸ் ஆசிரியை கற்பித்தலில் மிகவும் சிறப்பு தேர்ச்சி பெற்ற ஆசிரியை எமக்கு மிகவும் சிறந்த முறையில் தமிழ் கணித ஆகிய பாடங்களை கற்பித்தார். டெய்சிபுஸ்பம் ஆசிரியை எமக்கு ஆங்கில பாடத்தினை கற்பித்தார். மிகவும் அன்பாகவும் திறமையாகவும் பாடங்களை கற்பிப்பார். திருமதி தங்கமணி ஆசிரியை தமிழ், சமயம் ஆகிய பாடங்களை மிகவும் திறமையாகவும் அன்புடனும் எமக்கு கற்பித்தார். எமது ஆசிரியர்கள் எமது முன்னேற்றத்தில் மிகவும் அக்கறையுடையவர்களாக இருந்தனர். அக்காலத்தில் கற்பித்த ஆசிரியர்கள் ஒவ்வொருவருக்கும் தமது மாணவர்களை பற்றிய பூரணமான அறிவு இருந்தது. அவர்களின் பெற்றோர்களை தனிப்பட்ட ரீதியில் தெரிந்தவர்களாகவும் இருந்தனர். இதனால் மாணவர்களின் கல்வி அடைவு மட்டம் மற்றும் நடத்தை கோலங்கள் தொடர்பாக பெற்றோருடன் தொடர்பாடல்களை மேற்கொண்டு மாணவர்களை ஒழுங்குபடுத்தக்கூடிய சாதகமான நிலை காணப்பட்டது.

எமது கிராமம் விவசாயத்தினை அடிப்படையாகக் கொண்ட கிராமம் ஆகும். குறிப்பாக புகையிலை, வெங்காயம், மிளகாய், நெல் போன்றன எமது மக்களின் பிரதான தொழில்களாக அமைந்திருந்தன. எமது முன்னோர்கள் குரக்கன், சாமை, போன்ற தானியங்களையும் பயிரிட்டதாக அறிய முடிகின்றது. எமது மக்கள் மிகவும் கடினமான உழைப்பாளிகள் நெற்றி வியர்வை நிலத்திலே சிந்த அல்லும் பகலும் அயராது பாடுபட்டு தமது தொழிலை மேற்கொள்பவர்கள். எமது தோட்ட நிலங்களை உருவாக்குவதற்கு எவ்வளவு தூரம் கஷ்டப்பட்டார்கள் நிலத்தில் இருந்து கல்லை கிண்டி அகற்றி பின் தோட்டத்திற்கு பொருத்தமான மண்ணை மாட்டு வண்டியின் மூலமாக எடுத்து வந்து மிகவும் கஸ்ரப்பட்டே விவசாய நிலங்களை உருவாக்கினார்கள்.அக்காலத்தில் கூட்டு விவசாயமுறையும் காணப்பட்டது.

விவசாய வேலைகளை சில குடும்பங்கள் இணைந்து மேற்கொண்டமையால் கூலி கொடுக்கவேண்டிய தேவை ஏற்படவில்லை. குடும்பங்களிடையே ஒற்றுமையும் அன்னியோன்னியமும் இணைந்த சமூக வாழ்வும் எமது கிராமத்தில் காணப்பட்டது. குடும்பங்களில் நடைபெறும் சுகதுக்கங்கள் நன்மை தீமைகளில் எல்லோரும் இணைந்து ஒற்றுமையாக செயற்பட்டமை குறிப்பிடத்தக்கதாகும்.

விவசாய வேலைகளில் கூடுதலான அளவு மரபு சார்ந்த முறையிலேயே காணப்பட்டது. நெல் வயல்களையும் தோட்ட நிலங்களையும் உழுவதற்கு எருதுமாடுகள் பயன்படுத்தப்பட்டன. ஒவ்வொரு வீட்டிலும் வண்டில், மாடு என்பன கட்டாயம் இருக்கும். தமது வயல்களில் இருந்து கிடைக்கும் நெல் பிரதான உணவாகும். தமது தோட்டங்களில் தேவையான மரக்கறி வகைகளை பயிரிடுவார்கள் தமது விவசாய விளைபொருட்களை தேவைக்கேற்ப பகிர்ந்தளித்து வாழ்ந்தனர். பண்டமாற்று முறையில் உற்பத்தி பொருட்களை கையாண்ட முறைமைகள் கூட காணப்பட்டன.

அந்தக்காலத்தில் மாட்டுவண்டிச் சவாரி ஒரு முக்கியமான போட்டி நிகழ்ச்சியாகும். ஆண்டு தோறும் நடைபெறும் இப்போட்டிக்கு வெளிப்பிரதேசங்களில் இருந்தும் ஏராளமான மாடுகள் சவாரித்திடலிற்கு கொண்டுவரப்படும். தமிழ் மக்களின் பாரம்பரிய நிகழ்ச்சிகளில் ஒன்றான மாட்டு வண்டில் சவாரி எமது கிராமத்திலும் சிறப்பாக நடைபெற்ற வரலாற்றுப் பதிவுகள் காணப்படுகின்றன.

நாங்கள் கல்வி கற்கும் காலங்களில் எமது கிராமங்கள் அடிப்படை வசதிகளற்ற நிலையிலேயே காணப்பட்டது. போக்குவரத்திற்கான வீதிகள் மண் வீதிகளாகவே காணப்பட்டன மழை காலங்களில் மக்கள் போக்குவரத்திற்காக மிகவும் கஸ்ரப்படுவார்கள் மின்சார வசதி இருக்கவில்லை அரிகன்லாம்பில் தான் மாணவர்கள் கல்வி கற்பார்கள். மக்கள் கிராமத்தில் ஒரு இடத்திலிருந்து இன்னுமொரு இடத்திற்கு செல்வதாயின் கால்நடையாகவே பயணத்தினை மேற்கொள்வார்கள். துவிச்சக்கரவண்டி கூட மிக குறைந்த அளவிலேயே காணப்பட்டது. ஆனால் மக்களின் வாழ்வு மகிழ்ச்சியானதாகவும் நிறைவானதாகவும் காணப்பட்டது.

நாட்டில் ஏற்பட்ட அசாதாரண சூழ்நிலைகள் காரணமாக எமது கிராமமும் மிகவும் பாதிக்கப்பட்டது. பிரச்சனை என்பதனையே அறியாது அமைதி வாழ்வினை வாழ்ந்துகொண்டிருந்தனர். மக்கள் 1990ம், 1991ம் ஆண்டுகளில் எமது பிரதேசத்தில் நடைபெற்ற யுத்தத்தினால் பெரும் துன்ப துயரங்களை அனுபவிக்க நேர்ந்தது. இப்பிரதேசத்தில் இருந்து மக்கள் முற்றாக வெளியேற வேண்டிய துர்ப்பாக்கிய நிலை ஏற்பட்டது. இதனால் சமூக கட்டமைப்பு முற்றாக பாதிப்படைந்து கல்வி, பொருளாதாரத்தில் பெரும் தேக்கநிலையினையும் தோற்றுவித்தது. இடம்பெயர்ந்த எமது மக்கள் என்ன செய்வதறியாது பெரும் மனச்சுமைகளுடன் வாழ்ந்த அந்த துன்பியல் வரலாறு என்றுமே மறக்க முடியாதவை. மக்கள் தமது சொந்த இடங்களை விட்டு வெளியேறி நாட்டின் பல்வேறு பிரதேசங்களிலும் வாழ்ந்தனர். பெரும் எண்ணிக்கையானோர் வெளிநாடுகளுக்கும் சென்றனர். ஊக்கமும், விடாமுயற்சியும், கடின உழைப்பும் கொண்ட எமது மக்கள் தாம் சென்ற இடங்களில் கல்வியிலும், பொருளாதாரத்திலும் உயர்ந்து இன்று சிறப்பான நிலையில் இருப்பது குறிப்பிடத்தக்கதாகும். எமது முன்னோரின் அறநெறியும், தர்மமும்

நிறைந்தவாழ்வும் இச்சந்ததியை காப்பாற்றி புதுவாழ்வினை பெற்றுத்தந்துள்ளது. இன்று உலகெங்கும் சிறந்த வாழ்வினை எமது மக்கள் பெற்றிருந்த போதிலும் எமது கிராமத்தில் மக்கள் தொகை மிகவும் குறைந்திருந்த காரணத்தினால் எமது செயற்பாடுகளை முன்னெடுப்பதில் பல கஷ்டங்களை எதிர்நோக்கவேண்டியுள்ளது. குறிப்பாக எமது பாடசாலையில் மாணவர்களின் எண்ணிக்கை மிகவும் குறைவடைந்துள்ளது. இருந்த போதிலும் எமது பிறந்த மண்ணின் சமூகக் கட்டமைப்புக்களை கட்டிக்காத்து அடுத்த சந்ததிக்கு கையளிக்கவேண்டிய வரலாற்று கடமை எம் ஒவ்வொருவருக்கும் உள்ளது. எதிர்காலத்தில் எமது பாடசாலையில் மாணவர்களின் எண்ணிக்கையினை அதிகரிப்பதற்கு அயல் கிராமங்களையும் ஒன்றிணைத்து சில முக்கிய வேலைத்திட்டங்களை மேற்கொள்ளவேண்டியுள்ளது.

எமது பாடசாலையினை சிறந்த பிள்ளைநேயப் பாடசாலையாக (Child Friendly School) உருவாக்குவதுடன், இங்கு கல்வி பயிலும் மாணவர்களின் பொருளாதார சுமைகளை குறைக்கும் வேலைத்திட்டத்திற்கு எமது பழைய மாணவர்கள் பூரண ஒத்துழைப்பினை வழங்குதல் வேண்டும். ஆசிரியர்கள் அர்ப்பணிப்பு மிக்க சேவையினை வழங்கி கல்வியறிவும், ஆளுமையும், ஒழுக்கமும், பண்பாடும் மனித நேயமும் உடைய சிறந்த மாணவ சமுதாயத்தினை உருவாக்க தமது பூரணமான பங்களிப்பினை வழங்குதல் வேண்டும். இவை அனைத்தும் எமது பாடசாலைக்கு நாம் செய்யவேண்டியிருக்கின்ற வரலாற்றுக் கடமையும், சமூகக் கடப்பாடும் என்பதனை எமது பழைய மாணவர்கள் நலன்விரும்பிகள், ஊர்மக்கள் மனதிலே கொண்டு வேலைத்திட்டங்களை முன்னெடுத்தல் வேண்டும்.

மாதா பிதா குரு தெய்வம் என்பது எங்களது வாழ்வின் அடிப்படையாகும். எமது வாழ்வு சிறக்கவேண்டும் எனின் இவர்களது ஆசியும் வாழ்த்துக்களும் இருக்கவேண்டும். எனது வாழ்விலே எனது பெற்றோர்களின் வளர்ப்பும் அவர்கள் காட்டிய வழியும் உயர்வுக்கு காரணமாக அமைந்துள்ளது. எனது தாயார் சிறுவயதிலிருந்து பக்தி நெறியிலும் தர்மவழியிலும் என்னை வழிப்படுத்தினார். ஏனையவர்களுக்கு உதவி செய்யவேண்டும், இறைபக்தியுடன் நேர்மையாக வாழவேண்டும் என்ற உயர் சமய, சமூக விழுமியங்களை எனக்கு ஊட்டியமை குறிப்பிடத்தக்கதாகும். எனது தந்தையார் அரசாங்க சேவையில் நில அளவை திணைக்களத்தில் படவரைஞராக கடமையாற்றியிருந்தார். எனது தந்தையார் எனது கல்வி உயர்விற்கு பிரதானமான காரணமாக இருந்தார். அவரின் அறிவுரைகளும், வழிநடத்தல்களும் நான் உயர் பதவிகளை பெற்றுக் கொள்வதற்கு காரணமாக இருந்தன. யாழ் இந்துக்கல்லூரியில் நான் கல்வி பயின்ற காலத்திலிருந்து நான் ஆசிரியராக பதுளை மாவட்டத்தில் கடமையாற்றிய காலத்திலும், இலங்கை நிர்வாக சேவை அதிகாரியாக பணியாற்றிய போதும் என்னை வழிநடத்திய பெருமை எனது தந்தையாரையே சாரும் அவரின் எதிர்பார்ப்புக்களை நான் நிறைவேற்றியிருக்கின்றேன் என்ற மனத்திருப்தி எனக்கு இருக்கின்றது. எனது மூத்த சகோதரரும் எனது கல்வி உயர்விற்கு தனது பங்களிப்பினை வழங்கியமையினை இங்கு நன்றியுடன் நினைவுகூரப்படவேண்டும்.

எனது பேரனார் சுப்பிரமணியம் சண்முகம் அவர்கள் எமது கிராமத்தில் முன்னுதாரணமாக வாழ்ந்தவர். இறைபக்தி, நேர்மை, மற்றவர்களிற்கு உதவி செய்தல், உறவினர்களின் மீதும் அயலவர்கள் மீதும் அன்பும் ஆதரவும் செலுத்துதல் என்பன

அவரிடம் நான் கண்ட சிறந்த குணாதிசயங்களாகும். தனது வாழ்வின் அனுபவங்களை பகிர்ந்து உயர்ந்த வாழ்க்கை நெறிமுறைகளை கற்பித்து என்னை சரியான பாதையில் வழிநடாத்திய பெருமை அவரைச் சாரும். எனக்கு கல்வியை வழங்கிய ஆசிரியர்கள், அதிபர்களை நான் என்றுமே மறக்க முடியாது. அறிவுக்கண்ணை திறந்த அவர்களை என் மனதிலே தெய்வங்களாகவே போற்றி வழிபடுகின்றேன். எமது குலதெய்வங்களான ஞானவைரவ பெருமான், தான்தோன்றி ஸ்ரீ மனோன்மணி அம்பாள், நாரந்தனை சரவணை கர்ணந்தோட்டம் ஸ்ரீசிவசுப்பிரமணியர் எமது வாழ்விற்கு ஒளியூட்டி எம்மை காப்பாற்றி உற்ற துணையாக இருந்து எம்மை வழிநடாத்திவரும் அற்புதமான அருள் நிறைந்த தெய்வங்கள்.

நாம் வாழும் காலத்தில் மற்றவர்களிற்கு எம்மாலான உதவிகளை செய்து எமது கிராமம், எமது பாடசாலை, எமது மக்கள் என்ற சமூக பற்றுடனும் சமய பண்பாட்டு கலாசார விழுமியங்களை மதித்து அவற்றை எம் வாழ்வின் நடைமுறைகளாகக்கொண்டு முன்னுதாரணமாக எமது வாழ்வினை அமைத்துக்கொள்ளவேண்டும். எமது வாழ்வுக்காலத்தில் எங்களால் நன்மை அடைந்தவர்கள் என்று பெயர் குறிப்பிட்டு கூறும்வகையில் ஒரு சந்ததியினரை உருவாக்கக் கூடிய வேலைத்திட்டங்கள் முன்னெடுக்க வேண்டும். அறநெறியிலும் தர்மவழியிலும் எமது வாழ்வினை அமைத்து எமது குடும்பத்திற்கும் கிராமத்திற்கும் எமது பாடசாலைக்கும் எமது சமூகத்திற்கும் பெருமை சேர்க்கவேண்டும். இதுவே எமது அன்னையாம் நாரந்தனை கணேச வித்தியாசாலை எமக்கு கற்று தந்த பாடம் எமது அன்னையின் புகழ் இவ் உலகமெங்கும் ஓங்கியொலிக்கட்டும் எம் அன்னையின் பிள்ளைகள் இவ் வையகம் எல்லாம் சீரும் சிறப்புடனும் பெருமையுடனும் சகல சௌபாக்கியங்களுடனும் வாழ நாரந்தனை தான்தோன்றி ஸ்ரீ மனோன்மணி அம்பாளின் அருட்கடாட்சம் கிடைக்க வேண்டிப் பிரார்த்திக்கின்றேன்.

அன்புடன் அறிவினை அள்ளியே தந்திட்ட அம்பிகை வாழியவே
ஆற்றலும் போற்றலும் சேர்ந்திட்ட மக்களின் அன்னையே வாழியவே
இன்பங்கள் பெற்றெம்மை வாழ்வினில் ஏற்றிய எம்மவள் வாழியவே
ஈடு இணையற்ற பேரும் புகழ் பெற்ற தாயவள் வாழியவே
உன்னடி வந்தவர் உயர்வினை காட்டிய உத்தமி வாழியவே
ஊரும் உலகமும் உன் புகழ் பாடிட உமையவள் வாழியவே
எம்மவர் வாழ்ந்திட பாதைகள் காட்டிய நாயகி வாழியவே
ஏழைகள் வாழ்வினில் தீபங்கள் ஏற்றிய தேவியே வாழியவே

**திரு.சிவலிங்கம் சத்தியசீலன்**
SLAS Special Grade
B.A,M.A Public Admin., M.A Regional Planning
செயலாளர்
மீன்பிடி,போக்குவரத்து, கிராம அபிவிருத்தி அமைச்சு
வடமாகாணம்.



# வழிகாட்டிய அன்னையே நீ வாழி!

எமக்கு வாழ வழிகாட்டிய அன்னைக்கு நூறு வயது. எம் எண்ணங்களில் இன்றும் இளமையாய் பசுமையாய் வாழும் அன்னைக்கு நூறு வயது என்பதை நினைக்கும் போது பெருமையாகவும் நெஞ்சப் பூரிப்பாகவும் இருக்கிறது.

இன்றைய எமது ஏற்றமான வாழ்வுக்கு வித்திட்டவள், அத்திவாரம் அமைத்தவள் கணேசா அன்னை என்றால் மிகையாகாது. 1966 இல் முதலாம் வகுப்பில் அவள் மடியில் அமர்ந்து கொண்டேன். இன்று ஆண்டுகள் ஐம்பது உருண்டு ஓடிவிட்டன. அவளின் நூறு வயதில் அரைவாசிக் காலம் நமது வாழ்வோடு பின்னிப் பிணைந்த காலம்.

என்னைப் பொறுத்தவரை 1966 முதல் 1972 வரை அவள் மடியில் தவழ்ந்த காலமே என் வாழ்வின் வசந்தகாலம் என்பேன். அன்று பொருளாதார வசதி மிகுந்திருக்கவில்லை. நவீன வசதிகள் எதனையும் அனுபவித்ததில்லை. கிராமத்துக்கே உரிய பற்றாக்குறைகள் பலவும் நிறைந்த வாழ்வு. ஆனாலும் மனம் முழுக்க நிறைந்து இருந்தது மகிழ்ச்சி.....மகிழ்ச்சி...மகிழ்ச்சி... அதைத்தவிர வேறொன்றுமில்லை.

கணேசா என்றால் மனக்கண்களில் தோன்றும் முதல் நபர் கணபதிப்பிள்ளை "வாத்தியார்" தான். கோவில் என்றால் சிதம்பரம் நூல் என்றால் திருக்குறள் எமக்கு வாத்தியார் என்றால் பண்டிதர் க.கணபதிப்பிள்ளை ஐயா தான். ஆசிரியராக, தந்தையாக, வழிகாட்டியாக, எம்மை ஆளாக்கியவர் அவர். எவர்க்கும் வாய்க்காத வகையில் அவர் என்னோடு தோழமையோடு பழகினார். இது பலருக்கு ஆச்சரியமாக இருக்கும். அவரின் தோழமையை அவரின் இழப்புக்கு நீண்ட நாட்களின் பின்பு தான் உணர்ந்து கொண்டேன். தமிழ்த்தினப் போட்டிகளில்

பேசுவதற்காக மாலை வேளையில் என்னை வீட்டுக்கு அழைத்து பேச்சு பயிற்றுவிப்பார். அந்த வேளைகளில் மிகவும் நகைச்சுவையாகப் பழகுவார். காலையில் பார்த்த வாத்தியார்தானா இவர் என எண்ணி நான் வியந்துபோவேன். இந்தப் பெருமகன் என்னைப் பொறுத்தவரை மட்டுமல்ல எம்மவர் அனைவருக்குமே தெய்வம்தான். அவரின் அறிவுரைகள் தான் இன்றும் எம்மை வாழவைக்கின்றன. அதிலும் குறிப்பாக அவர் எப்போதும் கூறுகின்ற இரண்டு சொற்தொடர்கள் "நல்ல குருநாதன் நம்மை வாட்டுவது கொல்லவல்ல, பொல்லாப் பிணியகற்ற" என்பதும் "தலையின் மயிரனைய மாந்தர்தம் நிலையில் இழிந்தக்கால்" என்பதும் எமது வாழ்வில் மறக்க முடியாத வழிகாட்டு வாசகங்கள். எங்கள் வாத்தியாரைப்பறி எழுதுவதானால் எண்ணிலடங்காத பக்கங்கள் எழுதலாம் ஆனாலும் இடத்தின் தேவைகருதி அவரின் நினைவுகளை என்நெஞ்சத்தோடு நிறுத்திக்கொள்கிறேன்.

வாத்தியார் என்பது எங்கள் தலைமை ஆசிரியரைக் குறிப்பதைப் போலவே "வாத்தியாரம்மா" என்பது ஆசிரியை கெங்கை முத்து அவர்களையே குறிக்கும். எமக்கு எழுத்து அறிவித்தவர் அவர்தான். பெயரைப் போலவே ஒரு நாள் முத்து அவர். அவர் எனக்கு உறவினரும் கூட. அவரிடம் கல்விகற்கும் பாக்கியம் எமது பிறவிப் பெரும் பேறாகவே கருதுகிறேன். அவர் நீண்டகாலம் எமக்கு கல்வி கற்பிக்கவில்லை. ஓய்வு பெற்றுவிட்டார் ஆனாலும் உறவினர் என்ற காரணத்தால் அவர் அமரராகும் வரை அவரின் வழிகாட்டலைப் பெறும் பேறு பெற்றேன்.

ஆசிரியை திருமதி.சிவனையா (தங்கமணி ரீச்சர்), ஆசிரியை திருமதி.புண்ணிய மூர்த்தி, ஆசிரியை திருமதி.எலியாஸ், ஆசிரியை செல்வி.றோஸ் மேரி இம்மானுவல், ஆசிரியர் கனகரத்தினம்(அதிபரின் தந்தையார்), ஆசிரியர் இராஜதுரை (முன்னாள் அதிபர்), ஆசிரியர் தனபாலசிங்கம், ஆசிரியர் டொமினிக் இவர்களும் எம்மைப் புடம் போட்ட வாழ்வின் வழிகாட்டிகள்.

இவர்களைவிட என் வாழ்க்வை வளம்படுத்திய இருவர் உள்ளனர். அவர்கள் ஆசிரியை புண்ணியவதியும் ஆசிரியை புனிதவதியும் (பூம்பா ரீச்சர்) ஆவர். சிலருக்கு தாய் தந்தையர் பெயரிடும் போதே அவர்களின் பண்புகளும் அமைந்து விடுகின்றன போலும். ஆசிரியை புண்ணியவதி அவர்தான் எனது வாழ்வின் (Roll model) என்னுடைய பழக்கங்கள், பண்புகள், எல்லாமே அவரின் சாயல்தான். எனது உயிர் நண்பன் சற்குணேஸ்வரனின் (சிறி) சிறிய தாயார் அவர். அதனால் தானோ என்னவோ என்னை தன் சொந்தப்பிள்ளையைப் போல நடத்தினார். என் வாழ்வு என்றும் அவருக்கு கடமைப்பட்டது.

ஆசிரியை புனிதவதி அவர்கள், பூம்பா சித்தி என எங்களால் அன்பாக அழைக்கப்பட்டவர். எமது ஆங்கில, விஞ்ஞான ஆசிரியை. இன்று நான் பேசுகின்ற ஆங்கிலத்தின் சொந்தக்காரி. இந்த உலகத்தை நல்ல முறையிலே எனக்கு அறிமுகப்படுத்தியவர். அவரை சில வேளை நான் சந்தித்திருக்காவிட்டால் உலகத்தை சந்திக்க திக்குமுக்காடித்தான் போயிருப்பேன்.

எமை செதுக்கிய சிற்பிகளைத்தவிர என் நெஞ்சில் நிழலாடுபவர்கள் எமது வாழ்வுக்கு இனிமை சேர்த்த என் பள்ளிக்காலத் தோழர்கள்தான். இங்கே அவர்களைப் பட்டியலிடாவிட்டாலும் கூட அவர்கள் அனைவரின் நினைவும் என் நெஞ்சில் இன்றும் பசுமையாகவே உள்ளன. ஊனாய், உணர்வாய் என்னுள்ளே கலந்து தேனாய் தித்திக்கும் தேன் கரும்பாய் என்றும் இனித்து நிற்பவர்கள் அவர்கள்.

ஆக அன்பானவர்களே எம் அன்னை நூற்றாண்டு விழா காணுகிறார். அது எங்களுக்கும் கோலாகலம். அவள் பெயர் சொல்லி நாம் பெருமையடைவதை போல "என் பிள்ளைகள்" என எம் பெயர் சொல்லி அவள் பெருமை கொள்ளும் வண்ணம் எம் வாழ்வை அமைத்துக்கொள்வோம். என்நிலைவரினும் எவ்விடமேகினும் எம் அன்னை இவள் நலம் மறவாதிருப்போம்.

வாழி நாரந்தனை கணேசா!
ஓங்கு புகழுடன் வாழி!

**Dr.வை.யோகேஸ்வரன்**
பாடசாலை வைத்திய அதிகாரி
யாழ்ப்பாணம்.



# 21 ஆம் நூற்றாண்டுக்கான கற்போரை உருவாக்குவதற்கு பாடசாலைகளை வலுப்படுத்துதல்

புதிய நூற்றாண்டில் "ஆசிரியத்துவம்" தொடர்பான எண்ணக்கரு புதிய பரிமாணம் பெற்று வருகிறது! கல்வி தொடர்பான வரலாற்றுப் போக்கில் ஆசிரியத் தொழில் பல வருடங்களைக்கடந்து வந்துள்ளது. உலகமயமாதல், தகவல் தொழில்நுட்பத் துறையியல் அபரிமிதமான வளர்ச்சி, அறிவுப் பொருளாதாரம் ஆகியவற்றின் தாக்கம் ஆசிரியத் தொழிலும் பாரிய மாற்றங்களை ஏற்படுத்தி வருகிறது. இதனால் ஆசிரியத் தொழில் இன்று புதிய சவால்களை எதிர்கொண்டுள்ளது.

கலைத் திட்டமாற்றங்கள், தகவல் தொழில்நுட்ப கருவிகளின் வருகை, இணையத்தள பயன்பாடு, புதிய அறிவுப் பிரவாகம் என்பவற்றுக்கு ஈடுகொடுக்க வேண்டிய சூழ்நிலையில் அனைத்துலக மனித உரிமை தொடர்பான சட்ட ஏற்பாடுகள், சிறுவர் உரிமை தொடர்பான சட்டங்கள் உருவாக்கம், புதிய தலைமுறை மாணவர்களின் நடத்தைக் கோலங்கள் ஆகியவை தொடர்பாக பாரிய பிரச்சினைகளை உருவாக்கியுள்ளது.

ஆசிரியர்கள் என்று கருதப்படுபவர்கள் மாணவ மாணவி களின் கல்வி தொடர்பான பொறுப்புகள் கொண்ட பாடசாலை ஆசிரியர்கள் மற்றும் கல்வித்துறையில் உள்ள கல்விசார் அலுவலர்கள் அனைவரையும் குறிப்பதாகும். பாடசாலைக் கல்விக்கூடாக கற்பித்தல் என்று குறிப்பிடும்போது இரண்டு விடயங்கள் முதன்மை பெறுகின்றன.

1. கலைத்திட்ட அமுலாக்கத்தினூடாக மாணவர்களின் கல்வி அடைவு மட்ட மேம்பாடு.
2. இணைக்கலைத்திட்ட அமுலாக்கத்தினூடாக மாணவர் களின் ஆளுமை விருத்தி தொடர்பான மேம்பாடு

இந்த இலக்குகள் அடையத்தக்க வகையில் பாடசாலைகளில் கலைத்திட்ட அமுலாக்கம் முன்னெடுக்கப்படவேண்டும். புதிய

நூற்றாண்டில் 21 ஆம் நூற்றாண்டுக்கான கற்போரை உருவாக்குதல் முக்கியம் பெறுகிறது. ஆனால் சமகால பாடசாலைச் செயற்பாடுகள் பரீட்சை அடைவு மட்டங்களை உயர்த்துவதை மட்டும் நோக்கங்களாகக் கொண்டு ஒரு பொறிமுறை சார்ந்த பரீட்சை நோக்கிலான முன்னெடுப்புகள் முடுக்கிவிடப்பட்டுள்ளன.

இன்று கற்பித்தல் என்பது மாதிரி வினாத்தாள்களுக்கு விடை எழுதுதல் பரீட்சை தொடர்பாக பாடசாலை - கோட்ட மட்டம் - வலயம் - மாகாணம் என்ற மட்டங்களில் அதிகமான பரீட்சை நோக்கமான செயற்பாடுகள் கூர்மையடைந்துள்ளன. கல்வித்துறை மட்டங்களுக்கு அப்பால் தனியார் கல்வி நிறுவனங்கள், தனியார் அமைப்புகள், ஊடகத்துறை சார்ந்த பத்திரிகைகள், சஞ்சிகைகள், பல்வேறு வங்கித்துறையினர், அரச சார்பற்ற அமைப்புகள் என்ற வகையில் பரீட்சை தொடர்பான செயற்பாடுகளில் அதீத கவனத்தை குவித்து மாணவர்களை பரீட்சை நோக்கியதாக வழிகாட்டல் நிலைமைகள் முனைப்புப் பெற்றுள்ளன.

உண்மையில் கற்றல், கற்பித்தல் செயற்பாட்டில் மதிப்பீடு முக்கிய அம்சமாக உள்ள நிலையில் கற்றல் - கற்பித்தல் முழுமையாக நிறைவேற்றிய பின்னரே மதிப்பீடு இடம்பெறவேண்டும். ஆனால் இன்று பாடசாலைக் கல்விச் செயற்பாடுகள் பரீட்சையாக மாறிவிட்டது. இது மாணவர்களின் சமநிலைத் தன்மையை ஆட்டம் காண வைத்துள்ளது.

உண்மையில் கற்பித்தல் - கற்றல் முறையியல்கள் கற்றல் என்றால் என்ன என்பது பற்றி பல வரைவிலக்கணங்கள் குறிப்பிடப்படுகின்றன.

- அறிவை அல்லது நிபுணத்துவத்தை தேடும் செயல்முறை (Knowles - 1998)
- அனுபவத்தின் காரணமாக நடத்தையில் ஏற்படும் மாற்றம் (Haggard - 1963)
- நடத்தை மாற்றப்படும், ஒழுங்குபடுத்தப்படும் அல்லது கட்டுப்படுத்தப்படும் செயல்முறை
- அனுபவம் காரணமாக நடத்தையில் ஏற்படும் சார்புநிலையான நிரந்தர மாற்றம். இது நாம் அவதானிக்கக்கூடிய வெளி வாரியான நடத்தை மாற்றம் ( Keith Rutledge - 2003 )
- அறிவைப் பெறுதலும் புதிய நடத்தைகளை ஆற்றுவதற்கான ஆற்றலை விருத்தி செய்தலும் (அறிவும் திறன்களும் )
- ஓர் உயிரியின் நடத்தையில் ஏற்படும் சார்பு நிலையான நிரந்தர நடத்தை மாற்றம்.
- அனுபவம் அல்லது பயிற்சி காரணமாக நடத்தையில் ஏற்படும் மாற்றம்.
- அறிவைப் பெறுதல். ஆனால் அறிவைப் பெறுதல் என்பது எப்போதும் நடத்தை மாற்றத்தை ஏற்படுத்தாது.
- 

கற்றல் தொடர்பாக பல கோட்பாடுகள் முன்வைக்கப்பட்டுள்ளன.

1. நடத்தைவாத கற்றல் கோட்பாடு - ( B. F.ஸ்கின்னர் ).
2. அறிகைசார் கற்றல் கோட்பாடு - ( ஜின் பியாயே ).
3. காட்டுருவாத கற்றல் கோட்பாடுகள்.

இக்கோட்பாடுகள் தொடர்பாக பாடசாலைக் கற்பித்தலில் கவனம் செலுத்த வேண்டும். இந்த அடிப்படையில் கற்பித்தலில் புதிய முறையியல்கள் அண்மைக் காலத்தில் நடைமுறைப்படுத்த வேண்டும் என அறிவுறுத்தப்படுகிறது. (5E மாதிரி) ஆனால் பாடசாலைகளில் இன்னமும் மரபுவழி சார்ந்த பாரம்பரியமான கற்பித்தல் முறைகளே காணப்படுகின்றன. இதனால் கற்றல் பேறுகள் எதிர்பார்த்த வகையில் அமையவில்லை என்பது கண்கூடு.

காட்டுருவாத கற்றல் கோட்பாடுகள் தொடர்பாக பின்வரும் விடயங்கள் கற்றலில் இடம்பெற வேண்டும் என எதிர்பார்க்கப்படுகிறது.

- பிரச்சினையை மையமாக கொண்ட கற்றல்.
- கற்றல் செயல்முறைகளில் கவனம் செலுத்துதல்
- கூட்டுறவான குழுக்கற்றல் வேலைகள்
- முதல்நிலை மதிப்பீடுகள்
- சுயமான மற்றும் சகபாடி கணிப்பீடுகள்
- பாரிய ஆய்வு செயற்றிட்டங்கள்

இச்செயற்பாடுகள் பாடசாலை வகுப்பறைகளில் நடைமுறைப்படுத்தப்படுகிறதா என்பது ஆய்வுக்குரியது. கற்றல் பேறுகள் தொடர்பாக ஆசிரியர்கள் அதிக கவனம் செலுத்த வேண்டும். கற்றல் பேறுகள் பின்வருமாறு செயற்படுத்தப்படுகின்றன.

I. அறிவு - சிந்தனை (அறிகை சார்ந்த

II. திறன்கள் - செய்தல் (உள இயக்கம் சார்ந்த)

III. மனப்பாங்குகள் உணர்வுகள் (எழுச்சி சார்ந்த)

இவை தொடர்பாக ஆசிரியர்கள் அதிக கவனம் செலுத்த வேண்டும்.
- மாணவர்கள் எதனை செய்யக்கூடியவர்களாக இருத்தல் வேண்டும்.
- ஓர் அலகை கற்ற பின்னர் எதனைத் தெரிந்திருக்க வேண்டும்.
- எதனை மதிக்க வேண்டும்.
- அத்தகைய பேறுகளை எந்தளவுக்கு அடைய வேண்டுமென அவர்கள் எதிர்பார்க்கப்பட வேண்டும்.

என்பவை பற்றி தெளிவான கூற்றுகளே கற்றல் பேறுகளாகும்.

பாடசாலைக் கற்றல் செயற்பாடுகள் புதிய நூற்றாண்டு பொருந்தும் வகையில் ஒழுங்கமைக்கப்பட வேண்டும். 21 ஆம் நூற்றாண்டுக்கான கற்போர்களை உருவாக்குவதற்கு கல்வித்துறை சார் அனைவரும் ஒன்றிணைய வேண்டும். புதிய அணுகுமுறைகள் கையாளப்பட வேண்டும். 21 ஆம் நூற்றாண்டுக்குரிய கற்போர் தொடர்பாக பின்வருமாறு விளக்கப்படுகின்றது.




**21ஆம் நூற்றாண்டுக்கான கற்போர்**

மேற்காட்டப்பட்ட உருவில் மாணவர்கள் மத்தியில் எண்ணறிவு எழுத்தறிவு என்பவற்றை வினைத்திறன் மிக்க வகையில் ஏற்படுத்தினாலே ஏனைய அடுத்த நிலைகள் எட்டப்படும். இன்னும் எமது பாடசாலைகளில் இவ்வறிவு இல்லாத மாணவர்கள் இருப்பது வருத்தத்திற்குரியது. க.பொ.த. (சா/த) தரத்தில் கற்கும் மாணவர்களில் இந் நிலைமை காணப்படுவது துன்பகரமானது. இம்மாணவர்கள் தொடர்பாக பொறுப்பு வாய்ந்தவர்கள் பலரும் மௌனமாக இருப்பது பொறுப்புக்களையும் வகை கூறல்களையும் தட்டிக்கழிப்பதாகவே கொள்ளப்படவேண்டும்.

மேலும் பாட விடயம், ஒழுக்கம் என்பவற்றில் போதுமான கவனம் செலுத்தப்பட வேண்டும். வகுப்பறையில் கற்றல் - கற்பித்தல் உரிய நேரத்தில் நடைபெறுவதை பாடசாலைத் தலைவர்கள் உறுதிப்படுத்த வேண்டும். கலைத்திட்ட முகாமை, வகுப்பறை மதிப்பீடு, உள்ளக மதிப்பீடு என்பவை இன்று பாடசாலைகளில் திருப்திகரமாக காணப்படவில்லை. 21 ஆம் நூற்றாண்டுக்கான திறன்கள் உருவாக்கப்பட வேண்டும்.

**21ஆம் நூற்றாண்டுக்குரிய திறன்கள்**




பாடசாலை கல்வியினூடாக மாணவர்கள் மத்தியில் 21 ஆம் நூற்றாண்டுக்கான திறன்களை உருவாக்குவதற்கு பொருத்தமான வகையில் பாடசாலைச் செயற்பாடுகள் மீள் ஒழுங்கு செய்யப்படவேண்டும். இதற்கான பௌதீக வளங்கள், மனித வளங்கள், நிதி வளங்கள், தகவல் வளங்கள், நேர வளங்கள் தொடர்பான வினைத்திறன் மிக்கதாக பயன்படுத்தப்பட வேண்டும். இதனூடாகவே 21 ஆம் நூற்றாண்டுக்கான கற்கும் சமூகம் ஒன்றை உருவாக்க முடியும்.

உலகளாவிய புதிய போக்கில் பல மாற்றங்கள் ஏற்பட்டு வந்தாலும் எமது பாடசாலை வகுப்பறையில் இன்னமும் மரபு ரீதியான கற்பித்தல் முறைகளே வழக்கத்தில் உள்ளன. பாடசாலைகள் கற்றல் தொடர்பாக நவீன பகுப்பியல் தொடர்பாக கவனம் செலுத்த வேண்டும். கற்றல் பேறுகள் தொடர்பாக அதிக கவனம் செலுத்த வேண்டும். பரீட்சை தொடர்பான அடைவுகளில் மட்டும் அதிக கவனத்தை குவிப்பது விடுத்து கற்றல் பேறுகளின் புதிய சிந்தனையில் சிந்தனை தொடர்பாகக் கவனம் உயர் மட்டம் செலுத்த வேண்டும்.

மாணவர்களை மேற்பரப்புக் கற்றல் செயற்பாடுகளில் இருந்து விடுவித்து ஆழமான கற்றல் செயற்பாடுகள் தொடர்பாக சிந்திக்க வேண்டும். இதனைப் பின்வருமாறு குறிப்பிடலாம். அதாவது, புளூமின் திருத்தப்பட்ட பகுப்பியல் தொடர்பாக செயற்பாடுகளை மாற்றிக் கொள்ள வேண்டும்.

**புளூமின் திருத்தப்பட்ட பகுப்பியல்**

**உருவாக்குதல்**

புதிய கருத்துக்கள் விளைவுகள் அல்லது நோக்கும் வழிமுறைகள் ஆகியவற்றை உருவாக்குதல், வடிவமைத்தல், நிர்மாணித்தல், திட்டமிடல் உற்பத்தி செய்தல், கண்டுபிடித்தல்.

↑

**மதிப்பிடுதல்**

ஒரு தீர்மானத்தை அல்லது சில நடவடிக்கைகளை அல்லது நடவடிக்கைத் தொகுதியை நியாயப்படுத்தல், சரி பார்த்தல், எடுகோளமைத்தல், விமர்சித்தல், பரிசோதனை செய்தல், தீர்ப்பு வழங்கல்.

↑

**பகுப்பாய்தல்**

விளக்கங்கள் மற்றும் தொடர்புகளைத் தேடி அறிவதற்கு தகவல்களை சிறு பகுதிகளாகப் பிரித்தல், ஒப்பிடுதல், ஒழுங்கு படுத்தல், நிர்மாணத்தை உடைத்தல், வினா தொடுத்தல், கண்டறிதல்.

↑

**பிரயோகித்தல்**

இன்னுமொரு பழக்கப்பட்ட சூழ்நிலையில் தகவலைப் பயன்படுத்தல், அமுல்படுத்தல், கொண்டு நடத்தல், பயன்படுத்தல், நிர்வகித்தல்.

↑

**விளங்குதல்**

கருத்துக்களை அல்லது எண்ணக்கருக்களை விளக்குதல், வியாக்கியானஞ் செய்தல், சுருக்கிக் கூறுதல், எளிமைப்படுத்தல், வகுதிப்படுத்தல், விளக்குதல்.

↑

**நினைவிலிருத்தல்**

தகவல்களை மீட்டல், இனங்காணல், பட்டியல்படுத்தல், விபரித்தல், மீட்டல், பெயரிடுதல், கண்டறிதல்.

21 ஆம் நூற்றாண்டுக்கான கற்போரை உருவாக்குவதற்கு பாடசாலைகளில் கற்றல் பேறுகள் தொடர்பாக அதிக கவனம் செலுத்த வேண்டும். இன்று பாடசாலைகளில் கற்பித்தலின் போது நினைவில் இருத்தல், விளங்கிக் கொள்ளுதல் என்ற மட்டங்களுடன் பரீட்சை நோக்கியதான மேற்பரப்புக் கற்றலே நடைபெறுகிறது. இது தாழ்மட்ட சிந்தனையையே உருவாக்குகிறது!. பிரயோகித்தல், பகுப்பாய்வு செய்தல், மதிப்பிடுதல், உருவாக்குதல் ஆகியவற்றை நோக்கி மாணவர்களை மேம்படுத்த வேண்டும். இதுவே ஆழக் கற்றல் செயற்பாடுகளை வலுப்படுத்துவதன் ஊடாக உயர்மட்ட சிந்தனை நோக்கியதாக மாணவர்களை அழைத்துச் செல்ல வேண்டும்.

கற்பித்தல் செயல்முறையில் புதிய செயல்முறைகளை நடைமுறைப்படுத்துவதற்கு ஏற்றவகையில் ஆசிரியக் கல்வி தொடர்பாக புதிய ஏற்பாடுகள் செய்யப்படவேண்டும். பாடசாலை மட்டத்தில் SBTD செயற்பாடுகளில் இதற்கு முன்னுரிமை கொடுக்கப்படவேண்டும். 21 ஆம் நூற்றாண்டுக்கான கல்வி இலக்குகள் தொடர்பாக கவனம் செலுத்துதல் வேண்டும்.

## 21 ஆம் நூற்றாண்டுக்கான கல்வி இலக்குகள்

- சிறந்த தொடர்பு கொள்ளும் ஆற்றல் ( வாசிப்பு, எழுத்து, பேச்சு, கிரகித்தல் )
- சுயமான கற்றலுக்கான சமூகதிறன் ( ஒழுக்கம், நேர்சிந்தனை, நடத்தை, பொறுப்புக் கூறும் திறன் )
- குழுச் செயற்பாடுகளில் கூடிக் கற்கும் ஆற்றல் ( வலையமைப்பு அறிவு )
- மாற்றங்களை உள்வாங்கும் ஆற்றல்
- சிந்திக்கும் ஆற்றல். ( பிரச்சினை தீர்த்தல், விமர்சனம், தர்க்கம் )
- அறிவுப் பயண முயற்சியாண்மை
- டிஜிற்றல் ( எண்ணம் ) அறிவு.

புதிய நூற்றாண்டுக்கான செயற்பாடுகளில் பாடசாலைக் கல்வி தொடர்பாக ஆசிரியர்களின் பணியும் பொறுப்பும் மாற்றமடைந்து வருகின்றது. ஆசிரியர்கள் பின்வரும் விடயங்களில் கவனம் செலுத்த வேண்டும்.

- கற்றலுக்கு ஆயத்தப்படுத்துதல்.
- கற்றலில் ஊக்குவித்தல்
- பாட எண்ணக்கருவை தெளிவாக முன்வைத்தல்.
- கற்றலில் எதிர்நோக்கும் இடர்களை கண்டறிந்து அகற்றுதல்.
- மாணவர்கள் முன்னேற்றத்தை அளவிடல்.
- வகுப்பறை முகாமையில் கவனம் செலுத்துதல்.

மேலும் பாடசாலைக் கலாசாரம், சூழமைவு, கலைத்திட்டம் போதனை வடிவமைப்பு, தலைமைத்துவம், ஆசிரியத்துவம் ஆகிய எண்ணக்கருக்கள் தொடர்பாக புதிய சிந்தனைகளை மேற்கொள்ள வேண்டும். கல்வி மறுசீரமைப்பு, கல்விச் சீர்திருத்தம் என்ற மாற்றங்களின்போது உள்ளடக்கத்தில் மட்டும் கவனம் செலுத்தாது. பாட விடயங்களில் மட்டும் கவனம் செலுத்தாது. அமுலாக்கம் தொடர்பான விடயங்களிலும் கவனம் செலுத்த வேண்டும். குறிப்பாக,

- வகுப்பறைச் சூழல்
- வகுப்பறை முகாமைத்துவம்
- ஆளணியினருக்கான செயலூக்கமுள்ள பயிற்சி
- நிருவாக மட்டத்தில் உள்ளோருக்கான பயிற்சி
- அர்த்தமுள்ள வகையிலான வகுப்பறை கண்காணிப்பு
- பணி நிறைவேற்றம் தொடர்பான கண்காணிப்பு
- செயலாற்றுகை தரக்கணிப்பு தொடர்பான நடவடிக்கைகள்.

ஆகிய விடயங்களில் புதிய பொறிமுறைகளை கையாளவேண்டும். அப்போதுதான் உலக செல்நெறியில் எமது மாணவர்களையும் வழிப்படுத்த முடியும். இல்லையெனில் ஒருசில மாணவர்கள் வெற்றிகளை மட்டும் காட்சிப்படுத்தி கொண்டாடுவதுடன் கல்வி நிறைவடைந்து விடும். ஏனைய மாணவர்கள் தொடர்பாக நாம் கவலை கொள்வதில் இருந்தும் விடுபட்டு வருகின்றோம். இது ஆரோக்கியமானதல்ல.

**பொன்னம்பலம் அருணகிரிநாதன்**
பிரதிக்கல்விப் பணிப்பாளர்
தீவகக் கல்வி வலயம்.
இப்பாடசாலையின் முன்னாள் ஆசிரியர் (1989 - 1991)

# இடைநிலைப்பாடசாலைகளில் கேத்திர கணிதம் கற்றலில் உள்ள இடர்பாடுகளை எதிர்காலவியல் நோக்கில் பரிசீலித்தல்


**ஆய்வுச்சுருக்கம் (Abstract)**

கணிதப்பாடத்தில் கேத்திரகணிதப்பகுதிக்கு மாணவர்கள் விடையளிப்பதில் அதிக அக்கறை செலுத்தாமல், அப்பகுதியைத் தவிர்த்தே வினாக்களுக்கு விடையளிப்பதாக கல்வியளாளர்கள் மட்டத்தில் கூறப்படுகின்றது.

இதன் உண்மைத்தன்மையை அறியும் பொருட்டு, இடைநிலைப் பாடசாலைகளில் கேத்திரகணிதம் கற்றலிலுள்ள இடர்பாடுகள் என்ற இந்த ஆய்வு மேற்கொள்ளப்பட்டது. இந்த ஆய்வுக்கான வினாக்களாக இரண்டாம் நிலைப்பாடசாலைகளில் கேத்திரகணிதம் கற்றலில் இடர்பாடுகளை ஏற்படுத்தும் காரணிகள் எவை? இரண்டாம் நிலைப் பாடசாலைகளில் கேத்திரகணிதம் கற்றலை மேம்படுத்துவதற்குரிய காரணிகள் எவை? ஆகிய இரு வினாக்களும் அமைந்திருந்தன.

இவ் வகையில் யாழ்ப்பாண மட்டத்திலுள்ள ஐந்து கல்வி வலயங்களிலிருந்து தரம் - 8,9,10 ஐச் சேர்ந்த மாணவர்கள் 379 பேர் மொத்தமாக, படையாக்கப்பட்ட மாதிரி எடுப்பு முறையில் தெரிவு செய்யப்பட்டு, அவர்களுக்கு வினாக் கொத்துக்கள் வழங்கப்பட்டன. மேலும் தெரிவு செய்யப்பட்ட கணிதபாடசாலை உதவிக்கல்விப் பணிப்பாளர், கணிதபாட ஆசிரிய ஆலோசகர்கள், அதிபர்கள், ஆசிரியர்கள் ஆகியோருக்கு தனியாகவும் மாணவர்களுக்குத் தனியாகவும் தயாரிக்கப்பட்டு லைக்கேட் அளவுத்திட்டத்தில் அமைந்த அபிப்பிராயக் கொத்துக்கள் வழங்கப்பட்டு, அவர்களில் தெரிவு செய்யப்பட்டவர்களுடன் நேர்காணலும் மேற்கொளளப்பட்டது. தரவுகளின் பகுப்பாய்விலிருந்து, பெரும்பாலான ஆசிரியர்கள், மாணவர்கள் ஆகியோரின் கேத்திரகணித அறிவு தாழ்வாக இருப்பதும், பெரும்பாலான ஆசிரியர்களும் மாணவர்களும் அதிபர்களும் பெற்றோர்களும் கேத்திரகணித கற்றலில் அதிக அக்கறை காட்டாமையும், கேத்திரகணிதம் கற்பித்தலுக்கான பொருத்தமான வளங்களின் கிடைப்பனவும் பயன்பாடும் குறைவாக இருப்பதும் கண்டறியப்பட்டன.

ஆசிரியர்களினது தேவைகள் உடனடியாக இனங்காணப்பட்டு அத்தேவைகளை நிறைவு செய்வதன் மூலம் மாணவர்களில் மனப்பாங்கு மாற்றத்தை ஏற்படுத்துவதன் மூலமும் அதிபர்கள், ஆசிரியர்கள், பெற்றோர்கள் ஆகியோரின் கூட்டிணைந்த அக்கறை காட்டாமையும் கேத்திரகணிதம் கற்பித்தலுக்கான பொருத்தமான வளங்களின் கிடைப்பனவும் பயன்பாடும் குறைவாக இருப்பதும் கண்டறியப்பட்டன. ஆசிரியர்களினது தேவைகள் உடனடியாக இனங்காணப்பட்டு, அத்தேவைகளை நிறைவு செய்வதன் மூலமும் அதிபர்கள், ஆசிரியர்கள், பெற்றோர்கள் ஆகியோரின் கூட்டிணைந்த அக்கறை மூலமும் ஆய்வுப்பிரச்சனைக்குத் தீர்வு எட்டப்படலாம்.

**சிறப்புச்சொற்கள் (Key words) –** கேத்திரகணிதம், கற்றல் இடர்பாடுகள், கற்றல் தந்திரோபாயங்கள்.

**ஆய்வின் அறிமுகம்**

கேத்திர கணிதத்தின் முக்கியத்துவம் உலகளாவிய ரீதியில் எல்லோராலும் இன்று உணரப்படுகின்றது. கேத்திரகணிதம் கற்பித்தல் தொடர்பாக அறிவு, திறன், மனப்பாங்கு ஆசிரியர்களிடம் எந்தளவுக்கு நிறைந்துள்ளதோ அந்தளவிற்கு மாணவர்களிடமும் இத்திறன் தொடர்பான அறிவு, திறன் மனப்பாங்குகள் காணப்பட்டு கேத்திரகணித கற்றல் கற்பித்தலில் விளைதிறனையும் வினைத்திறனையும் மேம்படுத்தும்.

இன்று நாடுகள் யாவும் எதிர்காலவியல் நோக்கில் தமது செயற்பாடுகளை வகுத்து வருகின்றன இவ்வகையில் இலங்கையிலும் பசுமையான எதிர்காலத்தை நோக்கி எமது கல்விச் செயற்பாடுகளை வகுத்துக் கொள்ள வேண்டும். கேத்திரகணிதக் கற்றலானது பாடசாலை மாணவர்களது தர்க்கிக்கும் திறனையும் பிரச்சனை விடுவிக்கும் திறனையும் மேம்படுத்த வல்லன எனவே இடைநிலைப் பாடசாலைகளில் கேத்திரகணிதம் கற்றலிலுள்ள இடர்பாடுகளை அறிந்து கொள்ளல் அவசியமானது.

இந்த நிலையை அறிந்து இவ்விடயம் தொடர்பாக ஆய்வு செய்யும் தேவையின் பொருட்டு இம்முயற்சி முன்னெடுக்கப்படுகின்றது. இப் பின்னணியில் நவீன கணிதக்கல்வியின் போக்கிற்கு ஏற்ப யாழ்ப்பாண மாவட்டத்தில் கணிதம் கற்பிக்கும் ஆசிரியர்களது செயன்முறைத்திறன்கள் விருத்தி தொடர்பான நிலையை அறிந்து கொள்வது அவசியமாகின்றது.

**ஆய்வின் பின்னணியும் ஆய்வு நோக்கமும்**

யாழ்ப்பாண மாவட்டத்தில் ஐந்து வலயக்கல்வி அலுவலகங்களிலும் கணிதப் பாடத் துறைசார் உதவிக்கல்விப் பணிப்பாளர்கள், ஆசிரிய ஆலோசகர்களுடன் கலந்துரையாடியதன் அடிப்படையிலும், சகல பாடசாலைகளுக்கும் நேரடியாகச் சென்று அவதானித்ததன் மூலமும் கணித பாடம் இடைநிலை மாணவர்களுக்கு கடினமானதாக இருப்பதை அறியக்கூடியதாக இருந்தது.

அதிலும் கேத்திர கணிதப் பாடம் தொடர்பான தேர்ச்சிகள் மிகவும் குறைவான மட்டத்தில் காணப்படுவதையும் அவதானிப்பின் மூலம் அறிய முடிந்தது. இப்பிரச்சினைக்கான அடிப்படைக் காரணங்களைக் கண்டறியும் பொருட்டு இவ்வாய்வு மேற்கொள்ளப்படுகின்றது.

**ஆய்வின் குறிக்கோள்கள்**

1. இரண்டாம் நிலைப்பாடசாலைகளில் கேத்திர கணிதம் கற்றலில் செல்வாக்குச் செலுத்தும் காரணிகளை இனங்காணல்.

2. இரண்டாம் நிலைப்பாடசாலைகளில் கேத்திர கணிதம் கற்றலை மேம்படுத்துவதற்குரிய தந்திரோபாயங்கள், உத்திகளை கண்டறிதல்.

**ஆய்வு வினாக்கள்**

1. இரண்டாம் நிலைப் பாடசாலைகளில் கேத்திரகணிதக் கற்றலில் உள்ள இடர்பாடுகளை ஏற்படுத்தும் காரணிகள் யாவை?

2. இரண்டாம் நிலைப்பாடசாலைகளில் கேத்திர கணிதம் கற்றலை மேம்படுத்துவதற்குரிய தந்திரோபாயங்கள், உத்திகள் எவை?

**இலக்கிய மீளாய்வு**

இலங்கைப் பரீட்சைத் திணைக்களத்தின் க.பொ.த.(சா.த) பெறுபேற்றுப் பகுப்பாய்வு அறிக்கையின்படி கேத்திரகணித வினாக்களை தெரிவு செய்த மாணவர்கள் குறைவான சதவீதத்தினராய் இருப்பதுடன் அவர்களுக்கும் அப்பகுதியின் மீது காட்டியுள்ள அடைவும் மிக குறைவாகவுள்ளது. மேலும் ஆசிரியர்களின் கேத்திரகணித அறிவும் மிகக்குறைவாகவுள்ளமை ஆய்வுகள் மூலம் வெளிப்படுத்தப்பட்டுள்ளன.

இலங்கையில் தரம் 11 வரை கணிதக்கல்வி கட்டாயமானது. "எல்லோருக்கும் கணிதம்" என்று "சகலருக்கும் ஒரே கணிதம" என தரம் - 10,11 இல் அட்சரகணிதம், கேத்திரகணிதம் என்பதை உள்ளடக்கிய உயர் கணித அடிப்படையினை எல்லோருக்கும் கற்பிக்க முயன்றமை. க.பொ.த.(சா.த) இல் உயர் சித்தியின்மை வீதம் காணப்பட்டமைக்கான காரணமாக இருக்க முடியும்.

**சந்திரசேகரன் (2009)**

கணிதம், விஞ்ஞானம் ஆகிய பாடங்களில் இலங்கை மாணவர்களிடம் பின்வரும் காரணங்களினால் தேர்ச்சிகள் குறைவாகக் காணப்படுகின்றன என்றார்

- இப்பாடங்கள் மாணவர்களின் நாளாந்த வாழ்க்கை நிலைகளுடனும் கலாசார அம்சங்களுடனும் இணைத்துக் கற்பிக்கப்படாமை.
- இப் பாடங்களைக் கற்பிப்பதற்கான விசேட பயிற்சியையும் தகுதிகளையும் கொண்டிராத ஆசிரியர்கள்
- மாணவர்களினது வேறுபாட்டை கருத்திற் கொள்ளாது பயன்படுத்தப்படும் கற்பித்தல் முறை.
- உலக வங்கி ஆய்வாளர்களின் நோக்கில் பாடசாலைக் கல்விக்குச் சமாந்தரமாக எழுந்துள்ள தனியார் போதனைக் கலாசாரம் பாடசாலைக் கல்வியில் ஏற்படுத்தும் இடர்பாடுகள்.

- பாட ஏற்பாட்டில் ஏற்படும் மாற்றங்கள் ஆசிரியர்களை உரிய காலத்தில் சென்றடையாமை.

- மாணவர்களின் கவனத்தைச் சிதைக்கும் ஏராளமான காரணிகள்.

- கல்வித்துறையின் முறையான மேற்பார்வையையும் வழிகாட்டலையும் வழங்கக்கூடிய தகுதி வாய்ந்த அதிகாரிகள் இல்லாமை, அதன் திறமையின்மைக்கு ஒரு பிரதான காரணம்.(2003, தேசியக்கல்வி ஆணைக்குழு அறிக்கை).

- பாடசாலை முறையின் கற்பித்தல் ஏற்பாடுகள் ஆற்றல் மிக்க மாணவர்களுக்கே பொருந்துகின்றன. மெதுவாகக் கற்கும் மாணவர்கள், பின்தங்கிய மாணவர்கள் ஆகியோரைக் கருத்தில் கொள்ளும் பல்வேறு முறைகளை மேற்கொள்ளாமை.

- மிகப் பொருத்தமான பரிகார கற்பித்தல் நடைமுறைகள் முறையாக பின்பற்றப்படாமை.

- கணித ஆசிரியர்களுக்கு புதிய கற்பித்தலியல் நுட்பங்கள் குறித்த அவசியப்பாடுகளை உணர்த்தாமை.

- கணிதபாடத்தில் ஏற்படக்கூடிய தராதர வீழ்ச்சியை அதிபர், ஆசிரியர் மற்றும் பெற்றோர்கள் யாவரும் கூட்டாக இணைந்து தீர்க்கக்கூடிய நடவடிக்கைகளில் அக்கறை காட்டாமை.

**கருணாநிதி (2009)**

இரண்டாம் வகைப் பாடசாலைகளில் கணித பாட அடைவில் பின்வரும் காரணிகள் செல்வாக்குச் செலுத்துகின்றன என்றார்.

- கற்றல் கற்பித்தல் கண்காணிப்பும் மேற்பார்வையும், கற்றலுக்கான வசதிகள், கற்றல் ஒழுங்கு முறைகள், கணிப்பீடுகள் முறைகள்.

- ஆசிரியர் கல்வித்தராதரமும் தொழில் சார் அனுபவங்களும்.

- கற்பித்தல் முறைகள்.

- மாணவர், பெற்றோர் மற்றும் அதிபருடன் ஆசிரியர் பேணிவரும் தொடர்புகள்

- முகாமைத்துவத்தில் ஈடுபட்டுள்ளோரின் தராதரங்கள்.

- பாடத்திட்டம், பாடநூல்கள், ஆசிரியர் கை நூல்கள் உரிய நேரத்தில் கிடைக்காமை.

- கணிப்பீட்டு முறைகளின் தராதரம் பேணப்படாமை.

- பிள்ளைகளின் கற்றல் பணிகளில் பெற்றோரின் கவனக்குறைவு, ஆசிரியருடன் கலந்துரையாடாமை, வீட்டில் போதிய வசதிகள் வழங்காமை, மற்றும் குடும்ப வருமானம், வீட்டு வேலைகளைச் செய்வதற்கு வழங்கப்படும் உதவி.

- மாணவர் பின்னணியும் தொடர்புடைய உடல், உளவியல் காரணிகள், வீட்டில் கற்பதற்கான வசதிகளும், அதற்கென வழங்கப்படும் உதவிகளும்.

- வலயமட்டம், கோட்ட மட்டங்களில் மாணவர்கள் அடைவை மேம்படுத்த எடுக்கப்படும் நிகழ்ச்சித்திட்டங்கள், சேவைக்கால பயிறசியின் வினைத்திறன்கள், வலயக்கல்வி அலுவலகர்களின் மனப்பாங்குகள்.

நைஜீரியாவில் "இடைநிலைப் பாடசாலைகளில் கேத்திர கணிதம் கற்பித்தல் கற்றலில் பிரச்சினைகள்" என்ற தலைப்பில் செய்யப்பட்ட ஆய்வின் முடிவுகள் பின்வருமாறு சுட்டிக் காட்டப்பட்டுள்ளன.

- பெரும்பாலான ஆசிரியர்களது கேத்திர கணித அறிவு குறைவாக உள்ளது.
- ஒத்த உதாரணங்கள் வழங்கப்பட்ட போதும் தரப்படும் பிரசினங்களைத் தீர்க்க முடியாத அளவிற்கு மாணவர்கள் கணிதத்தில் அடிப்படை அறிவு இல்லாது காணப்பட்டனர்.
- கற்பித்தல் கற்றல் சூழல் ஊக்கமளிக்கக் கூடிய வகையில் அமைந்திருக்கவில்லை. இதற்கு காரணமாக அமைவது கற்றல் கற்பித்தலுக்கான உள்ளக கட்டமைப்புக்களும், அடிப்படை வசதிகளும் மிகக்குறைந்தளவு காணப்படுவது ஆகும்.
- மாணவர்களிடம் கற்கும் மனப்பாங்கு மிகவும் குறைவாக இருக்கின்றது. அவர்களிடம் கற்பதற்கான விருப்பமும் ஆயத்தமும் குறைவாகக் காணப்பட்டன.
- ஆசிரியர்கள் போதியளவு ஊக்குவிப்பு கிடைக்காத காரணத்தினால் குறைந்தளவு அர்ப்பணிப்புடன் செயலாற்றும் நிலையில் காணப்பட்டனர்.
- தேவையான வசதிகள் செய்யப்படுவதுடன் ஆசிரியர் மற்றும் மாணவர் தொடர்பில் பொருத்தமான மேற்பார்வையினை மேற்கொள்ளுவது இந்நிலைமையை மாற்றியமைக்கும்.

மேற்குறிப்பிடப்பட்டுள்ள இலக்கிய மீளாய்வின் அடிப்படையில் இலங்கையிலும் வெளிநாடுகளிலும் கேத்திர கணிதம் கற்றலில் மாணவர் இடர்படுவது தெளிவாகிறது.

**ஆய்வுமுறையியல்**

இந்த ஆய்விற்கு ஐந்து வலயங்களிலுமிருந்து மாணவர்கள், அதிபர்கள், ஆசிரியர்கள், கணிதப்பாட ஆசிரி ஆலோசகர்கள், உதவிக் கல்விப்பணிப்பாளர்கள் முறையே 30,15,15,5,5 பேர் மாதிரியாக தெரிவு செய்யப்பட்டனர். மேலேயுள்ள ஆய்வு வினாக்கள் தொடர்பாக மாணவர்களுக்கு வேறாகவும் அதிபர்கள், ஆசிரியர்கள், கணிதபாட ஆசிரிய ஆலோசகர்கள், உதவிக் கல்விப் பணிப்பாளர்கள் ஆகியோருக்கு வேறாகவும் பத்து விடயங்கள் அடங்கிய நேர்காணல் படிவம் கொடுக்கப்பட்டது. இதற்காக ஐந்து அம்ச அளவீட்டுத்திட்டம் பயன்படுத்தப்பட்டது. நேர்காணலுக்கு பங்குபற்றுநர்களாக ஒவ்வொரு வகையிலும் இருந்து 6,3,3,1,1 என்ற விதமாக மாணவர்கள், அதிபர்கள், ஆசிரியர்கள், கணிதப்பாட ஆசிரிய ஆலோசகர்கள், உதவிக் கல்விப்பணிப்பாளர்கள் குழுக்கலந்துரையாடல் நேர்காணலுக்காக தெரிவு செய்யப்பட்டனர். இவ்வாறு தெரிவு செய்யும் போது மாணவர்கள், அதிபர்கள், ஆசிரியர்கள் நோக்க அடிப்படையில் எழுமாறாகத் தெரிவு செய்யப்பட்டனர்.

கிரெஜ்ஜி.மோகன் என்பவர்களின் அட்டவணைப்பிரகாரம் படைகொண்ட மாதிரி,

எடுப்பு முறையில் ஆய்வு மாதிரிப்பரம்பல் தயாரிக்கப்பட்டுள்ளது. இதன்படி ஐந்து வலயங்களிலுமிருந்தும் மொத்தமாக மாணவர்கள் ஆய்விற்கு உட்படுத்தப்பட்டனர். (அட்டவணை 1)

அட்டவணை-1

வலய ரீதியில் வகுப்பு வாரியாக ஆய்வுக்கு உட்படுத்தப்பட்ட மாணவர்கள்.

| தரம் | வலயம் | | | | | |
|---|---|---|---|---|---|---|
| | தென்மராட்சி | வடமராட்சி | யாழ்ப்பாணம் | வலிகாமம் | தீவகம் | மொத்தம் |
| 8 | 12 | 21 | 44 | 39 | 08 | 124 |
| 9 | 13 | 22 | 45 | 39 | 09 | 128 |
| 10 | 13 | 21 | 47 | 36 | 10 | 127 |
| மொத்தம் | 38 | 64 | 136 | 114 | 27 | 379 |

**தரவு சேகரித்தலும் பகுப்பாய்வும்**

அட்டவணை-1 இல் உள்ளதன்படி தரம்-08, தரம்-09, தரம்-10 மாணவரகளில் முறையே 124,128,127 மாணவர்களுக்கு பரீட்சையொன்று நடத்தப்பட்டது. தரம்-08 கேத்திர கணித பகுதிக்குரிய வினாத்தாள்களில் தரம்-08, தரம்-09, தரம்-10 மாணவர்கள் விடையளித்த விதம் கீழே காட்டப்படுகிறது.



தரம் 8 கேத்திர கணித பகுதி வினாக்களுக்கு தரம் 8, தரம் 9, தரம் 10 மாணவர்களின் துலங்கல்

மேலேயுள்ள படத்திலிருந்து யாழ் மாவட்டத்தில் கற்கும் மாணவர்கள் கேத்திர கணிதப்பகுதிகளில் சிறந்த பெறுபேற்றைப் பெறவில்லை என்பது தெளிவாகின்றது. சேர்காணல் படிவம் மூலம் பெறப்பட்ட துலங்கல்களின் இடைப் பெறுமானம் மூன்றிலும் பெரிதாயின் $(X\geq3)$ ஏற்றுக் கொள்வது எனவும் இல்லை $(X<3)$ எனின் நிராகரிப்பது என்ற வாறும் தீர்மானிக்கப்பட்டது.

**கண்டறிதல்கள்**

அட்டவணை-2

இரண்டாம் நிலைப் பாடசாலைகளில் கேத்திரகணிதம் கற்றல் கற்பித்தலில் செல்வாக்கு செலுத்தும் காரணிகள் பற்றிய மாணவர்கள் மற்றும் மேற்பார்வையாளர்கள் கருத்து.

| | மேற்பார்வையாளர் கருத்து | மாணவர்களின் கருத்து |
|---|---|---|
| | துலங்களின் இடை | |
| காரணி - 1 | 3.65 | 3.83 |
| காரணி - 2 | 3.83 | 3.97 |
| காரணி - 3 | 3.95 | 3.67 |
| காரணி - 4 | 3.83 | 4.37 |
| காரணி - 5 | 3.18 | 3.30 |
| காரணி - 6 | 3.68 | 3.30 |
| காரணி - 7 | 3.50 | 3.50 |
| காரணி - 8 | 3.00 | 3.03 |
| காரணி - 9 | 3.90 | 3.27 |
| காரணி - 10 | 3.43 | 3.6 |

அட்டவணை-3

இடைநிலைப் பாடசாலைகளில் கேத்திரகணிதம் கற்றல் கற்பித்தலை மேம்படுத்துவதற்குரிய தந்திரோபாயங்கள், உத்திகள், காரணிகள் பற்றிய மாணவர்கள், மேற்பார்வையாளர்கள் கருத்து.

| | மேற்பார்வையாளர் கருத்து | மாணவர்களின் கருத்து |
|---|---|---|
| | துலங்களின் இடை | |
| காரணி - 1 | 4.75 | 4.57 |
| காரணி -2 | 4.73 | 4.53 |
| காரணி -3 | 4.33 | 4.47 |
| காரணி -4 | 4.63 | 4.00 |
| காரணி - 5 | 4.70 | 4.73 |
| காரணி - 6 | 4.73 | 4.60 |
| காரணி - 7 | 4.75 | 4.70 |
| காரணி - 8 | 4.55 | 4.20 |
| காரணி - 9 | 4.58 | 4.83 |
| காரணி - 10 | 4.75 | 4.77 |

அட்டவணை 2,3 இலிருந்து காரணிகள் பத்தும் கேத்திரகணிதம் கற்றலில் செல்வாக்குச் செலுத்துகின்றன என்பது உறுதியாகிறது.

- பெரும்பாலான ஆசிரியர்களின் கேத்திரகணித அடிப்படை அறிவு குறைவாக உள்ளது.
- பெரும்பாலான ஆசிரியர்கள் கேத்திர கணிதப்பகுதிக்கு அதிக முக்கியத்துவம் கொடுப்பதில்லை.
- மாணவர்களிடம் கற்கும் மனப்பாங்கு மிகவும் குறைவாக இருக்கின்றது.
- அடைவு வீழ்ச்சிக்கு அதிபர், ஆசிரியர் மற்றும் பெற்றோர்கள் யாவரும் கூட்டாக இணைந்து தீர்க்கக்கூடிய நடவடிக்கைகளில் அக்கறை காட்டாமை காணப்படுகிறது.

- சரியான கற்பித்தலை மேற்கொள்வதற்குத் தேவையான வழிகாட்டிகள், பொருட்கள் போதியளவு பாடசாலைகளில் இல்லை.
- அறிவுறுத்தல்கள், உபகரணங்கள், கையேடுகள், உரியவாறு பயன்படுத்தப்படுவதில்லை
- ஆசிரியர்கள் பொருத்தமான கற்பித்தல் முறைகளைக் கையாண்டு மாணவர்கள் தொடர்ந்து தேர்ச்சியாக கற்பதற்கு வழிசெய்வதில்லை.

**விதந்துரைப்புகள்**

- மேலதிகாரிகள் கேத்திரகணிதப் பகுதிகளில் ஆசிரியர்களிற்கு இருக்கக்கூடிய பலவீனங்களை இனங்கண்டு அது தொடர்பான செயலமர்வுகள், கருத்தரங்குகள், கணிதவட்டங்கள் போன்றவற்றை அடிக்கடி வைப்பதனூடாக ஆசிரியர்கள் மத்தியில் கேத்திர கணிதத்தில் ஆர்வத்தை ஏற்படுத்த முடியும்.
- ஒவ்வொரு பாடசாலைகளிலும் கணித ஆய்வு கூடம் இருப்பதில் கவனம் செலுத்துதல் வேண்டும்.
- அறிவுறுத்தல்கள், உபகரணங்கள், கையேடுகளை கட்டாயம் பயன்படுத்துதல் வேண்டும்.
- கற்றற் சூழலானது கட்டாயம் பயனுறுதி மிக்க வகையில் கற்றல் கற்பித்தலை தூண்டு வதாக அமைய வேண்டும்.
- பாடசாலையில் கற்றல் கற்பித்தலுக்குத் தேவையான வசதிகள் கட்டாயம் செய்து கொடுத்தல் வேண்டும்.
- ஆசிரியர்கள் பொருத்தமான கற்பித்தல் முறைகளைக் கையாண்டு மாணவர்கள் தொடர்ந்து தேர்ச்சியாக கற்பதற்கு வழிசெய்தல் வேண்டும்.
- பெற்றோர் கட்டாயம் அவர்களுடைய பிள்ளைகளின் செயற்பாடுகளையும் அடைவு மட்டங்களையும் கண்காணித்தல் வேண்டும்.

இந்த ஆய்வின் மூலம் பெறப்பட்ட மேற்படி விதப்புரைகளை அமுல் படுத்துவதன் மூலம் கேத்திர கணிதத்தில் விருப்பையும் அடைவையும் மாணவர்களிடையே மேம்படுத்த முடியும்.

**உசாத்துணை நூல்கள்**

1. National Institute of Education (NIE). (2006). Report Submited to the Director General of the NIE by the Committee for the Subject of Mathematics. Colombo, Sri Lanka.
2. Telima Adolphus (2011) Problems of Teaching and Learning of Geometry in Secondary Schools in Rivers State, Nigeria.
3. கருணாநிதி.மா(2009) கணித பாடத்தில் வினையாற்றல்கள்.அகவிழி, ஜூலை-2009, பக்கம்-15.
4. கல்வியமைச்சு (2011) கணித ஆசிரியர்களின் கேத்திரகணித அறிவினை மேம்படுத்துவதற்கான வழிகாட்டி, பத்தரமுல்ல, கல்வியமைச்சு.
5. சந்திரசேகரன்.சோ.(2009) இலங்கையில் பாடசாலைக்கல்வியின் தராதர வீழ்ச்சி ஜூலை-2009, பக்கம் - 15.

**சதாசிவம் அமிர்தலிங்கம்**
யாழ்ப்பாணம் தேசியக்கல்வியியற் கல்லூரி.
amirthalikam@ yahoo.com

**தம்பிஐயா கலாமணி**
கல்வியியல்துறை யாழ் பல்கலைக்கழகம்.
kalamanyt@gmail.com



# Body Language in English

There are four skills in English, reading, writing, speaking, and listening. Reading and listening are inputs. Writing and speaking are output. When we speak to others language, expression (body movement) body language are very important. Here I am going to say something about body language. Learning English as a second language is'nt just about learning to speak the words. You see, we don't just speak with words; we also use forms of non verbal communication. It is more commonly known as body language, and it is a universal language.

**What is Body Language?**

Body language includes our facial expressions as we speak, our and movement, hand gestures, how we move our body and how we use our voice In English, and other languages, we can show our emotions, our feelings, hopes,dreams,wishes and attitudes without a word ever passing our lips.

As a lot of communication is actually non verbal, it is vital that you don just learn to speak the words, but you also learn how to show it with your body. The most important thing is to say natural. Forced body language will look strange, but natural movements and expression will convey your message.

If you need to put across a happy, positive message, your body language should naturally follow the words you are saying. If you need to convey a sad, unhappy message your body should again be able to follow the spoken words. Etiquette in body language is very important to making sure people are comfortable around you.

**Hand Gestures**

Our hand gestures are very important when we are speaking. Look at any one while they speak their first language. They are

probably using hand gestures as they speak. Hand gestures help us to communicate the message being spoken. Look at the following ways we can use our hands and fingers for communication.

- A dramatics small or wide movement can show the siye of something.
- Make a first to show anger
- Point and move your finger to make an accusation.
- welcome someone you can hold out your hands with the palms pointing to the sky.
- You can also welcome someone by showing them a chair to sit down or where to go.

So as you can see, hand gestures can convey a large variety of message. be careful when in different countries, as one hand gestures meaning a welcome may mean something else.

**Facial Expressions**

Facial expressions are very important when communicating with others. More often than not, people will look at your face as you talk. So, your facial expression can make the listener aware of your feelings and message. When speaking English, smilling as you talk is a good way to show you are pleaced. When listening to other people speaking English, it is good etiquette to smile or nod along with the conversation. This shows you understand what is being said a shrug of the shoulders and confused facial expression can let them know the problem.

Keeping eye contact with the person you are talking. or listening to, is very important It's just being polite.

**Body Language**

your actual body position is very important when speaking to someone in English. It is thought to be polite to not stand too close to someone, and to keep a friendly distance. Unless they invite you to come closer or circumstances dictate it, keep a little distance as you talk.

However, standing a little bit closer, or learning in to who is speaking can be a sign of how intently you are listening to them. Having your arms or legs crossed when speaking to someone is generally thought to be protective measure. If you would like to show you are open, keep your arms at your side or on your knee if you are sitdown. Body language is one language we can all understand. That is why it is vital you know the basic rules and regulations. You will learn a lot from body language by observing people in your own country and in foreign countries. So when we learning a language we should study the body language. Because that is playing very important role in speaking.

**Mr.T.Thanenthiran.**
Lecturer (English),
DHARGNAGAR NATIONAL COLLEGE OF EDUCATION.
DHARGNAGAR.



# நாரந்தனைப் பிரதேசத்தின் அபிவிருத்தியும் அதற்கான பொறி முறைகளும்

## அமைவிடம்

யாழ்ப்பாண மாவட்டத்தில் சப்த தீவுகளில் ஒன்றான ஊர்காவற்றுறை தீவில் ஊர்காவற்றுறை பிரதேச செயலர் பிரிவின் கீழ் நாரந்தனைப் பிரதேசம் காணப்படுகின்றது. இப் பிரதேசம் நாரந்தனை வடக்கு (J/55), நாரந்தனை வடமேற்கு (J/56), நாரந்தனை (J/57), நாரந்தனை தெற்கு (J/58) ஆகிய கிராம அலுவலர் பிரிவுகளை உள்ளடக்கியுள்ளது. இப் பிரதேசத்தின் மொத்தப் பரப்பளவு 12.87 சதுரக் கிலோ மீற்றர் ஆகும். இப் பிரதேசத்தை நிர்வகிக்கும் உள்ளூராட்சி நிறுவனமாக ஊர்காவற்றுறை பிரதேச சபை காணப்படுகின்றது.

நாரந்தனை வடக்கு கிராம அலுவலர் பிரிவில் ஏழு கிராமங்கள் காணப்படுகின்றன. செட்டியார் தோட்டம், துலாவில் குளம், கொக்குருணி, உதாரப்பிட்டி, பெரிய புலம், தான்தோன்றியம்மன் கோயிலடி, மாடியான் காடு, சீனியன் காடு (சண்டைக் காடு) என்பன அவையாகும்.

நாரந்தனை வடமேற்கு கிராம அலுவலர் பிரிவில் நான்கு கிராமங்கள் காணப்படுகின்றன. தம்பாட்டி, அம்பலவாணர்புலம், தம்பிரான் தோட்டம், பெரியபுலம் என்பன அவையாகும்.

நாரந்தனை கிராம அலுவலர் பிரிவில் நாரந்தனை கிழக்கு, நாரந்தனை மேற்கு, நாரந்தனை மத்தி மற்றும் கொட்டங்காடு ஆகிய நான்கு கிராமங்கள் காணப்படுகின்றன.

நாரந்தனை தெற்கு கிராம அலுவலர் பிரிவில் ஈச்சங்காடு, சூரியாவத்தை ஆகிய இரண்டு கிராமங்கள் காணப்படுகின்றன.

### சனத்தொகைப் பரம்பல்

நாரந்தனை பிரதேசத்தில் 785 குடும்பங்களைச் சேர்ந்த 2753 மக்கள் தற்போது வசித்து வருகின்றனர். இவர்களில் 145 குடும்பங்களைச் சேர்ந்த 390 பேர் J/55 கிராம அலுவலர் பிரிவிலும், 309 குடும்பங்களைச் சேர்ந்த 935 அங்கத்தவர்கள் J/56 கிராம அலுவலர் பிரிவிலும், 150 குடும்பங்களைச் சேர்ந்த 603 பேர் J/57 கிராம அலுவலர் பிரிவிலும், 145 குடும்பங்களைச் சேர்ந்த 390 பேர் J/57 கிராம அலுவலர் பிரிவிலும் வசித்து வருகின்றனர்.

சனத்தொகைப் பரம்பலை அவதானிக்கும் போது 2010ம் ஆண்டில் மீள்குடியேறிய மக்கள் தொகையானது தொடர்ச்சியாக அடுத்துவரும் ஆண்டுகளில் குறைவடைந்து செல்வதை பொதுவாக ஒவ்வொரு கிராம அலுவலர் பிரிவிலும் அவதானிக்க முடிகிறது. இவ்வாறு குறைவடைந்து செல்வதற்கான காரணங்களாக வேலைவாய்ப்பினை நாடிச் செல்லல் மற்றும் யாழ் நகரை அண்டிய பிரபல பாடசாலைகளில் பிள்ளைகளை சேர்ப்பதற்காக குடிபெயரல் போன்றவற்றைக் குறிப்பிடமுடியும்.

### கலாச்சாரம்

இப் பிரதேசத்தில் வசிக்கின்ற அனைவரும் இலங்கைத் தமிழர்களாகவும் இந்து மற்றும் கத்தோலிக்க மதத்தை தழுவியவர்களாகவும் காணப்படுகின்றனர். இந்துக்கள் 2229 பேர் மற்றும் கத்தோலிக்கர் 529 பேர்.

இப் பிரதேசத்தில் இந்து மற்றும் கத்தோலிக்க வணக்கஸ்தலங்கள் காணப்படுகின்றன. இந்துக் கோவில்களாக வரலாற்றுச் சிறப்பு மிக்க ஸ்ரீ தான்தோன்றி மனோன்மணி அம்மன் ஆலயம் (J/55), ஞான வைரவர் கோவில் (J/55), தம்பாட்டி நுனிபுரம் ஸ்ரீ முத்துமாரி அம்மன் ஆலயம் (J/56), ஆதி வைரவர் ஆலயம் (J/56), நாரந்தனை கந்தசாமி கோவில் (J/57) என்பன அமைந்துள்ளன.

தம்பாட்டி கிராமத்தினரால் நாட்டுக்கூத்து என்னும் கிராமிய நடனம் யாழ் குடாநாட்டின் பல்வேறு பாகங்களிலும் அரங்கேற்றப்பட்டு வருகின்றது.

இப் பிரதேசத்தில் வணக்கஸ்தலங்கள் அதிகளவு காணப்பட்ட போதிலும் பெரும்பா லானவை யுத்த காலத்தில் சேத முற்றதினால் அவை புனரமைப்பு செய்ய வேண்டிய நிலையிலேயே காணப்படுகின்றன. எனவே இவற்றை புனரமைப்பு செய்வதற்காக மத்திய மற்றும் மாகாண அரசின் நிதி ஒதுக்கீடுகள் மற்றும் புலம் பெயர்ந்தோரின் பங்களிப்பு என்பன அவசியம் தேவைப்படுகின்றது.

### கல்வி

இப் பிரதேச மாணவர்களது கல்வி வளர்ச்சியை நோக்கும் போது தரம் 10 வரை கல்வியினை தொடர்ந்த மாணவர்களின் எண்ணிக்கை அதிக சதவீதத்தில் காணப்பட்ட போதிலும் க.பொ.த (சா/த) மற்றும் க.பொ.த (உ/த) பரீட்சைகளில் சித்தியடைந்தோர் எண்ணிக்கை மிகவும் குறைவாகவே காணப்படுகின்றது. பல்கலைக்கழகப் பட்டப்படிப்பினை

மேற்கொள்ளும் மாணவர்களின் எண்ணிக்கை விரல் விட்டு எண்ணக்கூடியளவிலேயே காணப்படுகின்றது.

இவ்வாறாக கல்வித்தரத்தில் வீழ்ச்சி நிலை காணப்படுவதற்குரிய காரணங்களாக வசதி வாய்ப்புள்ள பெற்றோர்கள் தங்கள் பிள்ளைகளை யாழ் நகரப் பாடசாலைகளில் சேர்த்து கல்வி வசதிகளை வழங்குவதுடன் தாங்களும் குடும்பமாக இடம்பெயர்ந்து செல்கின்றமை மற்றும் வறுமை நிலை காரணமாக கல்வியைத் தொடரமுடியாத நிலை என்பவற்றைக் குறிப்பிடமுடியும்.

இப் பிரதேசத்தில் மூன்று பாடசாலைகள் காணப்படுகின்றன. இவற்றில் J/55 கிராம அலுவலர் பிரிவில் நாரந்தனை கணேச வித்தியாலயம் நீண்ட காலப் பின்னணியைக் கொண்டிருப்பதுடன் 1970 வரை தரம் 5 வரை வகுப்புக்கள் காணப்பட்டிருப்பினும் தற்போது தரம் 11 வரை மாணவர்களுக்கான கற்பித்தல் நடவடிக்கைகள் மேற்கொள்ளக்கூடியதாக இருக்கின்றது. J/56 கிராம அலுவலர் பிரிவில் தம்பாட்டி அரசினர் தமிழ் கலவன் வித்தியாலயம் காணப்படுகின்றது. J/57 கிராம அலுவலர் பிரிவில் முக்கியத்துவம் வாய்ந்த நாரந்தனை றோமன் கத்தோலிக்க பாடசாலை காணப்படுகின்றது.

இப் பிரதேச மாணவர்களின் கல்வி விருத்திக்கு வெளிநாடுகளில் வசிக்கும் புலம்பெயர்ந்தோரின் பங்களிப்பு மிகவும் அவசியம் தேவைப்படுகின்றது. ஏனெனில் வறுமைக்கோட்டின் கீழ் வாழும் பெற்றோர் தங்கள் பிள்ளைகளின் கல்விக்காக நிதி ஒதுக்கீட்டினை மேற்கொள்ளமுடியாதுள்ளது. ஓரளவு புலம்பெயர் மக்களின் பங்களிப்பு இப் பிரதேசத்திற்கு கிடைக்கின்ற போதிலும் அது போதியதன்று. மேலும் இப் பிரதேச மாணவர்களுக்கு கல்வி தொடர்பான விழிப்பூட்டல் நடவடிக்கைகளை மேற்கொள்வதற்கும் நடவடிக்கை எடுக்கப்படல் வேண்டும்.

**பொருளாதார நடவடிக்கைகள்**

விவசாயம், மீன்பிடி, கால்நடை வளர்ப்பு என்பன இப் பிரதேசத்தின் பிரதான பொருளாதார செயற்பாடுகளாகக் காணப்படுகின்றன.

விவசாயத் துறையே இப்பிரதேசத்தின் பொருளாதாரத்திற்கு பெரும்பங்களிப்பு செய்கின்றது. இங்கு விவசாய நிலப்பரப்பில் நெல், புகையிலை, மிளகாய், வெங்காயம், கத்தரி போன்ற பயிர்கள் செய்கைபண்ணப்படுகின்றன. விவசாயம் பெரும்பாலும் மழை நீரை நம்பியே செய்கைபண்ணப்படுகின்றது. இப் பிரதேசத்தில் சிறிய அரச குளங்கள், தனியார் கிணறுகள் மற்றும் கேணிகள் என்பன காணப்பட்ட போதிலும் அவை நீண்ட காலம் புனரமைப்பு செய்யப்படாமல் இருப்பதனால் விவசாய நடவடிக்கைகளுக்கு பயன்பாடற்றதாக காணப்படுகின்றது. மேலும் இப் பிரதேசத்தில் நிலவும் கடும் வரட்சி காரணமாக நீர் உவராகி வருவதனாலும், புவியியல் காரணிகளாலும் நிலத்தடி நீர்ப் பற்றாக்குறை பெரும் பிரச்சனையாகக் காணப்படுகின்றது.

இப் பிரதேசத்தின் விவசாய நடவடிக்கையை அதிகரிக்க வேண்டின் இப் பிரதேசத்திலுள்ள

அரச குளங்கள் மற்றும் கேணிகள் புனரமைப்பு செய்யப்படல் வேண்டும். முக்கியமாக கீளிக்குளம், துலாவில் குளம், வேம்புக்குளம், சின்னக்குளம், புண்ணியன் குண்டுக் குளம் என்பன புனரமைக்கப்படல் வேண்டும். மேலும் பொதுக்குழாய் நீர் வசதிகள் விஸ்தரிக்கப்படல் வேண்டும். கடல் நீரை நன்னீராக்கும் திட்டங்கள் நடைமுறைப்படுத்தப்படல் வேண்டும்.

மீன்பிடித் துறையை அதிகரிக்கும் நோக்குடன் நண்டு வளர்ப்பு, கடலட்டை வளர்ப்பு போன்றவற்றின் சாத்தியப்பாடு தொடர்பாக ஆய்வுகள் மேற்கொள்ளப்படல் வேண்டும். விராட்டித் துறைமுகம் புனரமைப்பு செய்யப்படல் வேண்டும். வெளிச்சவீடு மற்றும் மீன் பதனிடும் நிலையம் என்பன அமைக்கப்படல் வேண்டும்.

கால்நடை வளர்ப்பினை விருத்தி செய்யவேண்டின் அதிக பால் உற்பத்தியை கொடுக்கக்கூடிய பசு இனங்களை அறிமுகப்படுத்தல் மற்றும் வரட்சியை தாங்கக்கூடிய மேய்ச்சல் நிலங்களை உருவாக்கல் என்பவற்றில் கவனம் செலுத்தப்படல் வேண்டும்.

இப் பிரதேசத்தின் பொருளாதாரத்திற்கு வலுச்சேர்க்கும் துறையாக உல்லாசப் பயணத்துறை காணப்பட்ட போதிலும் சுற்றுலா விடுதிகள் மற்றும் நட்சத்திர கோட்டல்கள் என்பன அமைக்கப்படும் சந்தர்ப்பத்தில் இத் துறையை விருத்தி செய்ய முடியும். இதன் மூலம் பெருமளவு வருமானத்தை ஈட்டமுடியும்.

**இடர் முகாமைத்துவம்**

இப் பிரதேசத்தில் வரட்சி, வெள்ளம், கடுங்காற்று என்பன பிரதான அனர்த்தங்களாகக் காணப்படுகின்றன.

உவர்நீர் தடுப்பணை அமைத்தல், குளங்கள் மற்றும் வாய்க்கால்கள் புனரமைப்பு, பொதுக் குழாய்கள் மூலம் குடிநீர் வசதி ஏற்படுத்தல் போன்றவற்றின் மூலம் ஓரளவு இடர்களை தவிர்க்க முடியும்.

நாரந்தனைப் பிரதேசத்தின் அபிவிருத்தியில் இப் பிரதேசத்திலிருந்து புலம் பெயர்ந்து வெளி நாடுகளில் வசிக்கும் மக்களின் முதலீடு என்பது தற்போது பிரதான தேவையாகவுள்ளது. அதன் மூலமே பல்வேறு அபிவிருத்தி நடவடிக்கைகளை முன்னெடுக்க முடியும். குறிப்பாக வீதிகள் புனரமைப்பு, கணேசா மைதானம் புனரமைப்பு, முன்பள்ளிகள் புனரமைப்பு, நூலகம் அமைத்தல் மற்றும் பொது மண்டபம் அமைத்து மாணவர்களுக்கு மாலை நேரக் கல்வி மற்றும் கருத்தரங்குகள் என்பவற்றை நடாத்த முடியும்.

**இ.சுரேந்திரநாதன்**
உதவி திட்டமிடல் பணிப்பாளர்,
மீன்பிடி கிராமிய அமைச்சு



# வெளிநாடு செல்லும் தாய்மாரின் பிள்ளைகள் எதிர்நோக்கும் பிரச்சனைகள்

## அறிமுகம்

முறைசார் கல்வியை வழங்குகின்ற சமூக நிறுவனமான பாடசாலை தன்னகத்தே பல்வேறு நோக்கங்களைக் கொண்டதாக இயங்குகின்ற போதும் இதன் பிரதான இலக்காக அமைவது கற்றல் கற்பித்தல் செயல்முறையாகும். கற்றல் கற்பித்தல் செயல்முறை முறைப்படி நடைபெறுவதை உறுதி செய்வதும் தேவையான மேம்படுத்தல் நடவடிக்கையை எடுப்பதும் பாடசாலைகளின் இன்றியமையாத பணியாகும் இப்பணியைச் சிறப்புறச் செய்வதற்கு மாணவர்களின் குடும்ப நிலையும் ஒரு காரணியாக அமைகின்றது இச்செயன்முறையின் மூலகர்த்தாவாக தாய்மார் காணப்படுகின்றனர்

குடும்பமானது சமுதாயத்தின் ஆதாரமான குழுவாகவும் அதன் சகல உறுப்பினர்களினதும் அதிலும் குறிப்பாக சிறுவர் சிறுமியரின் வளர்ச்சி நலவாழ்வு ஆகியவற்றிற்கு ஏற்ற இயற்கைச் சூழலாகவும் விளங்குகின்றபடியால் சமுதாயத்தில் அது தனக்குரிய முழுப் பொறுப்புக்களையும் ஏற்றுக் கொள்வதற்கு அவசியமான பாதுகாப்பையும் ஒத்தாசையையும் அதற்கு அளித்தல் வேண்டும் குழந்தை தனது ஆளுமையை முழுமையாகவும் இசைவாகவும் விருத்தி செய்வதற்கு ஒரு குடும்பச் சூழலில் ஆனந்தமும் அன்பும் பற்றுணர்வும் உள்ள சுற்றாடலில் வளர வேண்டும் தாயிற் சிறந்த கோயிலுமில்லை தந்தை சொல்மிக்க மந்திரமில்லை என்பது முதுமொழியாகும் இதற்கு இணங்க ஒரு குடும்பத்தின் குலவிளக்காக விளங்கும் தாயே மேன்மையானவள் பிள்ளை பெறுகின்ற இயந்திரமாக வர்ணிக்கும் நிலையை விடுத்து பாசத்தின் உறைவிடமாக பார்க்கின்ற நிலையே இவ்வுலகினில காணப்படுகின்றது இவ்வாறாக விளங்குகின்ற தாயானவள் குழந்தையை பாலூட்டி தாலாட்டி சீராட்டி வளர்த்து கல்வியில் உயர்ந்தவனாக்கப்படாத பாடுபடுகின்றாள் இவ்வாறான தாயும் குழந்தையும் மிகவும் அன்னியோன்னிய உறவில் கலந்து வாழ்ந்து வரும் வேளையில் குடும்பத்தின் பல்வேறு

நெருக்கீடுகளினால் தனது குடும்பத்தினை முன்னேற்றுவதற்காக இலங்கையை விட்டு வெளியேறி வெளிநாடுகளில் உழைத்துப் பணத்தினைச் சம்பாதிப்பதற்காக பெற்ற குழந்தைகளை கணவனுடனோ அல்லது தாயுடனோ அல்லது மாமியாரிடமோ அல்லது உறவினருடனோ விட்டுவிட்டுச் சென்றுவிடுகின்றாள்

மனதளவில் குழந்தைகளைப் பிரிய மனமின்றி தன் குழந்தைகளின் முன்னேற்றத்திற்காக வெளிநாடு சென்றுவிடுவதால் அக் குழந்தைகள் எதிர்நோக்கும் பிரச்சனைகள் தொடர்பாக அவள் அறியாதவளாகின்றாள் யாருடைய பொறுப்பில் குழந்தைகளை விட்டுச் சென்றாளோ அவர்களினாலேயே அதிகளவு பிரச்சினைகள் உருவாகி அப்பிஞ்சு உள்ளங்கள் செய்வதறியாது சிதைவடைவதனை அத் தாயானவள் உணரத் தவறுகின்றாள் பிள்ளைப் பருவமானது மானிட வாழ்வின் ஒரு முக்கிய கால கட்டமாகும் எனவே ஒரு பிள்ளை அப்பருவத்திலே தான் அனுபவிக்க வேண்டிய அனைத்து உரிமைகளையும் உரியவாறு அனுபவிப்பதற்கான உரிமையைப் பெற்றிருக்கிறது மேலும் பிள்ளைப் பருவத்துக்குரிய உடல் உள முதிர்ச்சியின்மை காரணமாக ஒரு பிள்ளையின் பிறப்புக்கு முன்னும் பின்பும் வளர்ந்தோர் பிள்ளையின் மீது நிறைவேற்றப்பட வேண்டிய பொறுப்புக்கள் பல உண்டு இப் பொறுப்புக்களின் அடிப்படையில் பிள்ளைகள் கொண்டுள்ள உரிமைகளும் பல உள்ளன இவ்வாறாக ஒரு பிள்ளையின் அல்லது அதன் பெற்றோரின் அல்லது சட்டபூர்வமான பாதுகாவலரின் இனம் மதம் மொழி பால் சமூகநிலை அரசியல் கொள்கை மற்றும் வேறு எத்தகைய வேறுபாடுகளையும் கவனத்தில் கொள்ளாது ஒரு பிள்ளையானது தான் அனுபவிக்க உரித்துடைய சகல உரிமைகளையும் அனுபவிக்கும் உரிமை ஒவ்வொரு பிள்ளைக்கும் உண்டு எனினும் இவ் உரிமைகள் மீறப்படும் சந்தர்ப்பங்களே எண்ணிலடங்கா பிள்ளைகளின் உரிமைகளை அவர்களிடத்தே இருந்து பறித்துக் கொள்ளும் சந்தர்ப்பங்கள் பலவாகும் அவ்வாறு நடந்து கொள்வோர் பிள்ளைகளது உரிமைகளைப் பாதுகாப்பதற்கான பொறுப்பைத் தம் கடமையாகக் கொண்டிருப்பவரே ஆவார் என்பது மிகவும் துரதிஷ்டவசமான விடயமாகும் இத்தகைய நிலையிலே அப்பிள்ளைகள் எதிர்நோக்கும் பிரச்சனைகள் தொடர்பாக ஆராயலாம்

**பிள்ளைகள் எதிர்நோக்கும் பிரச்சினைகள்**

தாய் பிள்ளைப்பாச உயர்வு அற்றுப் போகின்றமை தாய்க்கும் பிள்ளைக்குமான தொப்புள் கொடி உறவினால் ஏற்பட்ட பாச உணர்வானது பிள்ளைகளிடத்தில் இருந்து தாய் விலகியிருக்கும் போது பாச உணர்வு அற்றுப் போகும் நிலை காணப்படுகின்றது தாயின் அரவணைப்பில் வளரும் குழந்தைகள் அவரின் அரவணைப்பு இல்லாத போது பாசமற்றவர்களாகின்றனர் இதனால் அன்பு பாசம் ஆகியவற்றின் தேவைக்காக ஏங்கித் தவிக்கும் பிள்ளைகள் அவற்றைப் பெற்றுக் கொள்வதற்காக தவறான வழிகளை நாடிச் செல்லும் நிலை காணப்படுகின்றது.

**பிள்ளைகள் மன உளைச்சல்களுக்கு ஆளாக நேரிடுதல்**

தாயின் அரவணைப்பில் வாழ்ந்த குழந்தைகள் அவரின் அரவணைப்பு இல்லாத நிலையில் பல்வேறுவிதமான மன உளைச்சல்களுக்கு ஆளாகின்றனர் இதனால் பிள்ளைகள் பல சிக்கல் நிலைக்குத் தள்ளப்படுகின்றனர் பாடசாலைக் கல்வியில் நாட்டமின்மை வீட்டுப்பாடங்களைச் செய்யாமையால் கல்வியில் பின்னடைவு பரீட்சைப்

புள்ளிகள் குறைவடைதல் போன்றவற்றால் கல்வியில் பின்தங்கும் நிலை ஏற்படுவதுடன் நாளடைவில் இடைவிலகலுக்கும் உள்ளாகும் நிலை காணப்படுகின்ற தன்மைகள் கூட எதிர்காலத்தில் ஏற்படுவதுடன் பாடசாலைகளில் வழிகாட்டலுக்கும் ஆலோசனைக்கும் பொறுப்பாகக் கடமையாற்றும் ஆசிரியர்களும் பல இடர்பாடுகளுக்கு முகம் கொடுக்கின்றனர்

**தாம் தனிமைப்பட்டு விடுகின்றோம் என உணரும் நிலை உருவாகுதல்**

தாயார் வெளிநாடுகளுக்கு செல்வதானால் தம்முடன் தாயார் இருப்பதால் ஏற்பட்டிருந்த பாதுகாப்பு நிலை தற்போது இல்லை எனவும் இதனால் தாம் தனிமைப்படுத்தப்பட்டுள்ளதாகவும் பிள்ளைகள் உணருவதால் இதுவும் அவர்களின் கல்வி நிலையைப் பாதிப்பதில் தாக்கம் செலுத்துகின்றது தந்தையுடனோ அம்மம்மா அப்பப்பாவுடனோ இருந்தாலும் தாயைப் பிரிந்து வாழும் நிலை மிகவும் வேதனையானதாகும்

**குடும்பத்தின் மூத்த பிள்ளையிடம் குடும்பப் பொறுப்பை ஒப்படைத்தல்**

தாயார் வெளிநாடு சென்றதனால் குடும்பத்தின் பொறுப்பை மூத்த பிள்ளையிடம் ஒப்படைக்கும் நிலை காணப்படுகின்றது ஒன்றிற்கு மேற்பட்ட குழந்தைகள் உள்ள குடும்பங்களில் இந்நிலை சாதாரணமாக காணப்படுகின்றது இதனால் இளைய சகோதரர்களைக் கவனிப்பதற்காக மூத்தபிள்ளை பாடசாலையில் இருந்து இடைநிறுத்தப்படுவதால் அப் பிள்ளையின் எதிர்காலம் மிகவும் பாதிக்கப்படுகின்றது பிள்ளையைப் பராமரித்தல் சமைத்தல் வீட்டு வேலைகளைக் கவனித்தல் போன்றவற்றினால் பிள்ளை இடைநிறுத்தப்படுவது அப்பிள்ளையின் எதிர்கால நலன்கள் பாதிக்கப்படுகின்றன

**சிறுவர் துஷ்பிரயோகத்திற்கு உள்ளாகுதல்**

தாயில்லாமல் வளரும் பிள்ளைகள் தந்தையால் வேலைக்குச் சென்ற நிலையில் பாதுகாப்பற்ற சூழ்நிலையில் வீட்டில் உள்ள ஏனைய உறுப்பினர்களினாலோ அன்றி வெளிநபர்களினாலோ சிறுவர் துஷ்பிரயோகத்திற்கு உள்ளாக்கப்படக்கூடிய சூழல் உருவாகின்றது பருவமடைந்த பெண்பிள்ளைகளாயின் கருத்தரிப்பதால் அவர்களின் பாடசாலைக் கால வாழ்க்கை பாதிப்படைவதால் அவர்களின் எதிர்காலம் கேள்விக்குள்ளாக்கப்படகின்றது

**பாதுகாவலர்களால் வேலைச்சுமைக்கு ஆளாகுதலும் மனநிலை பாதிப்படைதலும்**

தனது உறவினர்களான அம்மம்மா, அப்பப்பா, மாமா, மாமி, சித்தி, சித்தப்பா, சின்னம்மா போன்றவர்களின் பொறுப்பில் விட்டுச் செல்வதால் அவர்களுக்கான மேலதிக வேலைக்காரர்களாக இப்பிள்ளைகள் தொழிற்படுவதுடன் குறைகள், பிழைகளுக்காக கடுமையான வார்த்தைப் பிரயோகங்களும் சில வேளைகளில் கடும் தண்டனையும் வழங்கப்படுவதால் பிள்ளைகள் மிகவும் கவலையடையதுடன் மனத்தாக்கங்களுக்கும் உடல் உபாதைகளுக்கும் உட்படுவதுடன் தமது தேவைகளுக்காகப் பாடசாலைகளில் இருந்து இடைநிறுத்தப்படுவதும் ஒழுங்கற்ற வரவிற்கும் காரணமாவதால் பிள்ளைகளின் கல்வியில் பாரிய தாக்கதினை ஏற்படுத்துகின்றது.

**தந்தை போதைப்பழக்கத்திற்கு அடிமையாவதால் வீட்டின் நிலை மேலும் மோசமடைதல் :**

தாயின் பண வருமானத்திலே அன்றி தனது உழைப்பிலோ வாழும் தந்தையானவர் கேட்பதற்கு மனைவியில்லாத நிலையில் மது போன்ற போதைகளுக்கு அடிமையாவதால் பிள்ளைகள் பெருமளவில் பாதிப்படைகின்றனர். பிள்ளைகளின் கல்வி தொடர்பாக அக்கறையற்ற நிலை, தினமும் பிள்ளைகளுடன் மதுபோதையில் சண்டையிடுதல் போன்றவற்றால் அவர்களது கல்வி நிலை பின்னடைய வாய்ப்பு ஏற்படுகின்றது.

**பருவமடைந்த பெண் பிள்ளைகள் துஷ்பிரயோகத்துக்கு உள்ளாகுதல்:**

வீட்டில் தாயார் இல்லா நிலையில் பருவமடைந்த பெண்கள் பிள்ளைகள் தமது பல்வேறு நெருக்கடிகள் தொடர்பாக தந்தையிடம் எடுத்துக் கூறுவதில் இடர்படுவதால் பல்வேறு நெருக்கடிகளுக்கு அவர்கள் உள்ளாகுதல் பல பிரச்சினைகளைத் தோற்றுவிக்கின்றது. பல சந்தர்ப்பங்களில் தந்தையினால் பாலியல் துஷ்பிரயோகத்திற்கு உட்பட்ட பிள்ளைகள் பலர் பாதிப்படைந்துள்ளமை குறிப்பிடத்தக்கது. தாயாருடன் இருக்கும் காலங்களில் பிள்ளைகளின் கல்வி மேம்பாடடைதல்.

இலங்கையினுடைய கல்விச் செலவானது ஏனைய துறைசார் செலவினங்களைவிட அதிகமாக செலவிடப்படுகின்றது. எதிர்காலத்தில் முதலீடாக உருவாகும் என்ற நிலையில் அதிக பணத்தைக் கல்விக்கு செலவழிக்கின்ற போது பாடசாலைக் கல்வியைத் தொடர முடியாமல் இடை விலகுகின்ற மாணவர்கள் அதிகரிப்பதனால் எதிர்கால முதலீடாக எதிர்பார்த்த வருமானம் வீணடிக்கப்படுகின்றது. இதனால் அரசிற்கும் பாரிய பொருளாதார பிரச்சினைகளை எதிர்கொள்ள வேண்டிய நிலைமையில் அபிவிருத்தியினை எட்ட முடியாமல் போய்விடுகின்றன.

**வி.கருணாலிங்கம்**
அதிபர், ஆசிரியர் பயிற்சிக் கலாசாலை
கோப்பாய்.



# ஊர்காவற்றுறை ஆதார வைத்தியசாலை

இலங்கை தீவின் வடக்கே யாழ்ப்பாண நகருக்கு வடமேற்கே அமைந்துள்ள ஊர்காவற்றுறை துறைமுகம் 12ஆம் நூற்றாண்டிற்கு முன்பிருந்து தமிழகத்துக்கும் ஊர்காவற்றுறைக்கும் இடையேயான துறைமுகமாக இருந்துள்ளது. இத்துறைமுகம் இலங்கையில் மிகவும் பழமை வாய்ந்ததாக காணப்படுகிறது. தீவுப்பகுதிகளில் தலையாய நகரமாக ஊர்காவற்றுறை காணப்படுகிறது. தீவுப்பகுதிகளில் வாழும் மக்களின் சுகநலன் கருதி 1930ஆம் ஆண்டு திருச்சிலுவைக் கன்னியர்களினால் வயோதிபர்களினதும், நோயுள்ளவர்களின் தேவைகளை கவனிப்பதற்காக வைத்தியசாலையை இங்கு நிறுவ தன்னலமற்ற சேவையை வழங்கி வந்தனர்.

காலப்போக்கில் அரசாங்கம் இவ்வைத்தியசாலையை பொறுப்பேற்று அரசினர் வைத்தியசாலையாகவும் பின்னர் மாவட்ட வைத்திய சாலையாகவும் தற்பொழுது இவ்வைத்தியசாலை ஆதார வைத்தியசாலையாகவும் தரமுயர்த்தப்பட்டு சுகாதார சேவைகளை தரமாக வழங்கி வருகின்றது. இவ்வைத்தியசாலையில் தற்போது 05 வைத்திய அதிகாரிகளும் ஒரு பல் வைத்திய நிபுணருடன் சுமார் 70 உத்தியோகத்தர்கள், ஊழியர்கள் கடமையாற்றுகின்றார்கள். வைத்திய அதிகாரிகளுக்கான நான்கு புதிய விடுதிகள் அமைக்கப்பட்டுள்ளன. அத்துடன் சகல வசதிகளுடனும் புதிய OPD கட்டடம் பல மில்லியன் ரூபா செலவில் அமைக்கப்பட்டு வருகின்றது.

ஆய்வுகூடம் புனரமைக்கப்பட்டு வருகிறது. மேலும் புதிய பிரேத அறை அமைக்கப்பட்டு வருகின்றது. இதனூடாக எதிர்வரும் காலங்களில் வைத்தியசேவை சகல வழிகளிலும் விஸ்தரிக்கப்பட்டு மிகவும் உன்னத சேவையை வழங்கலாம் என எதிர்பார்க்கின்றோம். இதன் பயனாக ஊர்காவற்றுறை பிரதேசம் அல்லாது சகல தீவுப் பகுதி மக்களும் சகல சேவைகளைப்

பெறக்கூடியதாக அமையவுள்ளமை சிறப்பான விடயமாகும். இவ்வைத்தியசாலையில் அன்று தொட்டு இன்று வரை எத்தனையோ தர்மசிந்தனையாளர்களினாலும் கொடைவள்ளல்களாலும் வளர்ச்சியடைந்துள்ளதை எளிதில் மறக்கமுடியாது. எதிர்வரும் காலங்களிலும் வைத்தியசாலையின் வளர்ச்சியில் ஆர்வமுடைய தலைவர்கள் தங்கள் பங்களிப்புக்களை வழங்கி வைத்தியசாலையின் வசதிகளை மேம்படுத்த தங்கள் ஆதரவை எதிர்பார்த்திருக்கின்றோம்.

**Dr.Y.Yathunanthanan**
வைத்திய அத்தியட்சகர்
ஆதாரவைத்தியசாலை
ஊர்காவற்றுறை

**எளிய இயற்கை வைத்தியம்**

1. நெஞ்சு சளி

தேங்காய் எண்ணையில் கற்பூரம் சேர்த்து நன்கு சுடவைத்து ஆர வைத்து நெஞ்சில் தடவ சளி குணமாகும்.

2. தலைவலி

ஐந்தாறு துளசி இலைகளும் ஒரு சிறு துண்டு சுக்கு, 2 லவங்கம், சேர்த்து நன்கு அரைத்து நெற்றியில் பற்றாகப் போட்டால் தலைவலி குணமாகும்.

3. தொண்டை கரகரப்பு

சுக்கு, பால் மிளகு, திப்பிலி, ஏலரிசி ஆகியவற்றை வறுத்து பொடி செய்து தேனில் கலந்து சாப்பிட தொண்டை கரகரப்பு குணமாகும்.

4. தொடர் விக்கல்

நெல்லிக்காய் இடித்து சாறு பிழிந்து, தேன் சேர்த்து சாப்பிட்டால் தொடர் விக்கல் தீரும்.

5. அஜீரணம்

ஒரு டம்ளர் தண்ணீரில் கருவேப்பிலை, இஞ்சி, சீரகம், மூன்றையும் கொதிக்க வைத்து ஆறவைத்து வடிகட்டி குடிக்க அஜீரணம் சரியாகும்.

அல்லது கறிவேப்பிலை,சுக்கு,சீரகம்,ஓமம் சேர்த்து துவையல் அரைத்து சாப்பிட்டால் அஜீரணம் சரியாகும். அல்லது வெற்றிலை,4 மிளகு இவற்றை மென்று தின்றால் அஜீரணக்கோளாறு சரியாகும்.

சீரகத்தை நீரிலிட்டு கொதிக்க வைத்து,அந்த சீரக நீரைக் குடித்து வர நன்கு ஜீரணமாவதோடு, உடல் குளிர்ச்சியடையும். அல்லது 1தேக்கரண்டி இஞ்சிச் சாறுடன்,சிறிது தேன் கலந்து பருகினால் ஜீரணசக்தி அதிகரிக்கும்.



# நூற்றாண்டுகளுக்கு முன்னிருந்து இன்று வரை எமது கிராமத்தின் கல்வியும் கல்விக் கூடங்களும்

நாரந்தனையில் நூற்றாண்டுகளுக்கு முற்பட்ட காலத்தில் இருந்த கற்க முறை என்பது இன்று நாம் காண்கின்ற கற்கை முறைக்கும் கல்வி செயற்பாடுகளுக்கும் முற்றிலும் வேறுபட்டதாக இருந்துள்ளது. ஈழத்தில் மேற்கத்தயவருடைய வருகைக்குப் பின்பு குறிப்பாக ஆங்கிவலயருடைய ஆட்சிக்காலத்தில் தான் தமிழரின் கல்வி அமைப்பு மாற்றம் பெறத் தொடங்கியது எனலாம்

அன்று யாழ்ப்பாண இராச்சியத்தில் இருந்த தமிழரின் கல்வி அமைப்பானது ஒரு ஆசானும் அவரின் கீழ் சில மாணாக்கர்களும் என்று ஆசானது வீ ட்டுத் திண்ணையில் திணணைப்பள்ளிக்கூடமாக நடை பெற்று வந்தது. இக்கல்வி முறையில் ஆசானின் அறிவே முற்று முழுதாகப் பகிரப்பட்டது ஆங்கே இக்காலம் போல் கற்பதற்கு நூல்களோ எழுதுவதற்கு தாள்களோ மைகொண்ட எழுதுகோல்கவளா இருக்கவில்லை. அல்லது அதாரணமாக எல்லோருக்கும் கிடைக்கக் கூடியதாக இருக்கவில்லை மாறாக எழுத்தாணியும் ஓலைச்சுவடிகளுமே இருந்தன. கற்றல் பெரும்பாலும் கேள்வியறிவின் அடிப்பரடயிலேயே நடைபெற்றது. இப்படியான கல்வி முறைக்கு உட்பட்டுத்தான் யாழ்ப்பாணத்து வைசத்தமிழ் காவலாரன நாவலர் பெருமான் ஆறுமுகநாவலர் அவர்களும் தமது தமிழ்க் கல்வியை 1830 களின் பிற்பகுதிவரை பெற்றிருந்தார். இங்கு 1834ல் தான் யாழ் மத்திய கல்லூரி வெஸ்லியன் மிஸ ணரியில் ஆரம்பிக்கப்பட்டது என்பது கவனிக்கத்தக்கது. மேலும் ஆறுமுகநாவலர் அவர்கள் ஆங்கிலப் பாடசாலைக்கு சென்ற பின்னரே ஆங்கில வழிக்கல்வி முறை வசதிகளைப் பெற்றிருக்க வேண்டும் என்று சொல்வதில் தவறேதும் இல்லை..

தமிழர்களின் கல்வி அமைப்பின் கீழ் தமிழ் சமயம் சித்தமருத்துவம்.வானியல். வேதியியல். பண்டிதம் நாடகக்கலை

போன்ற இன்னோரேன கல்வியை தமிழர்கற்று வந்தனர். இவ்வாறான கல்வி சமுதாயத்தில் எல்லோருக்கும் கிடைக்கக்கூடியதாக அமைந்திருக்கவில்லை சமுதாயத்தில் ஒரு சாராரே இக்கல்வியைப் பெறுபவர்களாக இருந்துள்ளனர் அவர்களிலும் தத்தமது கலைவல்லோர் தமது வாரிசுக்களுக்கே கற்பித்து வந்த நிலையானது அவர்களின் வாரிசுகளின் அக்கறை அற்ற போக்கு அவர்களுக்கு வாரிசுகளற்ற நிலை வாரிசுகளின் தரக்குறைவு போன்ற பல காரணங்களால் அக்கலைகள் அருகிப்போனது. மேலாக போத்துக்கேயர்களால் நாரந்தனை துவேசம் செய்யப்பட்டதுடன் சகல கல்விச்செயல்களும் முடிவுக்குக்கொண்டு வரப்பட்டது என்று சொல்வதே பொருத்தமானது.

1820 களில் நாரந்தனையின் வடபால் அமைந்துள்ள வளமான பகுதியில் வாழ்ந்த நிலச்சுவாந்தர் ஒருவரது மகளை திருமணம் செய்து கொண்டு வாழ்ந்து வந்தார் ஆறுமுகம் என்ற பெயர் கொண்ட ஆசான் ஒருவர். இவர் சட்டம்பியார் ஆறுமுகம் என்று எல்லோராலும் மதிக்கப்பட்டுள்ளார். இவரது முழுவரலாறும் அறியப்படாத போதும் இவர் அக்காலப் பகுதியில் அனலை தீவில் வாழ்ந்த ஒரு உடையாரின் மகன் என்று அறியக்கூடியதாய் உள்ளது. எம்முன்னோரின் நினைவுக்கு எட்டிய வரை இவர் இப்பகுதியில் வாழ்ந்து திண்ணைப்பள்ளிக்கூடம் நடாத்தி பலருக்கும் இக்கிராமத்தில் கல்வியை ஊட்டிய ஒருவராக இருந்துள்ளார். மேலும் இவரது மாணாக்கர்கள் எவராவது அவர் வழியிரனப் பின்பற்றாதமை வருந்தத்தக்கது. அவரது சொந்தப்பிள்ளைகளில் ஒருவர் ஆசிரியத் தொழிலை செய்த போதும் மானிப்பாயைச்சேர்ந்த ஒரு பெண்ணின்மேல் காதல் வயப்பட்டு அப்பெண்ணைத் திருமணம் செய்து கொண்டு அந்த ஊரிலேயே வாழத் தலைப்பட்டதனால் அவருக்குப்பின் அவரது பாரம்பரியம் நாரந்தனையில் தொடரவில்லை எனலாம். இவரது காலத்துக்குப் பின்னாராக நாரந்தனை கிராமத்தில் வேறு திண்ணைப் பள்ளிக்கூட ஆசிரியர் எவராவது கல்வி கற்பித்து வந்ததாக அறியப் படவில்லை. இருப்பினும் 1870களில் வடமேற்கு நாரந்தனையில் சின்னத்தம்பி சித்தர் என்று ஒருவர் வாழ்ந்தாகவும் அவர் சித்தமருத்துவம் வானியல், மந்திரதந்திரங்கள் என்பவற்றில் வல்லுனராக இருந்தார் என்று அறியப் பட்டுள்ளது.

இதற்க்கு முன்னாக போத்திக்கீசர் காலத்தில் நாரந்தனையின் ஆட்சியாளரும் அவரைச் சார்ந்தவர்களும் அழித்து ஒழிக்கப்பட்டதுடன் எஞ்சியவர்கள் வலுக்கட்டாயமாக கிறிஸ்தவ மதத்திற்க்கு மாற்றப்பட்டதனாலும் பூர்வீகக்குடிகளது கல்விக்கட்டமைப்பும் முற்றாக சிதைக்கப் பட்டது இதனால் கலைவல்லோரும் ஆசான்களும் அற்ற ஒரு பிரதேசமாக கல்வியில் பின்தங்கிய ஒரு பிரதேசமாக நாரந்தனை அன்று இருந்தமை வருத்தத்திற்குரியது.

ஆங்கிலேயர் ஆட்சிக்காலத்தில் கூட இக்கிராமத்தில் நில வளம் கொண்டோர் பயிரிடுதலையும் நிலவளமற்றோர் மந்தை வளர்த்தலையும் பிரதான தொழிலாகக் கொண்டிருக்க மற்றவர்கள் அவர்களைச் சார்ந்த வேலைகளிலும் தம்மை ஈடுபடுத்திக் கொண்டதனால் தம்மளவில் தன்னிறைவுடையவர்களாக உணர்ந்ததன் காரணத்தால் கல்வியின்

அவசியத்தை பெரிதும் கருத்தில் கொள்ளாதிருந்தனர் இப்படியான சூழ்நிலையால் பிற இடங்களில் இருந்து வந்து குடியேறியவர்கள் ஒரு சில துறைகளில் ஆசான்களாய் செயல் பட்டு வந்ததை அறியமுடிகின்றது.

1872ல் தீவகத்தில் ஆரம்பக்கப்பட்ட ஊர்காவற்றுறை புனித அந்தோனியார் ஆங்கிலப் பாடசாலைக்கு முன்பு தீவகம் முழுவதும் ஆங்காங்கே திண்ணைப்பள்ளிக்கூடங்களே இயங்கி வந்தன. நாரந்தனையில் வசதிபடைத்த சிலர் தமது பிள்ளைகளை யாழ்ப்பாணத்தில் உள்ள கிறிஸ்தவ பாடசாலைகளுக்கு அனுப்பியும் 1887க்குப்பின் யாழ்ப்பாண இந்துக்கல்லூரிக்கு அனுப்பியும் கல்வி கற்க வைத்திருக்க வேண்டும் இப்படியாக ஆங்கிலவழிக் கல்வியைப் பெற்றவர்கள் வர்த்தகத் துறையில் அல்லது வியாபாரத்தில் தம்மை ஈடுபடுத்திக் கொண்டவர்களின் பிள்ளைகளாக பெரிதும் இருந்திருப்பார்கள் என்பதில் ஐயமில்லை..

நாரந்தனையைப் பொறுத்த மட்டில் 1876ல் கிறிஸ்தவ ஆலயம் அமைக்கப்பட்டபின்னரும் ஏறக்குறைய நாற்பது ஆண்டுகளுக்கு பின்பு 1910களில்தான் எமது கிராமத்தில் ஒரு பாடசாலை அமைக்கவேண்டும் என்ற கருத்து வலுப்பெற்று செயல்வடிவம் பெற்றது எனலாம். இதற்கான பின்புலக்காரணங்கள் பல இருந்திருக்க வேண்டும். ஒன்று ஆங்கில வழிக்கல்வி முறையை பின் பற்றுவது அக்காலத்தின் தேவையாக இருந்தமை. அத்துடன் ஆலயதரைத அண்டிவாழத் தலைப்பட்ட மக்களின் தேவையாகவும் இருந்தமை.

இந் நோக்கில் பார்க்கையில் கிறிஸ்தவ ஆலயத்தின் நிர்வாக அலகு நாரந்தனையில் நிலைப்பெறதொடங்கியதன் பின் கத்தோலிக்க மதம்சார்ந்த பலர் குடாநாட்டின் சில பகுதிகளில் குறிப்பாக இளவாலை சில்லாலை அதையண்டிய பகுதிகளில் இருந்து நேரடியாக வந்தும் அவர்களுக்கு முன்பாக வந்து காவலூர் மாதா கோவிலை அண்டிய பகுதியில் குடியேறியவர்களில் இருந்தும் பலர் வந்து நாரந்தனை கத்தோலிக்க ஆலயத்திற்கு அருகாமையிலும் நாரந்தனை தென் மேற்குப்பகுதியிலும் குடியமர்ந்தனர்.

அந்தக்காலத்தில் மதம்பரபப்பும் நோக்கத்தில் வந்திருந்த மேற்கத்தேய பாதிரியாரும் பெண்துறவிகளும் ஆரம்பத்தில் சிறுவர்களுக்கு மதக் கல்வியை ஊட்டத்தொடங்கி அதன் வளர்ச்சியும் தொடர்ச்சியுமாக பாடசாலை அமைக்க முனைந்தனர். இந்த எண்ணத்தை வலுப்படுத்துவது போல் அவர்களின் செயற்பாடுகள் இருந்துள்ளன அதாவது கிறிஸ்தவ சமயத்தில் அதிக ஈடுபாடு கொண்டவர்கள் பெண்களாக இருந்த காரணத்தால் முதலில் 1914ல் பெண்களுக்கென றோமன் கத்தோலிக்க பெண்கள் பாடசாலை கத்தோலிக்க கோவிலுக்கு தெற்காக ஆரம்பிக்கப்பட்டது இதுவே நாரந்தனையில் தோன்றிய கிறிஸ்தவ பெண்கள் பாடசாலை மட்டுமன்றி முதலாவது பாடசாலையுமாகும். இப்பாடசாலை ஆரம்பத்தில் கிறிஸ்தவ மாணவர்களுக்கென ஆரம்பிக்கப்பட்ட போதும் நாரந்தரனையில் இருந்த சைவ மாணவர்களையும் உள்வாங்கியது மட்டுமன்றி அயல் கிராமங்களான சரவணை வேலணை கரம்பன் போன்ற பல கிராமத்தைச் சார்ந்தவர்களுக்கும் கல்வியை வழங்கிவந்தமை குறிப்பிடத்தக்கது.

சமகாலத்தில் நாரந்தனையில் வாழ்ந்த சைவசமயத்தவர்கள் ஒரு சைவத் தமிழ்ப்பபாடசாலை ஒன்றும் உருவாக்கப்படல் வேண்டும் என்ற முனைப்பைக் கொண்டிருந்ததுடன் அதற்க்கு செயல் வடிவமும் கொடுத்தனர் அப்படி அமைந்தபாடசாலை இன்று நூற்றாண்டு காணும் கணேசா வித்தியாசாலயாகும். இது நாரந்தனையைச் வேர்ந்த ஆறுமுகம் நாகநாதன் என்பவரும் அவரது உறவினர்கள் ஊர்ப்பெரியவர்களின் உதவியுடன் 1915ல் அமைக்கப்பட்ட முதல் சைவத் தமிழ் தனியார்பாடசாலை என்ற பெருமையைப் பெற்றுள்ளமை குறிப்பிடத்தக்கது. இப்பாடசாலை இயங்கத்தொடங்கிய போதும் 1917ல் புதிய கடடடத்தில் ஆரம்பக்கப்பட்ட றோமன் கத்தோலிக்க ஆண்கள் பாடசாலைக்கு சைவசமயத்தைச் சேர்ந்த நாரந்தனை மாணவர்கள் பலர் சென்றிருந்ததை அப்பாடசாலை வரலாறு உறுதிப்படுத்தியுள்ளது. அத்தகைய மனப்பாங்கு இன்றும் நமது ஊரில் இருப்பதைக் காணலாம். மேலும் ஊரில் உள்ள பாடசாலையில் கல்வி கற்பதை விட ஊர்காவற்றுறை கிறிஸ்தவபாடசாலைக்கு தங்கள் பிள்ளைகள் சென்று படிப்பதை பெருமையாக எண்ணிய பெற்றோர்கள் அன்றும் இருந்தனர். அதாவது தங்கள்தங்கள் பிள்ளைகள் பெரிய பாடசாலையில் அல்லது ஆங்கிலப் பாடசாலையில் கல்வி கற்பதை பெரிதும் விரும்பினர்.இதனை தவறு என்று சொல்வதற்கில்லை இருப்பினும் ஆரம்பக்கல்வியைசைவத்தமிழ் கல்லூரியில் கற்றவர்கள் எமது ஊரில் பின்தங்கியவர்களாக இருக்கவில்லை மாறாக கல்வித்துறையில் பெரும் சாதனை புரிந்ததை பலரும் அறிவார்கள். இன்றைய காலகட்டத்தில் எமது கிராமத்தில் இப்பாடசாலையில் கல்வி கற்பதற்கு மாணவர்கள் அதிகம் இல்லாத நிலை காணப்படுவது உண்மை.இதனைக் கருத்தில் கொண்டு இப்பாடசாலை இன்னும்பல நூற்றாண்டுகளைக்காண வேண்டும் என்ற முனைப்பில் செயல்படுதல் வேண்டும்.

**அ.சர்வாநாதன் (கலைமானி)**
தலைவர்
நாரந்தனை மக்கள் சங்கம்
(ஐக்கிய இராச்சியம்- ஐரோப்பா)



## வாழிய வாழியவே!

பச்சை வயல் ஒரு புறமும்!
பனை மரங்கள் மறுபுறமும்!
சுற்றி வர இயற்கை அன்னை!
சூழ்ந்திருக்கும் இரம்மியமும்!
நட்ட நடுவூரில் நல்ல மரம் பழுத்தது போல்!
சின்னஞ் சிறு சிட்டுகள் சிறகடித்து விளையாட!
கன்னல் தமிழைக் கற்பிக்கும் ஆலயமே!
கண்ணின் மணி போலக் காலமெலாம் கூடவர!
எண்ணும் எழுத்தும் எனக்களித்த ஆலயமே!
ஏருழவர் எல்லாம் ஏடெடுத்துப் படித்திடவே!
சீர் கல்வியளித்து சிறப்பித்த ஆலயமே!
கொடிய போர் வந்தபோதும் குண்டுகள் வீழ்ந்தபோதும்!
ஊரே இடம்பெயர்ந்து உனை விட்டுப் போனபோதும்!
ஆறாண்டு காலம் யாரும் அரவணைக்காத போதும்!
நூறாண்டு காணும் நிலை கண்டு நாம் மகிழ்ந்தோம்!
நின் மடி தவழ்ந்தோரெல்லாம்
நிலையிலே தாழ்ந்தாரில்லை
மருத்துவர்.பொறியியலாளர் கல்வி
புகட்டிடும் ஆசான் மற்றும் துறைகளில்
மட்டுமன்றி மண்ணுக்கு விதையாய்போன
மாவீரர் பலரும் தந்தாய்!!!
வாழிய நின் புகழ் வாழியவே!
வான்புகழ் பெற்று வாழியவே!
சைவமும் தமிழும் தழைத்திடவே!
நாரந்தனை மக்கள் சிறப்புறவே!
நல்லறிவூட்டிய ஆலயமே!
நாரந்தனைக் கணேச வித்தியாலயமே!
கந்தனும் அம்மனும் காத்திடவே!
கல்வியருளும் ஆலயமே!
வாழிய வாழிய வாழியவே!!!!!

**மகேந்திரன் திருஞானசம்பந்தன்**
(பழைய மாணவன்)
செயலாளர் நாரந்தனை மக்கள் சங்கம்
இலண்டன். பிரித்தானியா



## ஆரம்ப கால பெற்றார் சங்க செயலாளரின் உள்ளத்தில் இருந்து.......

யாழ் குடாநாட்டின் தென் மேற்கே அமைந்துள்ள லைடன் தீவு அதன் வடமேற்கே இருப்பது நாரந்தனைக்கிராமம். நிலவளம், நீர்வளம், கடல்வளம், கொண்ட கிராமம் நாரந்தனை. நாரந்தனையில் 1946க்கு முன் இரண்டு பாடசாலைகள் மூன்று கோயில்கள் இருந்தன. இன்று இந்துப்பாடசாலை, மற்றையது கிறிஸ்தவப் பாடசாலை, ஆலயங்களில் முருகன் கோவில், சம்பேதுருவார் கோவில், லூர்து மாதா கோவில் என மூன்றாகும். இன்று மூன்று பாடசாலைகளும், ஆறு கோவில்களும் (சைவக் கோயில்களை தவிர) இருக்கின்றன. அவை கணேசவித்தியாலயம் தம்பாட்டி அரசினர் தமிழ்க்கலவன் பாடசாலை, றோமன் கத்தோலிக்க பாடசாலை என மூன்றும் கந்தசுவாமி கோவில் தான்தோன்றி மனோன்மணி அம்பாள் கோவில் தம்பாட்டி முத்துமாரி அம்மன் கோவில் என மூன்று இந்துக் கோவில்களும் சம்பேதுருவார் கோவில் லூர்து மாதா கோவில், இருதய ஆண்டவர் கோயில் என மூன்று கிறிஸ்தவ கோவில்களுடன் ஆறாகும்.

கணேசவித்தியாசாலை தனது நூற்றாண்டு விழாவைக் கொண்டாட இருக்கும் இவ்வேளையில் பாடசாலையைப்பற்றி சில வரிகள் எழுதலாமென நினைக்கின்றேன்.

**ஆரம்பம்:** நாரந்தனையைச் சேர்ந்த நாகநாதர் என்பவரால் காணிவழங்கப்பட்டுவேலணையைச்சேர்ந்த தம்பு உபாத்தியாரை ஆசிரியராகக் கொண்டு திண்ணைப் பள்ளிக்கூடத்தை என மூத்தோர் கூறக் கேட்டுள்ளேன். நாரந்தனையைச் சேர்ந்த சில பெரியோர்கள் சேர்ந்து (முக்கியமாக திரு .க.விசுவலிங்கம் திரு. தில்லைநாதர், திரு.ஜ.இராசா ஆகியோர் உட்பட) 80அடி நீளமும் 40அடி அகலமும் கொண்ட கட்டிடம் அமைத்து அரைவாசி கூரை ஓடும், மிகுதி அரைவாசி கிடுகுகளாலும் வேயப்பட்டு பாடசாலை நடைபெற்று வந்தன.

சிறிது காலத்தின் பின் இப்பாடசாலையை சைவ வித்தியா விருத்தி சங்கத்திடம் ஒப்படைத்தனர். பாடசாலையை "இந்து போர்ட்" இராசரத்தினம் என்பவரின் மேற்பார்வையின் கீழ் இயங்கியது. பின்னர் இலவசக்கல்வித் திட்டத்தின் கீழ் இப்பாடசாலை அரசகட்டுப்பாட்டின் கீழ் இயங்க ஆரம்பித்தது.

இந்து சமய மாணவர்களே கற்று வந்தார்கள் தம்பாட்டியைச் சேர்ந்த மாணவர்களும் பாடசாலை ஆரம்ப காலம் இப்பாடசாலையிலேயே கல்வி கற்று வந்தார்கள். 1946ஆம் ஆண்டு அரசினரால் பாடசாலை கட்டிக் கொடுக்கவே இங்கு படித்த மாணவர்கள் தம்பாட்டி அரசினர் தமிழ்க் கலவன் பாடசாலையில் போய்ச் சேர்ந்தவர்கள். இங்கு மாணவர் தொகை குறைவாகிற்று. நான் கணேசவித்தியாசாலையின் பழைய மாணவன்.1943ஆம் ஆண்டு பாடசாலையில் அரிவரி வகுப்பில் சேர்ந்து படித்தேன். சீமெந்து நிலத்தில் மணலைப்போட்டு பரவி அதன் மேல் அ,ஆ எழுதப் பழக்கினார் வாத்தியாரம்மா.

நான் படித்த காலத்தில் திரு.சின்னத்தம்பி மாணிக்கம் ஆசிரியர் அவர்கள் தலைமை வாத்தியாராக திருமதி கெங்கைமுத்து மாணிக்கம் அவர்கள் உதவி ஆசிரியையாகவும் பருத்தியடைப்பைச் சேர்ந்த திரு.சிவலிங்கம் ஆசிரியர் திரு.வைத்திலிங்கம் சங்கீத ஆசிரியர் ஆகியோரும் படிப்பித்தார்கள். (சில பேரின் பெயர்கள் தெரியாததால் குறிப்பிட முடியவில்லை).

எங்களுடன் தம்பாட்டி பிள்ளைகளும் சேர்ந்து 4ஆம் வகுப்பு (1947) வரை படித்தார்கள். பின் வேறு பாடசாலைகளுக்குப் போய்விட்டார்கள் நாரந்தனையைச் சேர்ந்த திரு.ஆறுமுகம் சபாரத்தினம் ஆசிரியர் அவர்கள் பல்கலைக்கழகம் போகமுன் எமது பாடசாலையில் ஆங்கில ஆசிரியராக கடமையாற்றினார். எங்களுக்கு 4ஆம், 5ஆம் வகுப்புக்களில் ஆங்கிலம் கற்பித்தார். 1948ஆம் ஆண்டில் 5ஆம் வகுப்பில் மூன்று ஆண்களும், ஆறு பெண்களும் கல்வி பயின்றார்கள். நான் 1943இல் பாடசாலையில் சேர்ந்து 1948 வரை ஆறு ஆண்டுகள் கல்விகற்று 1949இல் வேலணை மத்திய கல்லூரியில் சேர்ந்து படித்தேன்.

தலைமை ஆசிரியர் திரு.சி. மாணிக்கம் அவர்களின் பின் பண்டிதர் திரு.கந்தையா கணபதிப்பிள்ளை அவர்கள் 1965இல் பொறுப்பேற்று தலைமை ஆசிரியராக இருந்தார். அவர் வந்தவுடன் முதலில் பெற்றோர்களை அழைத்து பெற்றார் ஆசிரியர் சங்கத்தை உருவாக்கினார். சங்கத்தின் தலைவராக தலைமை ஆசிரியரும் செயலாளராக (சு.இராமலிங்கம்) நானும் பொருளாளராக திருமதி.த.சிவனையா ஆசிரியை அவர்களும் இருந்தோம்.

பண்டிதர் திரு.க.கணபதிப்பிள்ளை தலைமை ஆசிரியர் அவர்களின் விடாமுயற்சியாலும் பெற்றார் ஆசிரியர் சங்கத்தின் ஆதரவினாலும் பாராளுமன்ற உறுப்பினரையும் கல்வி அதிகாரிகளையும் சந்தித்து கதைத்து 80அடி நீளம், 20அடி அகலம் கொண்ட கட்டிடம் அமைக்க சிபார்சு செய்யப்பட்டது மேற்படி கட்டிடத்திற்கு ரூபா பத்தாயிரம் ஒதுக்கப்பட்டது. கட்டிடத்தை பெற்றார் ஆசிரியர் சங்கம் பொறுப்பேற்று கட்டியது. அதன் பலனாக மண்டபத்தில் போடப்பட்ட மேடை சுவர்களை உயர்த்தி அதில் போடப்பட்ட கரும்பலகைகள் வாசலில் போடப்பட்டுள்ள கேற் யாவும் மேலதிகமாக செய்யப்பட்டவையாகும். (இவை ஒதுக்கிய பணத்துக்கு உட்பட்டதல்ல)

இது மட்டுமல்லாமல் பண்டிதர் க.கணபதிப்பிள்ளை தலைமை ஆசிரியர் அவர்களின் முயற்சியால் சிறுவர் பாடசாலை ஆரம்பிக்கப்பட்டது. அதற்கும் நிருவாகம் அமைத்து தலைவராக திரு.நா.சிவஞானம் அவர்களும் செயலாளராக (சு.இராமலிங்கம்) நானும் பொருளாளராக சிறுவர் பாடசாலை ஆசிரியை செல்வி.கருணாதேவி சிதரம்பரப்பிள்ளை அவர்களும் பொறுப்பேற்றனர். சிறுவர் பாடசாலை திருமதி.சின்னம்மா விசுவலிங்கம் அவர்களின் வீட்டு விறாந்தையில் நடாத்தப்பட்டது. பண்டிதர் திரு க.கணபதிப்பிள்ளை தலைமை ஆசிரியர் அவர்களின் காலத்தில் பாடசாலை தரம் உயர்த்தப்பட்டது. பாடசாலையில் பல கலைநிகழ்ச்சிகளும் விளையாட்டுப் போட்டிகள் யாவும் நடைபெற்றன. ஓய்வு பெற்ற ஆசிரியை திருமதி. கொங்கைமுத்து மாணிக்கம் அவர்களுக்கு பிரிவுபசார விழா கலைவிழாவாக நடத்தப்பட்டது. பண்டிதர் திரு.க.கணபதிப்பிள்ளை அவர்களின் ஓய்வுக்குப்பின் நாரந்தனையைச் சேர்ந்த திரு.செல்லத்துரை இராசதுரை ஆசிரியர் அவர்கள் தலைமை ஆசிரியர்பொறுப்பை ஏற்றார் அவரின் காலத்தில் புதுகட்டிடங்கள் கட்டப்பட்டன. கலை விழாக்கள் விளையாட்டுப்போட்டிகள் என்பன சிறப்பாக நடைபெற்றன.

கணேச வித்தியாசாலையின் நூற்றாண்டுவிழா சிறப்புடன் நடைபெறவும் நூற்றாண்டு விழா மலர்சிறந்த அம்சங்களுடன் வெளிவரவும் ஆரம்பக்கட்டிடம் இன்று திருத்தியமைக்கப்பட்டு புது பொலிவுடன் காட்சிதரும் வேளையில் யாவும் சிறப்புடன் நடைபெற வேண்டுமென தான்தோன்றி ஸ்ரீ மனோன்மணி அம்பாளை வணங்கி வேண்டுகின்றேன்.

**திரு.சு.இராமலிங்கம்**
(கணேச வித்தியாசாலையின்
பழைய மாணவனும்
பெற்றார் ஆசிரியர் சங்க முன்னாள்
செயலாளரும்)



# தீவக இடப்பெயர்வும் நாரந்தனை மக்களும்

இலங்கையின் வடபால் அமைந்துள்ள யாழ்ப்பாணம் பிரதேசத்தின் கடல் சூழ்ந்த பிரதேசமாக பல சிறப்பு அம்சங்களைக் கொண்ட பிரதேசமானது தீவகப் பிரதேசம் ஆகும். ஏழு தீவுகளைக் கொண்ட இப்பிரதேசத்தில் வேலணைத் தீவின் பரப்பளவு அதிகமானது. தீவகப் பிரதேசமானது ஊர்காவற்றுறைத் தேர்தல் தொகுதியாக விளங்கியது. இதன் மேற்குப் பக்கமாக அமைந்ததுதான் ஊர்காவற்றுறை. இயற்கையான கடல்வளம், மண்வளம், பனைவளம் ஒருங்கே அமைந்து காணப்பட்டதால் இப்பிரதேசம் மிகவும் சிறப்புற்று காணப்பட்டது. நன்னீர் மட்டும் ஆறுமாத காலம் நன்னீராக இருக்கும். கோலாகலமாக போக்கில் நன்னீர் பிரதேசத்தின் தவிர்ந்த பகுதி நன்னீர் பெறுவதில் மக்கள் சிரமங்களை மேற்கொண்டனர். அப்பகுதிகளுக்கு மட்டும் மூன்று, நான்கு மாதங்கள் அரசாங்க சமூக சேவைப் பகுதியின் சேவை நன்னீர் வழங்கப்பட்டு குடிநீர் தேவை பூர்த்தியாக்கப்படும். இங்கு வாழ்ந்த மக்கள் கடல், பனை மண் போன்ற இயற்கை வளத்தினை கொண்டு அதன் ஊடாக வருமானங்களை ஈட்டி வரும்போது பெற்றுக்கொள்ளுயும் உழைப்புக்களை ஒருவருக்கு ஒருவர் பண்டமாக வழங்கி சமூக ஒற்றுமையை நிலைநாட்டி வாழ்ந்து வந்தனர். 1990 இல் ஏற்பட்ட ஒட்டுமொத்த இடப்பெயர்வு தீவகப் பிரதேசத்தினை பாரிய அழிவுக்கு உட்படுத்தியது. தீவகப் பிரதேசம் ஊர்காவற்றுறை என இறைவரிப்பிரிவு காரியாலயமாக ஊர்காவற்றுறை விளங்கி காலப் போக்கில் நெடுந்தீவு, வேலணை, ஊர்காவற்றுறை என மூன்று இறைவரிப் பிரிவு (D.R.O.Office) எனப் பிரிக்கப்பட்டு மக்கள் சேவை விரிவுபடுத்தப் பட்டது. நெடுந்தீவு, எழுவைதீவு, அனலைதீவு, நயினாதீவு உட்பட்ட நான்கு தீவுகளை தவிர்ந்த மண்டைதீவு, வேலணைத்தீவு, புங்குடுதீவு மக்கள் முற்றாக இடம்பெயர ஏற்பட்டது. ஊர்காவற்றுறை பிரதேசத்தில் மையப் பகுதிகளாக விளங்கும் நாரந்தனைப் பிரதேச மக்களின் இடப்பெயர்வு நோக்கு

சோமாவின் நாராயணர் வாழ்ந்து ஆண்டு வந்த பிரதேசமான இப்பகுதி நாரந்தனை சிறப்புப் பெயர் பெற்று விளங்கியது. நாரந்தனை கிராமம் கிழக்கே கரவனைக் கிராமத்தினையும் மேற்கே கரம்பன் கிராமத்தினையும் வடக்கு, தெற்கு பகுதி கடல் வாழ்ந்த பிரதேசமாகக் காணப்பட்டது. கடல்சூழ்ந்த பிரதேசமாகக் காணப்பட்டது. கடல்வளம் உள்ள காந்தக் கடல் தொழிலும். பனைமரம் கூடுதலான பனைத் தொழிலும் மண்வளம் உள்ள விவசாயமும் முக்கிய தொழிலாக காணப்பட்டது. இங்கு சமய, கலாசாரத்தினை வளர்க்கும் முகமாக கிழக்கே கர்ணந்தோட்டம் கந்தசாமி கோயில், வடக்கே பண்டாரபுலம் தான்தோன்றி அம்மன் கோவில், வடமேற்கே துர்க்கைபுரம் முத்துமாரி அம்மன் என இந்துக் கோவிலும், நாரந்தனை மேற்கே சம்பேதுருவானவர் தேவ ஆலயமும் மத்தியில் இருதயநாதர் தேவாலயம், வடக்கு மூன்று மாதா தேவாலயம் என கிறிஸ்தவ தேவாலயம் காணப்பட்டது. கல்வி யா/நாரந்தனை கணேச வித்தியாலயம், யா/நாரந்தனை றோமன் கத்தோலிக்க மகாவித்தியாலயம், யா/தம்பிட்டி அரசினர் தமிழ்க் கலவன் பாடசாலை என மூன்று பாடசாலைகள் காணப்பட்டது. அத்துடன் சுகாதார வசதிகளை ஊர்காவற்றுறை ஆதார வைத்தியசாலையும் உணவுத் தேவைகளைப் பூர்த்தி செய்ய ஊர்காவற்றுறை பலநோக்கு கூட்டுறவுச் சங்கம் விளங்கியது. இங்கு வாழ்ந்த மக்கள் பெரிய கல்வீடு வளவுக்குள் இயந்திர சாதனங்கள், மாட்டுவண்டில்கள், வள்ளங்கள் என பெரிய அளவிலான சொத்துக்களை வைத்து வாழ்ந்து வந்தன. ஏறத்தாழ ஆயிரத்தி அறுநூறு குடும்பங்களை கொண்ட நாரந்தனைக் கிராமம் (1600) நாரந்தனைக் கிராம அலுவலர் பிரிவினை விதானையார் என்ற சொற்பதத்துடன் கிராம மக்கள் சேவை பெற்று வந்தனர். 1980 பின் நாரந்தனை, நாரந்தனை என இரண்டு கிராம சேவகர்கள் பிரிவுகளாக மாற்றப்பட்டு மக்கள் சேவை விரிவுபடுத்தப்பட்டது. ஊர்காவற்றுறை உதவி அரசாங்க அதிபர் பிரிவு மாற்றம் அடைந்தது. குறிப்பிட்ட மாணவர்கள் மட்டும் யாழ்ப்பாணம் வந்து உயர்கல்வியினை பெற்று வந்தனர். ஊர்காவற்றுறை, வேலணை என்ற இரண்டு உயர் பாடசாலை உயர் கல்வியின் கற்று பல்கலைக்கழகம் சென்று உயர் பதவிகளை வகித்து வந்தனர். தற்போது தங்களது ஊர்களில் உயர்பதவிகளை வகிக்கின்றார்கள். 1987இல் ஏற்பட்ட யாழ்ப்பாணம் போர்ச்சூழலில் தீவகம் சற்று தளம்பல் ஏற்பாட்டாலும் இடப்பெயர்வு ஏற்படவில்லை.

1990 இல் ஏற்பட்ட போர்ச்சூழல் ஒட்டுமொத்தமான இடப்பெயர்வினை ஏற்படுத்தியது. 1990 ஆவணி கடலில் ஏற்பட்ட போர்ச்சூழல் காரணமாக ஊர்காவற்றுறை, கரம்பன், தம்பசிட்டி மக்கள் முற்றாக இடம்பெயர்ந்தனர். இவர்கள் நாரந்தனை றோ.க.மகாவித்தியாலயம், சுருவில் றோ.க.பாடசாலை, தேவாலயம் மற்றும் சாட்டி மாதா, சின்னமடு மாதா போன்ற ஆலயங்களில் தஞ்சமடைந்தனர். அதன்பின் ஒருவாரத்தில் முற்றாக இடப்பெயர்வு ஏற்பட்டு ஒரு பகுதியினர் யாழ்ப்பாண பிரதேசத்திற்கும், ஏனையோர் தெற்கு பகுதியான சுருவில், வேலணை தெற்கு, புங்குடுதீவு பகுதிகளில் தஞ்சமடைய நேரிட்டது. மீண்டும் ஒருமாத காலப்பகுதியின் பின் ஊர்காவற்றுறை, கரம்பன், நாரந்தனை மேற்குப் பகுதி தவிர்ந்த மக்கள் மீளக்குடியமரப்பட்டனர். பெரிய அளவில் சொத்துக்களை இழக்க நேரிட்டது. கல்வி நிலையினும் பாதிப்பு ஏற்பட்டது. இக்காலத்தில் நாரந்தனை மத்திய பகுதியில் உதவி அரசாங்க அதிபர் பணிமனையும் ஊர்காவற்றுறை பலநோக்குக் கூட்டுறவுச் சங்கமும்

இயங்கி வந்தனா். 1990 ஆம் ஆண்டுகளில் நாரந்தனைக் கிராமம் நாரந்தனை, நாரந்தனை வடக்கு, நாரந்தனை வடமேற்கு, நாரந்தனை தெற்கு என நான்கு கிராம சேவகா பிரிவுகளாக ஊர்காவற்றுறை உதவி அரசாங்க அதிபர் பிரிவு இயங்கி வந்தது குறிப்பிடத்தக்கது.

இக்காலத்தில் தொழில்சார் தளம்பல் ஏற்பட்ட 50 சதவீதமான மக்கள் மட்டும் தமது தொழில்களைச் செய்து வரலாயினர். பாடசாலைகள் நாம் வேறு இடங்களில் இயங்க ஆரம்பித்தன. அப்போதுதான் கல்வியில் பாரிய வீழ்ச்சி ஏற்பட்டது. மாணவர்கள் மத்தியில் பயப்பீதி காரணமாக உளவியல் தாக்கத்தால் கல்விக்கு பாதிப்பு ஏற்படத் தொடங்கியது. 1991 சித்திரை மாதம் தீவகம் முன்பு குறிப்பிட்ட நான்கு தீவுகளை தவிர்ந்த மக்கள் யாழ்ப்பாணம் நோக்கி இடம்பெயர்ந்தனா. ஊர்காவற்றுறை, வேலணை, உதவி அரசாங்க அதிபர் பிரிவு காரியாலயம் யாழப்பாணச் செயலகத்தின் கட்டடங்களில் தனியாக இயங்கத் தொடங்கின. மக்கள், அரியாலை, நாவற்குழி , கெற்பெலி. அராலி போன்ற பிரதேசங்களிலும் நலன்புரி நிலையங்களிலும் உறவினர் வீடுகளிலும் வாழ்ந்து வந்தனர். நாரந்தனை கத்தோலிக்க பாடசாலையான நாரந்தனை றோ.க. மகாவித்தியாலயம் இன்று யாழ்ப்பாணம் சென்.ஜோன்ஸ் அக்கடமியிலும், தம்பாட்டி அரசினர் தமிழ்க்கலவன் பாடசாலை நாவற்குழி நலன்புரி நிலையத்திலும் தனித்தனியாக இயங்கின. குறிப்பிட்ட மாணவர்கள் மட்டும் கல்வி கற்றனர். மக்கள் மத்தியில் சொத்து இழப்பு, தொழில் இழப்பு, கல்வி இழப்பு என ஏற்பட்டது. காலப் போக்கில் மக்கள் தங்கள் வசதிக்கு ஏற்ப வன்னி மாவட்டம், கொழும்பு, வவுனியா என பரந்து வாழத் தொடங்கினர். ஊர்காவற்றுறை ப.நோ.கூட்டுறவுச் சங்கம் தனது கிளைகளை பிரித்து நிவாரண வழங்கலை மேற்கொண்டனர். மக்கள் தங்கள் அரச இலவச நிவாரணங்களை பெற்று வந்தன. உதவி அரசாங்க அதிபர் பிரிவுகளில் யாழ்ப்பாணம் செயலகத்தின் ஓர் கட்டடத்திலும், கிராம அலுவலர் தமது அலுவல்களை வசதிக்கேற்ப அமைத்து மக்கள் சேவைகளை செய்து வந்தனர். நலன்புரி நிலையங்களுக்கு செல்லும் மக்கள் சேவையைச் செய்தனர். ஆனால் மக்கள் வாழ்விடங்கள் கல்வி, தொழில் போன்றன போதிய வசதிகளை ஏற்படுத்தாத கற்றல் சகல ஆரோக்கியமற்ற பிள்ளையாகக் காணப்பட்டது. உயிர் இழப்புகள் ஏற்பட்டது. 1995 ஐப்பசி மாதம் வரை இவ்வாறாக வாழ்ந்த மக்கள் 1995 ஐப்பசி மாதத்தில் ஏற்பட்ட யாழ்ப்பாணம் பிரதேச வடக்கு மொத்தமான இடப்பெயர்வு சாவகச்சேரி, பருத்தித்துறை அதாவது, தென்மராட்சி, வடமராட்சி மற்றும் வன்னி மாவட்டத்துக்குச் செல்ல ஏற்பட்டது. இதன் கஷ்டங்கள் மீண்டும் பாரிய இழப்புகளை சந்திக்க நேர்ந்தன. குறிப்பாக சில குடும்பங்கள் தங்கள் வாழ்விடங்களை ஏழு, எட்டு முறை மாற்றிக் கொண்டமை குறிப்பிடத்தக்கது. 1996 வைகாசி மாதம் ஏற்பட்ட பாரியளவு மாற்றத்தினால் மீண்டும் மக்கள் யாழ்ப்பாணம் வரத்தொடங்கினர்.

தீவகப் பிரதேச மக்களும் தீவகத்திற்குத் திரும்பத் தொடங்கினர். ஆரம்பத்தில் மக்கள் நாரந்தனைக்கு செல்லும்போது கிராமம் காடுபோல் காட்சி அழித்தது. கால்நடைகளை மட்டும் காணக்கூடியதாக இருந்தது. பத்து வீத மக்கள் மீளக்குடியமர்ந்தனா. ஊர்காவற்றுறை அரசாங்க அதிபர் பிரிவு தனது பணிகளை முன்னைய கட்டடத்தில் ஆரம்பித்தன. கிராம சேவகர்களும் தத்தமது பிரிவுகளில் அலுவலகத்தினை ஆரம்பித்து மக்கள் மீளக்குடியமர உதவி புரிந்தனர். தம்பாட்டியில் 5 வீத மக்கள் தங்கள் தொழிலை வள்ளங்கள் இல்லாத

நிலையில் கடற்கரை பகுதிகளில் தொழில் செய்து வந்தனர். இயந்திரங்கள் இல்லாத நிலையில் விவசாயத் தொழில் புரிந்தவர்களும் குறைந்த அளவில் விவசாயத்தினை மேற்கொண்டனர். இவ்வாறாக பனை தொழில் செய்தவர்கள் கணிசமானவர்கள் செய்யத் தொடங்கினர். மக்கள் மத்தியில ஓர் தயக்கநிலையில் முற்றுமுழுதாக ஒன்றாக அயலவர் வீட்டாருடன் வாழ்ந்த மக்கள் நெருக்கமற்ற தொலைவில் உள்ள வீடுகளில் வாழ்ந்த காரணத்தினால் இரவு நேரப்பொழுதினை ஓர் இடமாக ஒன்றுகூடி வாழத் தொடங்கினர். நாரந்தனை கணேச வித்தியாலயம், நாரந்தனை றோ.க.மகாவித்தியாலயம், நாரந்தனை மகாவித்தியாலயத்தில் ஒன்றாகச் செயற்பட்டு கல்வி நடவடிக்கைகளை மேற்கொண்டது. தம்பாட்டி அரசினர் தமிழ்கலவன் பாடசாலையும் காலப்போக்கில் குறித்த மாணவர்களுடன் இயங்கி வந்தது. போக்குவரத்து 777 பாதை தடைப்பட்ட காரணத்தால் நாரந்தனை மக்கள் அராலிச் சந்தி, வங்களாவடிச் சந்தி, புளியங்கூடல் சந்தியூடாகவே பிரயாணத்தை மேற்கொண்டனர். இதனால் போக்குவரத்து சீரற்றுக் காணப்பட்டது. வைத்தியசாலை ஆரம்பிக்கத் தொடங்கியது. ஊர்காவற்றுறை ப.நோ.கூ.சங்கம் வன்னி மாவட்டம் சென்று இயங்கி காரணத்தினால் இங்கு மீளக்குடியமர்ந்த பணியாளர் சிலரும், உறுப்பினர்கள் சிலரும் இணைச் சங்கமாக ஊர்காவற்றுறை ப.நோ.கூ.சங்கத்தினை துணிந்து ஊர்காவற்றுறை உதவி அரசாங்க அதிபர் பணிமனை ஊடாக நிவாரணத்துக்குரிய பொருட்களை விநியோகித்து வந்தனர். காலப் போக்கில் மக்கள் தொகை மீள்குடியமர்ந்து அதிகரிக்க ஏனைய செயற்பாடுகளும் அதிகரித்துக் காணப்பட்டது.

1997.09.05 திகதியாக யா/நாரந்தனை கணேச வித்தியாலயம் தனது கட்டடத்தில் இயங்குவதற்கான உத்தரவு கல்வித்திணைக்களத்தினால் வழங்கப்பட்டு அப்போதைய அதிபராக திரு.க.குமரேஸ்வரநாதன் பொறுப்பேற்று ஆரம்பிக்கப்பட்டது. பாடசாலைக் கட்டடங்கள் சாணம், குப்பைகள் நிறைந்து காணப்பட்டன. கிணற்றில் நீர் இல்லாத காரணத்தினால் சிறிய கொள்கலன்களில் துலாவில்குளம் பகுதியில் தண்ணீர் எடுத்து இரண்டு சக்கர உழவு இயந்திரத்தில் ஏற்றி பாடசாலைக் கட்டடத்தைக் கழுவி சுத்தம் செய்து ஆரம்பிக்கப்பட்டது மறக்க முடியாத சம்பவமாகும். அப்போது கணிசமான மாணவர்கள் கல்விச் செயற்பாட்டினை ஆரம்பித்தார்கள். அரச நிறுவனங்களால் பௌதீக வளங்கள் வழங்கப்பட்டன. நீர் விநியோகம் செய்யப்பட்டது. ஆசிரியர் தொகை அதிகரிக்க, பாடசாலை இயல்பு நிலைக்கு மாறியது. ஆனால் பெற்றோர், பிள்ளைகளின் மனதில் பாரிய மாற்றம் காணப்படவில்லை. காரணம் தமது சொந்த உறவினர்கள் நண்பர்கள் பல இடங்களில் வாழ்வதால் ஒற்றுமையாகக் கல்வி கற்ற மாணவர்களுக்கு மன உளைச்சலும், வீடுகளில் வாழ்ந்த மக்கள் அந்தரங்க வாழ்வினையும் மேற்கொண்டதனை காணக்கூடியதாக இருந்தது. இக்காலப் பகுதியில் சிலருக்கு புலம்பெயர்ந்து வாழும் உறவினர்கள் உதவிகள் கிடைக்கப்பெற்றுக் கொண்டு திருப்தியுடன் வாழ்ந்து வந்தனர். ஏனையோர், அரச நிறுவனங்களையும் தங்கள் கைகளை நம்பி வாழ்ந்தனர். இக்காலப் பகுதிகளில் தனியார் தொண்டு நிறுவனங்கள் வழங்கிய உதவிகளையும் மறக்க முடியாது. இடப்பெயர்வு ஏற்பட்டு மீளக்குடியமர்ந்து மக்கள் இயல்பு வாழ்க்கை ஆரம்பிக்கும் வகையில் அரச நிறுவனங்களும் சேர்ந்து மக்களுக்கு உதவி வழங்கினர். உணவு, வீட்டு உடைமை, கல்வி வசதி, சுகாதார

வசதிகள் செய்வதற்கு உறுதுணை வழங்கின. வடிதட்டல் வடித்தது போன்று நல்ல கல்வியாளர்கள், நல்ல கல்வி அறிவுடையவர்கள். கொழும்பு, யாழ்ப்பாணம், புலம்பெயர்ந்த நாடுகளுக்குச் சென்ற காலத்தில் இங்குள்ள பாடசாலை மாணவர்கள் கல்வி கற்று தளம்பல் இருந்ததனைக் காணக்கூடியதாக இருந்தது. இருந்தும் இங்குள்ள பாடசாலைகள் கல்வி சம்பந்தமான போட்டிகள், கலைநிகழ்வுகள், தமிழ்த் தினப்போட்டிகள், குறிப்பிட்ட முன்னேற்றத்தினைக் காட்டின. நாரந்தனை கணேச வித்தியாலய மாணவர்களில் வருடத்தில் கனிசமான மாணவர்கள் ஐந்தாம் தரப் புலமைப்பரிசில் சித்தியடைந்தும் க.பொ.த. சாதாரண தர மாணவர்களில் கணிசமான தொகையினர் சித்தியடைந்து உயர்தரத்தில் கல்வி கற்கின்றமை பாராட்டத்தக்க விடயமாகும்.

1998 ஆனி முதல் கணேச வித்தியாலயத்தில் அதிபராக திரு.சா.தியாகலிங்கம் அவர்கள் பொறுப்பேற்று 2007 ஆனி வரை பதவி வகித்து பாடசாலையின் வளர்ச்சிக்கு அரும்பாடுபட்டு வந்தார். 2007 சூழல் தற்போதைய அதிபர் திருமதி பி.சற்குணராசா பொறுப்பேற்று நடத்தி வருவது குறிப்பிடத்தக்கது. அதே பேற்றினை நாரந்தனை றோ.க.மகாவித்தியாலயம்..... அதிபராக பதவியேற்ற காலம் முதல் கடமைபுரிந்து தற்போது அருட்சகோதரிகள் பொறுப்பேற்று அடைந்து வருவதுடன் தம்பாட்டி அரசினர் தமிழ்க் கலவன் பாடசாலை அதிபர் க.சுந்தரலிங்கம் அவர்கள் திருமதி சிறிஸ்கந்தராஜா அவர்கள் தற்போது கடமையாற்றும் திரு.இ.கஸ்ரன் றோய் அவர்களும் பெறுப்பேற்று இயங்கி வருவது குறிப்பிடத்தக்கது. தம்பாட்டி அ.த.க.பாடசாலை, க.பொ.த. சாதாரண வரை அனுமதியுடன் தரம் உயர்ந்து இயங்கி வருவது பராட்டத்தக்கது. இருந்தும் மக்களின் மனதில் பாடசாலையில் படித்து பிள்ளைகளின் கல்வி முன்னேற்றத்துக்குரிய ஒத்துழைப்பு குறைவாகக் காணப்படுவதனை அவதானிக்க முடிகிறது. தபாலகம் வேறு இடப்பெயர்வு சகல மக்களின் மனங்களைப் பாதிக்கச் செய்து, வெளிநாடு, கொழும்பு, யாழ்ப்பாணம் என்று வாழ்வதற்குரிய ஆசைக்குள் வாழ்ந்து வருவதாகவும் காணக்கூடியதாகவுள்ளது. இதன் கவனம் பாடசாலை நிர்வாகத்திற்கு பாடசாலைகளை நடத்துவதற்குரிய கஷ்டமாக உள்ளது. 1990க்கு உற்சமாக வாழ்ந்த மக்கள் 1996க்குப் பின் 2016 வரை 50 வீத மக்கள் குடியமர்ந்து வாழ்ந்து வருகின்றனர். ஆனால் ஒற்றுமை, கல்வி, கலாசாரம் சீராக அமைந்து அதற்குரிய விடயமாக உள்ளமை அவதானிக்கக்கூடியதாக உள்ளது. இதற்கு மக்கள் தாம் வாழும் பிரதேசங்கள் உறுதியாக பற்று வைக்க வேண்டும். புலம்பெயர்ந்து வாழும் வெளிநாட்டு மக்கள் கிராமத்தில் கல்வியாளர்கள் தங்கள் சொந்த இடங்களை முன்னேற்றிய சிந்தனையாளர் சிந்தித்து பற்று வைத்து உதவுவோர்கள் கிராமத்தினை கல்வி, ஒற்றுமை, கலாசாரத்துடன் வாழ்வதற்கு வழிகோலும் எனத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

**ச.சகாதேவன்**
ஓய்வு பெற்ற கிராம அலுவலர்
தலைவர்,
நாரந்தனை மக்கள் சங்கம்(U.K.)
நாரந்தனைக்கிளை.



## முன்னாள் நாரந்தனை மாதர் சங்கத் தலைவியின் உள்ளத்திலிருந்து......

யாழ் குடாநாட்டின் தீவகத்தின் ஒரு சிறு கிராமமாக அமைந்துள்ளது நாரந்தனைக் கிராமம். இங்கு நிலவளம் நீர்வளம், கடல்வளம் அனைத்தும் நிறைந்து மக்கள் விசாயத்தை மேற்கொண்டும் கல்வி கற்றவர்களாகவும் வாழ்ந்து கொண்டிருக்கின்றனர். எமது கிராமத்தில் வாழ்ந்தவர்கள் எல்லோரும் கல்வியின் பயனாக மேன்மை தங்கிய வைத்தியர் களாகவும் பொறியியலாளர்களாகவும் அதிபர்களாகவும் ஆசிரியர் களாகவும் மேலும் உயர்ந்த பதவிகளில் இருந்து வெளிநாடுக ளுக்கும் சென்று வாழ்ந்து வருகின்றனர். இவர்களுக்கெல்லாம் காரணமாக அமைந்த எமது பாடசாலை கணேச வித்தியாசாலை என்பதை பேரோடும் புகழோடும் வாழ்த்த வேண்டும்.

நமது முன்னோர்கள் சிறு கொட்டிலிலேயே 1939,1940ஆம் ஆண்டு காலப்பகுதியில் திருவாளர் நடராசா வாத்தியரால் ஆரம்பிக்கப்பட்டதாக கூறினார்கள். அதன்பின் திருவாளர் மாணிக்க வாத்தியார் கெங்கைமுத்து வாத்தியாரம்மா கற்பித்து வந்தார்கள். எமது காலப்பகுதியிலும் கற்பித்து வந்தார்கள். (1955- 1961) அதன் பின்னரும் திருவாளர் கணபதிப்பிள்ளை, திரு திருமதி.எலியாஸ் பொன்றோஸ் என பல பல ஆசிரியர்கள் கற்பித்து எமது தாயார் கற்ற பாடசாலையிலேயே நானும் கற்று எனது பிள்ளைகள் நால்வர்

கல்விகற்று ஒரே தடவையில் இருவர் க.பொ.த. சாதாரண தரத்தில் சித்தியடைந்து பாடசாலைக்கு பெருமை சேர்த்தனர். பின்னர் மேல்வகுப்பை வேலணை மத்திய மகா வித்தியாலயத்தில் கல்வி கற்று அங்கும் ஒரே தடவையில் க.பொ.த.உயர் தரத்திலும் சித்தியடைந்தனர். இதேபோன்று இப் பாடசாலையில் ஒவ்வொரு வருடமும் தவறாது க.பொ.த. சாதாரணதரத்திலும் தரம் ஐந்து புலமைப்பரிசில் பரீட்சையிலும் மற்றும் போட்டிகளிலும் மாணவர்கள் சரிக்குச்சரி வெற்றியடைந்து வருகின்றனர். நூற்றாண்டு விழாவும் நூற்றாண்டு விழா மலரும் சிறப்புடன் எல்லா அம்சங்களும் கிடைக்கப் பெற்று திகழ வேண்டுமென இறைவனை வணங்குகின்றேன்

**திருமதி கே . இந்திராணி**
பழைய மாணவியும்
முன்னாள் மாதர் சங்கத்தலைவியும்



## சகாப்தம் காணும் கணேசாவும் என் இனிய அந்த நாட்களும்..............

சகாப்தம் காணும் என் கல்வித் தூயவளுக்கு(கணேசாவிற்கு) என் அன்பு கலந்த வணக்கத்தையும், வாழ்த்துக்களையும் தெரிவிப்பதற்கு எனக்கு கிடைத்த வாய்ப்பை எண்ணி பழைய மாணவியாகவும், முன்னாள் ஆசிரியராகவும் மட்டற்ற மகிழ்ச்சி அடைகின்றேன்.

"பெற்றதாயும் பிறந்த பொன்நாடும் நற்றவ வானினும் நனிசிறந்தனவே" என்ற பாரதியின் வாக்கு என்றுமே அழியாத ஓர் உண்மையாகும். இக்கூற்றிற்கு இணங்க எமக்கு கல்வி புகட்டிய பாடசாலைகளும் அடங்கும். இந்த வகையில் இன்று சகாப்தம் காணும் கணேசாவில் துள்ளித் திரியும் சிறுவர்களாய் நாம் பள்ளிக்குப் போன நாள் என்றும் என்னுள் நீங்கா நினைவு களாய் உள்ளன.

இப்பாடசாலையானது ஊரிலுள்ள பல பெரியவர்களால் உருவாக்கப்பட்டது. அவ்வாறு உருவாக்கப்பட்ட பாடசாலையில் எனது தாயாரின் உறவுகளான தந்தை திரு.நடராசா(ஆசிரியர்), மாமா திருவாளர்.மாணிக்கம் சின்னத்தம்பி(அதிபர்), மாமி திருமதி.கெங்கைமுத்து மாணிக்கம் (ஆசிரியர்) இவர்கள்தான் முதன் முதலாக கற்பித்ததாக சொல்லக் கேட்டுள்ளேன்.

நான் இந்தப் பாடசாலையில் முதலாம் வகுப்பில் இருந்து எட்டாம் வகுப்புவரை கல்வி பயின்றேன். இக்காலகட்டத்தில் பல ஆசிரியர்கள் கற்பித்தார்கள். இவர்களில் பெரும்பாலானவர்கள் உள்ளூரைச் சேர்ந்தவர்கள். அந்த வரிசையில அதிபர் திரு.க.கணபதிப்பிள்ளை, திரு.செ.இராசதுரை திருமதி. மா.கெங்கைமுத்து,

திருமதி. த.சிவனையா, திருமதி.பொ.எலியாஸ், திருமதி. டெ.மனுவேற்பிள்ளை, திருமதி.பு.ஜெயபாலன், செல்வி புனிதவதி தில்லைநாதர் ஆகியோரைக் குறிப்பிடலாம்.

எனக்கு அகரம் தொடக்கிய ஆசிரியை திருமதி சிவனையா தங்கமணி ஆவார். இவரைத் தொடர்ந்து தமிழ், கணிதம்,விஞ்ஞானம், சமயம், ஆங்கிலம் போன்ற பாடங்களை மேற்குறிப்பிட்ட ஆசிரியர்களிடம் படித்தேன். இவர்கள் எமக்கு கல்வி புகட்டுவதோடு மட்டும் நின்றுவிடாமல் வையத்தில் எவ்வாறு வாழவேண்டும் என்ற பண்புகளையும் சேர்த்து கற்பித்தார்கள். (மாதா,பிதா,குரு,தெய்வம் இவர்கள்தான் எமது வாழ்க்கைக்கு வழிகாட்டிகள்.) இந்த ஆசிரியர்களும் எமது வாழ்க்கையின் வழிகாட்டிகள் என்பதில் எந்தவித ஐயமுமில்லை.

இந்த வகையில் என்மனதில் நீங்கா இடம் பெற்ற குருவைப் பற்றி என்னால் எழுதமுடியாது ஆனாலும் சிலவற்றை பகிரவேண்டும் என்பது என் அவா. வெள்ளை வேட்டி, வெள்ளைச்சட்டை, சால்வை, நெற்றியில் மூன்று திருநீற்றுக்குறி, காதுகளில் அடர்ந்த உரோமம், வழுக்கைத்தலை, வீறுநடை.. யார் என்று எண்ணுகின்றீர்களா? அவர் வேறு யாருமல்ல. நாம் எல்லோரும் அன்பாக கூப்பிடும் "வாத்தியார்" தான். எமது திருவாளர் கணபதிப்பிள்ளை அவர்கள்.

அவருடைய ஒவ்வொரு அங்க அசைவிலும், வார்த்தையிலும் அன்பு, அரவணைப்பு, அதிகாரம்,கோபம் எல்லாவற்றையும் இனம் காணக்கூடியதாக இருக்கும். அவர் அதிபராக இருந்த காலகட்டத்தில் மாணவர்களின் வரவு, கல்வி, பாடசாலையை விட்டு விலகுவதற்கான தகுந்த காரணம், கட்டுப்பாடுகள் எல்லாம் விதிமுறைகளை மீறாது ஒழுங்காக கடைப்பிடிக்கப்பட்டது. இக்காலகட்டமானது இன்று சகாப்தம் காணும் நாட்களின் ஒரு பொற்காலம் என்றே கூறலாம்.

"இளமையிற் கல்வி சிலையில் எழுத்து" என்ற ஆன்றோர் வாக்கிற்கு ஏற்ப என் வாத்தியார் கற்பித்தவை இன்றும் என்னுள் நிலைத்துள்ளது. அவற்றில் சிலவற்றை இங்கு நினைவு கூர்கின்றேன். தமிழ் என்றால் கட்டுரை எழுதும் முறை, இலக்கணங்கள்... கணிதம் என்றால் வாய்பாடு(பெருக்கல்) மனப்பாடம் செய்து கீழிருந்து மேலாகச் சொல்லுதல் வேண்டும். வெள்ளிக்கிழமை தோறும் பாடும் "நமச்சிவாய வாழ்க," சரஸ்வதிபூஜை என்றால் "சகலகலாவல்லிமாலை" பாட வேண்டும். இப்படி இன்னும் பலவற்றைக் கூறலாம்.

நான் புலம்பெயர் நாடொன்றில் ஆசிரியராக கடமையாற்றுகின்றேன். என் மாணவர்களுக்கு தேவையான கவிதைகள், நாடகங்கள், துணுக்குகள் போன்றவற்றை நானே எழுதுகின்றேன். இதுமட்டுமல்லாமல் பத்திரிகைகள், சஞ்சிகைகள், வானொலி போன்றவற்றிற்கும் எழுதுகின்றேன். இவை யாவற்றிற்கும் என் வாத்தியார்தான் வழிகாட்டியாவார். இவரைப்பற்றி என் பிள்ளைகளுக்கும், என் மாணவர்களுக்கும் பலமுறை கூறியிருக்கின்றேன். என் மனதில் நிறைந்த ஆசிரியரான இவரது இழப்பும் அவ்வாறே என் மனதில் நீங்கா நினைவேதான். எங்களூரிலுள்ள செபஸ்தியார் கடைக்கு நாம் எல்லோரும் போவது வழக்கம், ஒரு மாலைப்பொழுது வாத்தியார் பொருட்களை வாங்குகின்றார் அப்பொழுது நானும் சென்று அவரோடு கதைத்து அவர் வாங்கிய பொருட்களை அவர் பைக்குள் வைத்துக் கொடுத்தேன் ஆனால் அந்த விடியற்காலையில் நான் நித்திரையில்

கேட்ட துயர்செய்தியோ வாத்தியாரின் மரணச் செய்தியாகும். இந்த நீங்கா நினைவுகளை இம்மலரில் எழுதுவது மிகவும் முக்கியமானது ஒன்று என்று எண்ணுகின்றேன்.

அடுத்து எனக்கும் இப்பாடசாலைக்கும் உள்ள உறவு மிகமிக முக்கியமானதாகும். நான் எவ்வாறு இப்பாடசாலையில் ஆரம்பக்கல்வியை கற்றேனோ அதேபோல் முதன் முதலாக இங்கேயே ஆசிரிய சேவையைத் தொடங்குவதற்கும் எனக்கு சந்தர்ப்பம் கிடைத்தது. அதேவேளையில் எனக்கு அகரம் தொடக்கிய ஆசிரியை திருமதி. சிவனையா. உயர்கல்வி கற்பித்த ஆசிரியர் திரு. சுந்தரம்பிள்ளை கலாதரன் ஆகியவர்களுடன் பணிபுரியும் சந்தர்ப்பம் எனக்கு கிடைத்தது. இது எனக்கு ஒரு வரப்பிரசாதம் என்றே நான் கூறுவேன். ஒரு பாடசாலையில் மாணவராகவோ அல்லது ஆசிரியராகவோ இருக்கும் காலம் மிகவும் மகிழ்ச்சிக்குரிய காலம் ஆகும்.

கேள்விகளில் சிறந்து உலகெங்கணும் பரந்து வாழ்கின்றார்கள். இப்படி வாழ்வதற்கெல்லாம் அடிப்படைக்கல்விதான் காரணம் இந்தக் கல்வியைத் தந்த பெருமை கணேசாவிற்கே உரியது என்பது உண்மை ஆனால் மறுபுறம் பார்த்தால் அனர்த்தம் காரணமாக ஏற்பட்ட இடப் பெயர்வினால் இன்றிருக்கும் கணேசாவின் முன்னேற்றம் குன்றியுள்ளமை மிகவும் வேதனைக்குரிய விடயமாக உள்ளது. ஆயினும் இன்றைய இந் நூற்றாண்டு விழா எவ்வளவு சிறப்பாக நடைபெறுகின்றதோ அதேபோல் இனிவரும் காலத்தில் பாடசாலையின் முன்னேற்றம் மென்மேலும் வளரவேண்டும் என எல்லாம் வல்ல அன்னை மனோன்மணியாளை வேண்டி வாழ்த்துகின்றேன்.

நன்றி !

**மலர்விழி ஜெயபாலன்**



## நீங்காத நினைவுத் துளிகள்

நீலத்திரைக் கடலில் மலையென அலைகள் எழுந்து ஓசை எழுப்பி வந்து, கரைதனிலே நாற்புறமும் வந்து தாலாட்டும் தீவகம் தான் லைடன் தீவு. இதன் தலைநகரம் ஊர்காவற்றுறை பல கிராமங்களைத் தன்னகத்தே கொண்ட பெருமைக்குரிய நகரம் இது. இக்கிராமங்களில் ஒன்றான நாரந்தனை என்னும் நற்பதியிலே அமைந்துள்ள பாடசாலையே யா/நாரந்தனை கணேச வித்தியாசாலை ஆகும்.

அழகிய அமைதியான சூழலிலே, வாயிலே வானளாவ உயர்ந்த அரச மரத்தையும் அழகிய கட்டடங்களையும் கொண்டமைந்து பல அறிஞர்களையும், வைத்தியர்களையும், பொறியியலாளர்களையும், ஆசிரியர்களையும், கலைத் துறையினர், வணிகப் பெருமக்கள், முன்னோடி விவசாயிகள் எனப் பலதரப்பட்ட மேன்மக்களையும் உருவாக்கி இந்த வருடம் நூற்றாண்டு விழாவை நிறைவு செய்த பெருமையோடு தலைநிமிர்ந்து நிற்கும் இப்பாடசாலையிலே கல்வி கற்கக் கிடைத்தமையை நான் இன்னும் பெருமையாக நினைவு கூருகின்றேன்.

பாடசாலை மணிச்சத்தம் வீட்டிற்கே கேட்கும் அவ்வளவு அண்மை நடந்து செல்வேன். ஆரம்பக் கல்வி கற்றபோது அதிபராக அன்பும் பண்பும் நிறைந்த அதேநேரம் கண்டிப்பும் மிக்க அதிபர் பண்டிதர். க.கணபதிப்பிள்ளை அவர்கள். ஆசான்களாக அன்போடு அரவணைத்து எண்ணும் எழுத்தும் கற்றுத் தந்த தாயுள்ளம் கொண்ட ஆசிரியைகள் திருமதி எலியாஸ் (பொன்றோஸ் ரீச்சர்), திருமதி சிவனையா (தங்கமணி ரீச்சர்), சூழல் வாசகம் கற்றுத் தந்த திரு. இராமச்சந்திரன் ஆசிரியர், இவர்களிடம் கற்ற ஆரம்பக் கல்வியைத் தொடர்ந்து, இடைநிலைக் கல்வியிலே அன்பான நிர்வாகத் திறமை கொண்ட அதிபர் செ.இராஜதுரை அவர்கள் ஆரம்பக் கல்வியை கற்றுத் தந்த ஆசிரியைகளே தாய்மொழியில் தமிழ் மொழியையும், சமயப் பாடத்தையும் கற்பிக்க, ஆங்கில பாடத்தைப் புரிய வைத்த

திருமதி டெய்சி புஸ்பம் ஆசிரியை அவரைத் தொடர்ந்து துடிதுடிப்போடு கற்றுத் தந்த திரு. அன்ரன் மாஸ்ரர் விஞ்ஞான பாடம் என்றால் அழகு வதனம் கொண்ட கமலேஸ்வரி ரீச்சர், நடேஸ்வரி ரீச்சர் கணித பாடத்தை கற்றுத் தந்த திரு.வாதவூரர். பின்னர் புன்னகையோடு கணிதத்தைப் புகட்டிய திரு.தியாகலிங்கம் மாஸ்ரர். சமூகக்கல்விப் பாடத்தினை திரு. தியாகராசா மாஸ்ரர். தையற் கலையைப் போதித்த செல்வி ஸ்பிரிற்றம்மா ரீச்சர். இனிமையான சங்கீத பாடத்தை கற்பித்த செல்வச் சீராளன் மாஸ்ரர். இன்னும் பல அன்பான பண்பான ஆசான்கள் கல்வியோடு ஒழுக்க விழுமியங்களையும் கற்றுத் தந்தனர்.

இதைவிட ஆசிரியர்கள் வராத பாடவேளைகளுக்கு கற்பிக்க வரும் அதிபர் இராசதுரை அவர்கள் புரிந்துகொள்ள இடர்ப்படுகின்ற தமிழ் இலக்கணத்தை மீண்டும் மீண்டும் வலியுறுத்தி புரிய வைத்துவிடுவார்.

பாடசாலை நாட்களிலே, நவராத்திரி விழா தொடங்கிவிட்டாலே ஆனந்தம்தான். கும்பம் வைப்பதில் இருந்து தொடர்ந்து பூசைகள் பக்திபூர்வமாக நடைபெறும். விஜயதசமி நாளை இன்றும் நினைக்கின்றேன். பாடசாலை முற்றத்திலே பொங்கள் பொங்கிப் படைத்து பூசைகள் செய்து சகலகலாவல்லிமாலை பாடி, மண்டபத்திலே தரையிலே அமர்ந்து வாழையிலையிலே பொங்கல், அவல், காப்பரிசி என்று வகை வகையாக உண்டு களித்த நாட்கள் இன்றும் பசுமரத்தாணிபோல் மனதிலே பதிந்துள்ளது.

விளையாட்டுப் போட்டி என்றால் சுவாரஸ்யம்தான். பக்கத்திலே உள்ள காணியிலே தான் விளையாட்டுப் பயிற்சிகள் நடக்கும். விறுவிறுப்பாக போட்டிகள் நடக்கும். ஓட்டப்போட்டியில் எம்மை ஓட வைப்பதற்காக எங்களின் பின்னால் கையிலே பிரம்போடு துரத்தி ஓடிவரும் ஆங்கிலப்பாட ஆசான் அன்ரன் மாஸ்ரரை இன்றும் நான் கற்பிக்கும் பாடசாலை விளையாட்டுப் போட்டியின் போது ஒரு கணம் நினைத்துப் பார்ப்பதுண்டு.

இவ்வாறு கல்வியோடு இணைப்பாடவிதான செயற்பாடுகளுக்கும் முன்னுரிமை கொடுத்து மாணவர்களின் திறன்களை வளர்க்கப் பாடசாலை அதிபரும் ஆசிரியர்களும் அக்கறையோடு செயற்படுவார்கள்.

நானும் எனது சகோதரர்கள் எல்லோரும் இப்பாடசாலையிலேய கல்வி கற்றோம். அந்தப் பாடசாலை நாட்கள் என்றுமே மறக்க முடியாதவை. எனது பல்கலைக்கழக இறுதியாண்டுப் பரீட்சைகள் முடிந்த பின்னர் அதிபர் திரு.இராசதுரை அவர்களின் வேண்டுகோளின் பேரில் இப்பாடசாலையில் வசதிகள் சேவைகள் கட்டண ஆசிரியராகப் பணியாற்றும் வாய்ப்புக் கிடைத்தது. நான் கல்வி கற்ற பாடசாலையில் முதன்முதலாக எனது ஆசிரிய சேவையை ஆரம்பிக்கக் கிடைத்தமையும் எனக்குக் கற்பித்த சக ஆசிரியர்களோடு பணியாற்ற வாய்ப்புக் கிடைத்தமையும் நான் பெற்ற பெரும் பாக்கியமாகக் கருதுகின்றேன்.

அந்த வகையிலே நூற்றாண்டு விழாக் கொண்டாடும் இப் பாடசாலை இன்னும் பல அறிஞர்களையும் மனித நேயம்மிக்க ஒழுக்கப் பண்பாளர்களையும் உருவாக்கி இன்னும் பல்லாண்டு காலம் சேவையாற்ற வேண்டும் என வாழ்த்துகின்றேன்.

**திருமதி ரஜிமாலா சபேசன்**
பழைய மாணவி.



# எமது வாழ்க்கையின் ஒரு பகுதி நாரந்தனை கணேச வித்தியாலயம் அது ஒரு பொற்காலம் : 1977 - 1989

ஒரு கட்டிடம் உறுதியாகவும் நீண்ட காலம் நின்று நிலைத்திருக்கவும் மேலும் அதிக மேல் மாடிகளைக் கட்டுவதற்கும் சிறந்த அத்திவாரமே காரணம். கவர்ச்சியான கட்டிடம் கண்ணுக்கு தெரியுமேயொழிய அதற்கு காரணமான அத்திவாரம் நிலத்தின் கீழ் இருப்பதால் அது கண்ணுக்கு தெரிவதில்லை.

அதே போன்று ஒரு மனிதன் எப்படிப்பட்ட உயர்ந்த நிலையிலிருந்தாலும் ஆரம்பக் கல்வியும் அதற்கு காரணமான ஆசிரியர்களுமே அவனது அத்திவாரமாக இருப்பார்கள். அந்த வகையில் நான் பத்தாம் வகுப்புவரை கல்வி பயின்ற எனது கிராம பாடசாலையான நாரந்தனை கணேச வித்தியாலயமும் அப்போது அங்கு கற்பித்த ஆசிரியர்களும் எனது குடும்ப அங்கத்தினர்களும் எனது ஊர் உறவுகளும் எனக்கு அத்திவாரமாக இருந்தார்கள் என நினைவு கூருவதில் நான் மிகவும் மகிழ்ச்சி அடைகிறேன்.

எண்ணங்கள் அலை அலை போல் வருகின்றன. அவற்றில் ஒரு சிலவற்றை இங்கு நினைவு கூர விளைகிறேன்.

முப்பது வருடங்களுக்கு முந்தைய நினைவுகள். சிலது விட்டுப் போகவும் வாய்ப்பு இருக்கிறது. வாசகர்கள் புரிந்து கொள்வார்கள் என நினைக்கிறோம். ஆரம்பக்கல்வி ஆசிரியை பொன்றொஸ் ட்ீச்சரிலிருந்து மேல் வகுப்பு ஆசிரியர்களான கலாதரன் சேர், தியாகலிங்கம் சேர், நடனேஸ்வரி டீச்சர் வரை எல்லோருக்கும் மேலாக தனது வாழ்க்கையையே பாடசாலைக்கும் கல்விக்கும் அர்ப்பணிதது எல்லாப் பாடங்களையும் கற்பிக்கும் ஆற்றல் கொண்ட, மாணவர்களின் முன்னேற்றமே தனது முன்னேற்றமாகக் கொண்ட எங்கள் அதிபரும் எமது வழிகாட்டியும், குருவும் அத்துடன் மாமாவுமான செ.இராசதுரை அவர்கள் வரை அனைத்து ஆசிரியர்களும் மிகவும் அன்பானவர்களாகவும் மாணவர்களின் முன்னேற்றத்தில் அக்கறையானவர்களாகவும் ஊக்கம்

உற்சாகம் அளிப்பவர்களாகவும் இருந்தார்கள். அப்படிப்பட்ட பாடசாலையும் ஆசிரியர்களும் கிடைக்கப்பெற்ற நாங்கள் மிகவும் பாக்கியசாலிகள். அவர்கள் கல்வியைப் புகட்டியதோடு மட்டுமல்லாது எங்களது தனிப்பட்ட வாழ்க்கையிலும் நாங்கள் ஒழுக்கத்துடனும் சிறப்போடும் வாழ்க்கையை எதிர்கொள்வதற்கான தன்னம்பிக்கையையும் வளர்த்தார்கள்.

தனியார் கல்வி நிறுவனங்கள் இல்லாத எமக்கு பாடசாலை நேரம் தவிர்ந்த நேரங்களிலும் கூட தங்கள் பெறுமதி மிக்க நேரத்தை எங்களுக்காக ஒதுக்கி எங்களுக்கு மேலதிக வகுப்புகள் நடாத்தி எங்கள் முன்னேற்றத்தை உறுதிப்படுத்தினார்கள். அப்போது அதை நாங்கள் அவ்வளவாக உணரவில்லை என்றாலும் இன்றைய கால கட்டத்தில் ஒவ்வொரு நிமிடத்திற்கும் பணத்தை எதிர்பார்க்கும் இவ்வுலகில் அவர்களது சேவை அளப்பரியது.

விசேடமாக மேலதிக வகுப்புக்கள் 5ம் வகுப்பு புலமைப் பரீட்சையில் தோற்ற இருப்பவர்களுக்கும் சாதாரணதரப்பரீட்சைக்கு ஆயத்தமாக்குபவர்களுக்காகவும் இருக்கும். நான் 5ம் வகுப்பில் இருக்கும் பொழுது எங்கள் வகுப்பு முடிந்ததும் 10ம் வகுப்புக்காரருக்கு மஹாபாரதம் கம்பராமாயண வகுப்புக்கள் நடக்கும். அந்த வகுப்பில் அமர்வதற்கு எங்கள் விருப்பத்தின் பேரில் அனுமதி கிடைக்கும். அப்பொழுதிலிருந்தே அவற்றை நாங்கள் படிக்கத் தொடங்கினோம். அவற்றைக் கற்பித்த அதிபர் மிக அழகாகவும் சுவை படவும் கற்பிப்பார். அதுவே எங்களை அக்கல்வியில் ஆர்வத்தை ஏற்படுத்தி இன்றும் மற்றவர்களை விட எங்களால் இராமாயண மஹாபாரதக் கதைகளின் உதாரணங்களை கூறக்கூடியதாக உள்ளது எனப் பெருமையாகச் சொல்ல ஆசைப்படுகிறோம். பாடசாலையில் சொற்ப நூல்களைக் கொண்ட அலுமாரியிலிருந்த அனைத்துப் புத்தகங்களையும் வாசித்து முடித்த ஞாபகமிருக்கிறது. மொழி அறிவிற்கு வாசிப்பு இன்றியமையாதது. அந்த ஆர்வத்தை அலுமாரியிலிருந்த புத்தகங்களும் தூண்டின.

எங்கள் கிராமம் விவசாயத்தை முதன்மையாகக் கொண்ட படியால் சில பெற்றோரின் முக்கியத்துவம் அதில் செல்வதாலும் குடும்ப நிலை காரணமாகவும் உண்மையிலேயே கெட்டிக்கார மாணவர்கள் தங்கள் திறமைகளை படிப்பில் காட்ட முடியாது போகும் சந்தர்ப்பங்களில் ஆசிரியர்களின் தலையீட்டினால் மீண்டும் கல்வியில் கவனம் செலுத்துவார்கள். இந்த விதமான அக்கறை மாணவர் நலனே தங்கள் நலனென நினைக்கும் எங்கள் ஆசிரியர்களால் மட்டுமே சாத்தியமாகியது.

எங்கள் பாடசாலைக்கு 5ம் வகுப்பிற்கு மேல் அயலூரான தம்பாட்டியிலிருந்து புதிய மாணவர்கள் வருவார்கள். நாங்களும் புதிய நண்பர்கள் சேரும் ஆவலுடன் அவர்களை வரவேற்போம். அது போன்று சில நண்பர்கள் 5ம் வகுப்பிற்கு மேல் வேறு பிரபலமான பாடசாலைகளை நோக்கிச் செல்வார்கள். அவர்கள் தனிப்பட்ட கவனம் எடுக்கும் ஆசிரியர்களையும் நண்பர்களையும் இழந்து செல்வதை அப்போது அறியமாட்டார்கள். ஏனெனில் எமது ஆசிரியர்கள் பாடசாலையிலுள்ள அனைத்து மாணவர்களையும் நன்கு அறிந்திருந்தார்கள். அத்துடன் அவர்களின் குடும்ப நிலவரங்களையும் தீர அறிந்திருந்ததனால் ஆசிரியர்களின் தனிப்பட்ட கவனிப்பு ஒவ்வொரு மாணவனுக்கும் கிடைத்தது. இவ்வாறான சூழலிலிருந்து வேறு பாடசாலைக்குச் சென்று திறமையான மாணவர்கள் தங்கள் உள்ளார்ந்த திறமைகள் வெளிக்கொண்டு வரப்படாமையை

எங்களுடன் பகிர்ந்து கொண்டவர்களும் இருக்கிறார்கள். ஆனால் எமது பாடசாலையில் சாதாரண தரம் வரை படித்து சித்தியடைந்து சென்றவர்கள் பின் பல்கலைக்கழகம் சென்றிருக்கிறார்கள்.

எனது அனுபவம் கூட அதற்கு ஒரு உதாரணம் தான். சாதாரணமாக கணித பாடம் கொஞ்சம் கடினமானது தான். ஆனால் அதனை சவாலாக எடுத்து படிக்க வைத்த பெருமை கலாதரன் சேரையே சேரும். நான் முதல் தடவையில் உயர்தரப் பரீட்சையில் குறைந்த (4S) பரீட்சைப் பெறுபேறுகளையே பெற்றேன் . அது உண்மையிலேயே என்னைத் தனிப்பட்ட முறையிலே அறிந்து ஊக்கம் கொடுக்கக்கூடிய ஆசிரியர்களை நான் பெறாதது ஒரு பிரதான காரணம். நகர்ப் புறச்சூழல் பாடசாலை இன்னுமொரு காரணம். அதற்குப் பழக்கப் பட எங்களுக்கு எடுத்த நேரம். ஆனால் அந்தப் பெறுபேறையே பெரிதாக கூறி என்னை உற்சாகப்படுத்திய எனது ஆசிரியர் தியாகலிங்கம் சேரின் உற்சாக வார்த்தைகளே என்னை தீவிரமாகப் படிக்க வைத்து 2ம் முறை எனது உயர்தரப் பாடசாலையில் எல்லோரையும் விட அதிகூடிய புள்ளிகள் (1A, 2B, 1C - 286 புள்ளிகள் ) எடுத்து சித்தியடைய வைத்தது என்றால் அது மிகையாகாது. நாங்கள் பாடசாலை விட்டு வேறு பாடசாலை போனாலும் எங்கள் மேலுள்ள அக்கறை எங்கள் ஆசிரியர்கள் கை விட்டதேயில்லை என்பதற்கு இது ஒரு சான்று. எங்கள் நாரந்தனை கணேச வித்தியாசாலை ஆசிரியர்களுக்கு என்றும் நாம் கடமைப்பட்டவர்கள்.

திறமையான மாணவர்கள் மாறிப் போனதனால் எங்கள் பாடசாலையில் கற்றுக்கொண்ட மாணவர்களுக்கு ஒரு பின்னடைவு ஏற்பட்டதையும் ஒத்துக் கொள்ளத்தான் வேண்டும். ஏனெனில் போட்டியிட மாணவர்கள் இல்லாததுதான் . அப்படி இருந்திருந்தால் எங்கள் திறமை இன்னும் அதிகமாக வெளிப்பட்டிருக்கும். ஏனெனில் எங்கள் ஆசிரியர்கள் ஆரோக்கியமான போட்டி மனப்பாங்கை ஏற்படுத்தினார்களே ஒழிய பொறாமையை அல்ல

ஆசிரியர்களிடமிருந்து கிடைக்கும் தனிப்பட்ட கவனம் எங்கள் பாடசாலையில் எமக்கு 10ம் வகுப்புவரை கிடைத்தது எங்கள் பாக்கியமே ஆகும்.

ஆசிரியர்களின் ஊக்கமே எங்களை படிக்க வைத்தது எனும்போது இராமாயணத்தில் ஒரு கதை ஞாபகம் வருகிறது. உயிருக்கு உயிர்நாடியாக விளங்கும் வாயுவின் புத்திரன் அனுமார். அவர் இயற்கையிலேயே மிகவும் திறமையும் கெட்டிக்காரனும் ஆவார். அவரிற்கு தேவர்களின் வரங்களும் ஆசீர்வாதங்களும் அதிகப்படியாக கிடைத்து இருந்தன. அதனால் ஏற்பட்ட கர்வம் காரணமாகவும் சுட்டித்தனத்தாலும் இயற்கையான குணத்தினாலும் சிறுவயதில் மிகவும் குறும்புக்காரனாக இருந்தார். அதனால் அவரின் செயல்கள் முனிவர்களிற்கு கடும் இடையூறாக இருந்தன. எனவே அவர்கள், "உனது திறமை உனக்குத் தெரியாமல் போவதாக" என சாபம் கொடுத்தனர். சாபத்துடன் சாப விமோசனமும் கூட இருக்குமே. அதன்படி "யாராவது உனது திறமையை எடுத்து உரைத்தால் அது வெளிப்படட்டும்" என்பதாக விமோசனமும் கொடுத்திருந்தார்கள். சீதையைத் தேடும் பணியில் இந்து சமுத்திரத்தைத் தாண்ட அனுமார் உட்பட எவருமே முன்வரவில்லை. அப்பொழுது அவருடன் கூட இருந்தவர்களுக்கு அனுமாரின் திறமையும் அவரிற்கு கிடைத்த சாபமும் நினைவிற்கு வர அவரின் திறமைகளை எல்லாம் ஞாபகப்படுத்தி அவரை இந்து சமுத்திரத்தை கடக்க வைத்தார்கள்.

அப்படித்தான் எங்கள் மாணவர்களின் திறமையையும் ஆசிரியர்கள் வெளிக்கொணர்ந்தார்கள்.

எனது குணமும் அனுமாரைப் போல என பல சந்தர்ப்பங்களில் உணர்ந்து இருக்கிறேன். ஏனெனில் எனக்கு என்னில் நம்பிக்கை இல்லாத போதெல்லாம் எனது திறமையை அறிந்து எப்படி என்னை முடுக்கி விடுவது என அறிந்திருந்தவர் மாமா . அதன் பின் அவற்றில் எல்லாம் வெற்றியையே அனுபவித்திருக்கிறேன். எனது இந்த அனுபவம் மற்ற மாணவர்களுக்கும் இருக்குமென நம்புகிறேன்.

எனது திறமையை எங்கள் அதிபராக இருந்த எமது மாமா வெளிப்பட வைத்தாரென்றால் அது நூறு வீதம் உண்மையே. அவரின் காரணமாக பாடசாலையிலும் வீட்டிலும் ஒரே சூழல் நிலவியது எங்களுக்கு கிடைத்த அதிகப் படியான நன்மையும் சந்தர்ப்பமும் ஆகும். வீட்டிலேயே சுவரில் கரும்பலகையும் கட்டப்பட்டிருந்தது.

எங்கள் அதிபரின் புலமை எல்லோரும் சொல்வது போல எல்லாப் பாடங்களிலும் இருப்பது போல் ஆங்கிலத்திலும் இருந்தது. அவர் மாலை நேர வகுப்பில் தரம் 8, 9, 10 மாணவர்களை ஒன்றாக வைத்து ஆங்கிலம் கற்பித்தார். அத்துடன் சைவநெறி, தமிழ் ஆகியவற்றையும் கற்பித்தார். தங்கமணி டீச்சரின் பிரியாவிடைக்கு பேச்சு ஒன்று ஆயத்தப் படுத்தி ஆங்கிலத்தில் நானும் அதன் மொழிபெயர்ப்பைத் தமிழில் எனது சிநேகிதி விக்னேஸ்வரியும் பேசினோம். அது ஒரு வித்தியாசமான நிகழ்ச்சியாக இருந்தது.

தொழில்நுட்ப கல்விக்கு கற்பிக்க ஆசிரியர்களில்லாத காரணத்தினால் அதிபரே மனையியல் பாடத்தைக் கற்பிக்க வேண்டியிருந்தது. அப்போது கை கொடுக்க விவசாயத்தை விசேட பாடமாகக் கொண்ட எமது ஊரை அடியாகவும் மண்டைதீவை வசிப்பிடமாகவும் கொண்ட தர்மபூபதி அன்னலிங்கம் (வசந்தா டீச்சர் ) வந்து சேர்ந்தார். அவர் மாணவர்களுடன் உரிமையுடன் பழகி பாடங்களை அன்பாகக் கற்பிப்பார். அவர் 1990ல் நடைபெற்ற இடப்பெயர்வின் போது கடலில் மூழ்கி எங்களை விட்டுப் பிரிந்தது எல்லோருக்கும் பெரும் இழப்பே.

சிறுவயதில் ஊரை விட்டு வெளிக்கிடாத எங்களை யாழ்ப்பாணத்திற்கு புராணக்கதைகளை உள்ளடக்கிய படங்களான கர்ணன், சரஸ்வதி சபதம், ஔவையார் படங்கள் பார்க்க எமது பாடசாலையால் போனோம் . சுப்பிரமணிய பூங்கா பார்த்தோம். அதன் பின் பல காலமாக நாட்டு நிலைமையால் அது இருக்கவில்லை. எமது பாடசாலை சைவத்தை வளர்க்க வந்த பாடசாலை. நவராத்திரி போனற விழாக்களை விமரிசையாகக் கொண்டாடியிருக்கிறோம். வெள்ளிக்கிழமைகளில் சிவபுராணம் படிப்போம். அதனால் அது எல்லோருக்கும் படமாகியும் விட்டது. யாரும் மாணவர்கள் விரதம் இருந்தால் அவர்களுக்கு பாடசாலை விடும் முன்பே போக அனுமதிப்பதன் மூலம் தனது கருணையை வெளிப்படுத்தியிருக்கிறார் எமது அதிபர். அதே நேரம் அவரது கண்டிப்பும் குறைவானது அல்ல. நேரம் பிந்தி வருபவர்களுக்கு வாயிலில் நின்று விசேட பிரம்படியும் கொடுப்பார். எனது பிறந்த நாளன்று நேரம் பிந்திப் போய் பிரம்படியும் வாங்கியிருக்கிறேன். கோவில் திருவிழாவிற்கு பேச்சு பேசவும் பஜனைகளில் பங்கு பெறவும் ஊக்கம் கிடைத்தது.

எங்களுக்கு சங்கீதம் என்றால் உயிர். அப்படி விருப்பம் வர வைத்தவர் செவ்வாய் வியாழக்கிழமைகளில் எங்களுக்கு சங்கீதம் கற்றுத்தர பருத்தியடைப்பிலிருந்து வரும் செல்வசீராளன் மாஸ்டர். ஒருமுறை செவ்வாய்க் கிழமை வந்ததால் போயா தினத்தில் அதை ஏற்க மனமற்று சங்கீத பாடத்திற்காக பாடசாலை சென்று ஒருவரும் வராததால் ஏமாற்றமடைந்து வீடு திரும்பியிருக்கிறேன் . அவர் வருமானத்தை பெரிதாக எதிர்பார்க்காமல் வசதிகள் (குறைந்த சம்பளம்) சேவைகள் கட்டணத்திலேயே படிப்பித்தார். அவர் வெளிநாடு போக அவரின் இடத்தை நிரப்ப கமலாதேவி நடராஜா ஆசிரியை வந்தார். அவர் தனது குடும்பத்துடன் எமது ஊரிலேயே வந்திருந்து பிள்ளைகளையும் எமது பாடசாலையில் சேர்த்து படிக்க வைத்தார். சங்கீதம் தொடர்பான பல நிகழ்ச்சிகளில் எங்கள் மாணவர்களை பங்குபெறச் செய்து பரிசில்களையும் பெற வைத்தார். கலைநிகழ்ச்சிகளுக்கு பொறுப்பாக இருந்து செய்வித்தார். அவர் ஊரிலிருக்கும் வரை பாடசாலைக்காகவே வாழ்ந்தார். இடப்பெயர்வு எல்லோரையும் பிரித்து பெரும் இழப்பையே ஏற்படுத்தி விட்டது.

ஒரு சோகம் என்னவென்றால் 1990ன் பின்னான இடப்பெயர்வின் பின் சுறுசுறுப்பு நிறைந்த பழைய ஊர், பழைய பாடசாலை, பழைய மக்களை பல காலமாகக் காணமுடியாமல் இருந்தது. ஏனெனில் அனைத்து மக்களும் வெளிநாடுகளுக்கும் வெளியூர்களுக்கும் சென்றவர்கள் மீண்டும் வராதது பிரதான காரணம். ஆனால் எமது பாடசாலையின் நூற்றாண்டு விழாவுடன் ஊக்கம் உற்சாகம் சக்தி நிறைந்த பழைய ஊரைக் காண முடியும் என்ற நம்பிக்கை வருகிறது. அதற்கு காரணமான நூற்றாண்டு விழா அங்கத்தவர்கள் அனைவருக்கும் நன்றியுடையவர்களாக இருக்க கடமைப்பட்டுள்ளோம். அவர்களின் இந்த முயற்சி மிகவும் போற்றுதற்குரியது.

இப்பொழுது நாம் ஊருக்கு போனால் எங்களைத் தெரியாதவர்களும் எங்களால் அடையாளம் கண்டு பிடிக்க முடியாத ஊரின் பெருமையும் தெரியாத இளம் தலைமுறையினரே அதிகம் உள்ளனர். அவர்களுக்கு நல்ல எதிர்காலத்தை உருவாக்க வேண்டிய கடமை எங்கள் கைகளில் உள்ளது. அதற்குத் தகுதியானவர்களாக அவர்கள் தங்களை வளர்த்துக் கொள்ள வேண்டும்.

நாரந்தனை கணேஷாவில் படித்த காலம் பொற்காலமென்றால் இனி வெகு விரைவில் வர இருக்கும் எல்லோருக்கும் கிடைக்கவிருக்கும் உண்மையான பொற்காலத்தைப் பற்றி அறியும் பாக்கியமும் எமக்கு கிடைத்திருக்கிறது. அது இந்த உலகமே தேடிக்கொண்டிருக்கும் பகவானை அறியும் பாக்கியமும் அவரிடம் உண்மையான ஞானத்தை பயிலும் பாக்கியமும் ஆகும். (திரி நேத்ரி , திரிகலாதரிசி , த்ரிலோகநாத் )

**திருமதி சுகன்னியா பாஸ்கரன்**
பட்டய பொறியியலாளர்
மொறட்டுவைப் பல்கலைக்கழகம்
முன்னாள் பிரதம பொறியியலாளர்
தேசிய நீர் வழங்கல் வடிகாலமைப்புச் சபை.

**திருமதி துஷ்யந்தி வசந்தகுமார்**
உயிரியல் விஞ்ஞானம் - யாழ் பல்கலைக்கழகம்
முன்னாள் ஆசிரியை - மல்லாவி மத்திய கல்லூரி



# அகவை நூறில் நாம் வளர்ந்த பாசறை நாரந்தனை கணேசா வித்தியாசாலை

உலக வரைபடத்தில் கண்ணுக்குப் புலப்படாத சிறிய புள்ளியளவுடைய இலங்கை பூகோள சரித்திர வரலாற்று முக்கியத்துவத்தில் மிகப் பிரதான பங்கை வகிக்கின்றது. தொன்று தொட்டு விவசாயம், வியாபாரம், கல்வி, சமயம், கலைகலாசார ரீதியாக உலக அரங்கில் தனது சிறப்பையும் கொண்டுள்ளது. இங்கு சிங்களமும் தமிழ் மொழியையும் தாய்மொழிகளாக கொண்ட சிங்களவர்கள், தமிழர்கள் பூர்வீக குடிகளாக இருந்து வந்துள்ளனர். தமிழ் மொழியை தாய்மொழியாக கொண்ட இந்து, கிறிஸ்தவம், இஸ்லாமிய பாடசாலைகள் உருவகம் பெற்றன. அவ்வாறானதொரு காலப்பகுதிகளில் ஏறத்தாழ 1916ஆம் ஆண்டளவில் இலங்கையின் வடபால் அமைந்துள்ள சப்த தீவுகளில் லைடன் தீவில் நாரந்தனை வடக்கில் உதயமானது கணேச கனிஷ்ட வித்தியாலயம்.

முப்பது வருட கொடிய யுத்தம் எமது பாடசாலை போன்ற பல பாடசாலைகளின் வரலாற்று சிறப்புக்கள் அடங்கிய ஆவணங்கள் அழிந்த நிலையிலேயே காணப்படுகின்றன. இந் நிலையில் பழைய செவிவழி செவிவழியாக வந்த கர்ண பரம்பரைக் கதைகள் போன்றே நாம் ஒவ்வொருவரும் எமக்குத் தெரிந்த எமது பாடசாலை பற்றிய ஆவணப்படுத்தலானது காலத்தின் தேவையாக உள்ளது.

எமது பாடசாலை சுற்றி வர உள்ள சுமார் 1km தூரத்திற் குள் நாரந்தனை றோமன் கத்தோலிக்க பாடசாலை, தம்பாட்டி அரசினர் தமிழ் கலவன் பாடசாலை, சரவணை நாகேஸ்வரி வித்தியாலயம் போன்ற பாடசாலைகள் உள்ளன. அந்த வகையில் எமது சமயம், ஊர், அயல் பாடசாலையான கணேசா வித்தியாசாலை எனது தெரிவாக இருந்தது. எனது முதல் பாலர் பாடசாலை ஆசிரியை கருணாதேவி டீச்சர். எமது கிராமச் சிறார்கள் பலரும் அவரின் கையாலேயே அகரம் எழுத ஆரம்பித் தார்கள்.

எனது ஆரம்ப கல்வியை 1978 ஆம் ஆண்டளவில் கணேச வித்தியாலயத்தில் ஆரம்பிக்கப்பட்ட போது தலைமை ஆசிரியரான எமது ஊரவரான திரு. செ. .இராசதுரை இருந்தார். அவருக்கு உதவியாக திருமதி. தங்கமணி ஆசிரியை, உதவி அதிபராக திருமதி.எலியாஸ், திருமதி.மனுவேற்பிள்ளை, திரு. அன்ரன், .திரு.சொக்கலிங்கம், திருமதி.நடேசபிள்ளை, திரு.தியாகலிங்கம் செல்வி.மாலா, செல்வி. நந்தா மற்றும் யாழ்ப்பாணத்திலிருந்து வருகை தந்த ஆங்கில ஆசிரியர் தற்போது இலங்கையின் மிகச் சிறந்த தமிழ் தேசிய பத்திரிகை செய்தி ஆசிரியரான சு.பிரணதார்த்திகரன், செல்விகளான மலர்விழி, மேனகா சகோதரிகள் ஆகியோர் ஞாபகத்தில் வருபவர்களாக உள்ளனர். இதில் குறிப்பாக திரு.சொக்கலிங்கம் ஆசிரியரது கற்பித்தல் என்னை மிகவும் கவர்ந்ததாக இருந்தது. இன்று வரை அவரின் அந்த வெள்ளம் பார்ப்போம் வெள்ளம் பார்ப்போம் வாடா சோம்பேறி, 1,2,3,4,5,6,7, எட்டு மணி வண்டி கஷ்டமென்று ஏறி அப்பச் சட்டியை போட்டுடைத்தாள் தொம்மென்று, காலை நேரம் கமலம் வீட்டு கோழி எட்டு குஞ்சுடன் போன்ற பாடல்கள் அவர் இன்றும் எம்முடன் உள்ளதாகவே எண்ணத் தோன்றுகின்றது.

எமது பாடசாலை சிறப்பானது. அரசமரம், ஆலமரம் இது இரண்டையும் தவிர்த்து எமது பாடசாலை கற்றலை பார்ப்பது என்பது முடியாத காரியம். அரசமரம் எமது விளையாட்டு திடல், ஆலமரம் எமது கல்விக்கூடம் என்றளவில் எம் ஒவ்வொருவரது நினைவிலும் கலந்துவிட்டது.

எமது பாடசாலையில் நவராத்திரி விரதம் மிகவும் சிறப்பாக நடைபெறும். ஒன்பது நாளும் துர்க்கை, லட்சுமி, சரஸ்வதிக்கும் சிறப்பாக விரதம் அனுஷ்டித்து கொண்டாடப்படும். எமது தலைமை ஆசிரியர் திரு. செ.இராசதுரை அவர்கள் அபிராமி அந்தாதி, சகலகலாவல்லி மாலை பாடுவார். அவர் பாடும் போது நாம் ஒவ்வொருவரும் மெய்மறந்து லயித்திருப்போம்.

எமது பாடசாலை கிட்டிப்புள், கிளித்தட்டு, ஒப்போ (கபடி) கெந்திப்பிடித்தல், எட்டுக் கோடு போன்ற கிராமிய விளையாட்டுகளுக்கு மிகவும் பிரபல்யமானது. சிறியளவில் கலைவிழாக்கள் நடைபெற்றாலும் இயல், இசை, நாடகம் என்பவற்றுக்கு குறைவே இருக்காது. அந்தளவுக்கு எமது ஆசிரியர்கள் மிகவும் நேர்த்தியாக எம்மை வழி நடத்தியிருந்தார்கள்.

பாடசாலையோடு நெருங்கிய தொடர்புடையது தான்தோன்றி அம்மன் ஆலயம், ஞான வைரவர் ஆலயம் அங்குள்ள இலுப்பைமரம், பனை, தென்னை மரங்கள், மகேஷ் மாமியார் வீட்டு விளா மரம், பாட்டி, புட்டு மாமி வீட்டு இலந்தை மரம், கோபாலசிங்கம் மாமா வீட்டு பேரீச்சை, வாய்பேச முடியாவிட்டாலும் எமக்கு தாகம் தீர தண்ணீர் தரும் கந்தையா அம்மா, மழைக்காலத்தில் வாய்க்கால் நீர் விளையாட்டு, வெள்ளம் வற்றிய காலத்தில் சிறு மீன்பிடி விளையாட்டு, அறுவடை விதைப்புக் காலத்தில் கண்ணி வைத்து புறா, கிளி பிடிப்பது. பொன்வண்டு பிடித்து தீப் பெட்டியினுள் வைத்து வகுப்பறையினுள் சாகசம் காட்டி மகிழ்வதும் பாடசாலை விவசாய தோட்டத்தில் சிறுபயிர் வளர்ப்பதுமாக எமது பாடசாலையுடன் எமது சமூகம் இரண்டறக் கலந்திருந்தது. இவ்வாறு எமக்கு கல்வி, விளையாட்டு திறன்களை வளர்த்த எமது பாடசாலை நாம் எல்லோரும் ஒரு குடும்பமாய் வாழ வைத்தது மட்டுமல்லாது இன்று வையத்துள் வாழ்வாங்கு வாழ வைத்து வானுறையும் தெய்வத்துள் உறைந்துள்ளது.

எமது நாட்டின் அபிவிருத்திக்கு மட்டுமல்லாது உலகின் முன்னணி நாடுகளான அமெரிக்கா, கனடா, பிரித்தானியா, அவுஸ்திரேலியா போன்ற நாடுகளின் வளர்ச்சிக்கும் பெரும்பங்கு ஆற்றிய, ஆற்றிக்கொண்டிருக்கின்ற பேராசிரியர்கள், விரிவுரையாளர்கள், மருத்துவர்கள், பொறியியலாளர்கள், முகாமையாளர்கள், கணக்காளர்கள், அரச உயர் அதிகாரிகள், கணிதத்துறை சார்ந்தவர்கள், விஞ்ஞானத்துறை சார்ந்தவர்கள், வர்த்தகதுறை சார்ந்தவர்கள், கலை, இலக்கியத்துறை சார்ந்தவர்கள், கல்வி நிர்வாக உத்தியோகத்தர்கள், நிர்வாக உத்தியோகத்தர்கள், அதிபர்கள், ஆசிரியர்கள், மீன்பிடித்துறை சார்ந்தவர்கள், தகவல்தொழில்நுட்பத் துறை வல்லுனர்கள், படைப்பாளிகள், மாலுமிகள், விமானிகள் எனப் பல்வேறு துறைகளிலும் உலகம் பூராகவும் இருக்கின்றோம்.

இவ்வாறு இலங்கையின் பல பிரதேசங்களிலும் உலகின் பல பகுதிகளிலும் நாம் சிறப்பாக தொழிலாற்றுவதற்கும் அங்கெல்லாம் எமக்கு கிடைக்கின்ற வரவேற்பு, கௌரவத்துக்கும் நாம் பயின்ற கணேசா வித்தியாசாலையில் போட்ட உரமான அத்திவாரமே காரணமாகும். எமக்கு கிடைக்கின்ற சமூக அந்தஸ்து நாம் பெற்ற கல்வியாலேயே ஆகும். அதனால் தான் "ஒரு நாட்டின் சிறைச்சாலைகளின் எண்ணிக்கை குறைய வேண்டுமானால் அந் நாட்டின் பாடசாலைகளின் எண்ணிக்கை அதிகரிக்க வேண்டும்" என்று கூறுவர்.

முப்பது வருட யுத்தம் கணிசமான தொகையினர் நாட்டை விட்டு வெளியேற, இன்னும் பலர் ஊரை விட்டு வெளியேறி அவ்விடங்களிலேயே நிலையூன்ற செய்துவிட்டது. மழை ஓய்ந்தும் தூவானம் முடிந்தபாடில்லை என்பார்கள். அதுபோல் யுத்தம் முடிந்த பின்னர் உள்ள நிலை நாம் திரும்பி எமதூர் வந்து அமைதியான பழைய வாழ்க்கையை கூட நடத்த முடியாத நிலையே காணப்படுகின்றது. இவற்றுக்கெல்லாம் காரணமான சமூகவிரோத செயல்களுக்கும், கலாசார சீரழிவுக்கும் நாமெல்லாம் சேர்ந்து முடிவுகட்டாவிட்டால்!!! அவை எமக்கு முடிவு கட்டிவிடும்! சிலர் ஒதுங்கி வாழ்பர்களாக இருப்பதும் எமது கிராம பின்னடைவுக்கு ஒரு காரணம் என்றால் இங்குள்ளவர்களின் தற்போதைய நிலவரம் அடுத்த காரணம். சரி பிழைகளுக்கு அப்பால் நாமெல்லாம் ஒரு கிராமத்தவர், உறவினர், அயலவர் என்று கருதி கருமம் ஆற்றினால் எமதூர் வளம் பெறும்.

அந்த வகையில் நூறாண்டு கண்டுள்ள எமது பாடசாலை என்றென்றும் வாழியவே என்று வாழ்த்துவதுடன் இன்றைய மிகவும் இக்கட்டான நிலையில் எமது இளம் பரம்பரையினர் இப் பாடசாலையையும், இப் பாடசாலை எமது இளம் பரம்பரையினரையும் நன்கு வளப்படுத்தி எம்மையும் எமது கிராமத்தையும் வளர்ச்சிப்பாதையில் இட்டுச் செல்ல வேண்டும்.

நன்றி!!!

**திரு.தி.மன்மதகாந்தன்**
ஆசிரியர் விவேகானந்தா கல்லூரி.



# ஓர் ஆசிரியருக்கு கற்றல் - கற்பித்தல் செயல்முறையின் வினைத்திறனை விருத்தி செய்வதில் கற்றல் கொள்கைகளின் செல்வாக்கு

அனுபவத்தின் விளைவாக ஏற்படுகின்ற நடத்தை மாற்றம் கற்றலாகும். இது நீண்டகாலம் நிலைத்திருப்பது அவசியமாகும். கற்றல் என்பதற்கு அறிஞர் 'கிம்பல்' மீள வலியுறுத்தல் பயிற்சியின் விளைவாக ஒருவரின் நடத்தையில் ஏற்படுகின்ற நிலையான மாற்றம் மீள வலியுறுத்தவோ/ பயிற்சியோ கற்றலின் அடிப்படையாக அமையாது என்கின்றார்.

அண்மைக்காலத்தில் கற்றல் நிகழும் படிமுறையை விவரிக்கும் பொழுது பயிற்சி/ அனுபவங்கள் - கற்றல் - நடத்தை மாற்றம் ஏற்படுவதாக விளக்கப்பட்டுள்ளது. கற்றல் எவ்வாறு நிகழ்கின்றது என்பதை ஆராய்ல்தன் விளைவாக இணைந்தும் முரண்பட்டும் கற்றலுக்கான விளக்கங்களை முன்வைத்துள்ளது.

பல கற்றல் கொள்கைகள் தோன்றினாலும் மூன்று பிரதான பிரிவினுள் கலந்துரையாடப்படுகின்றன. அவையாவன (1) சமூகக் கற்றல் கொள்கைகள் (2) கற்றல் தொடர்பான நடத்தை வாதக் கொள்கைகள் (3) கற்றல் தொடர்பான அறிவுசார் கொள்கைகள்.

கற்றல் செயற்பாட்டை முன்னெடுக்க உளவியலறிவு கற்போன், கற்றல் செயற்பாடு, மதிப்பீடு, கணிப்பீடு ஆகியன உளவியல் எல்லைக்குள் உட்பட்டவை. கற்றல் கொள்கைகள், கற்பித்தல் நுட்பங்கள், பிள்ளைகளின் பிரச்சினைகள் கற்றலின் அளவீடு, கற்றலுக்கான ஊக்கல், ஞாபகம், பயிற்சி, கற்றல் இடமாற்றம், வகுப்பறையில் கற்றலுக்கான எதிர்ப்புக்கள், பொருத்தமான இடமாற்றம் வகுப்பறையில் கற்றலுக்கான எதிர்பார்ப்புக்கள், பொருத்தமான கற்றல் நிலையை ஏற்படுத்த உதவுவதுடன் கற்றல், கற்பித்தலுக்கு அவசியமான சகல விடயங்களையும் விளக்குகின்றன. இவை கற்பித்தல் செயன்முறைக்கு உதவும் விதத்தினை சற்று விரிவாக நோக்குவோம்.

நடத்தை வாதக்கொள்கை ப.தோண்டைக்
முதல் முதலில் வெளிவந்த இக்கொள்கையானது பிரதானமான

மூன்று விதிகளைக் குறிப்பிட்டு தூண்டி துலங்கலுக்கு இடையிலான தொடர்பாடல் கற்றல் நிகழ்வதையும் முயன்று தவறுதல் மூலம் சரியான துலங்கல் தோன்றும்.

இக்கொள்கையை ஆசிரியர் அறிவதனூடாக பயிற்சி விதியை கையாள்வதால் சரியான துலங்கலை உறுதிசெய்யவும், ஞாபகமூட்ட விவாதம், போட்டிகளூடாக விளங்கிக் கொள்ளும் திறன் அதிகரிப்பதை உணர்ந்து பரீட்சையை திட்டமிடவும் வழிகாட்டுகிறது.

விளைவு விதி சரியான துலங்கல் நிகழும்போது மாணவனுக்கு வெகுமதி, அன்பு, ஆதரவு, பாராட்டு அளிப்பதால் ஏற்படும் விளைவையும், தண்டனை பலவீனப் படுத்துமென்பதை அறிந்து சரியான வழியை கையாள வழிவகுப்பதால் அவசியம் அறிந்திருக்கவேண்டும்.

பழைய நிபந்தனைப்பாட்டுக் கொள்கை ட பவ்லோ

மீளவலியுறுத்தலின் அவசியத்தை அறிந்து கால இடைவெளிவிட்டு பரீட்சைகள், போட்டிகளை திட்டமிடவும் சரியான கற்றல் பெறுபேற்றை வெளியிடும்போது பாராட்டு, புகழ்ச்சி வழங்குவதால் கற்றல் மேம்படுமென்பதை அறிந்து கையாளவும், கற்றல் கற்பித்தலில் மீளவலியுறுத்தல் கிடைக்காவிடின் காலகதியிலே மறதி ஏற்படும் அதற்கு ஏற்ப ஆசிரியர் கற்பித்தலை திட்டமிடவும் தொடர் பயிற்சி அளித்தல் செயற்பாட்டை திட்டமிடலும் அவசியம்.

நிபந்தனைப்பாட்டுக் கொள்கை - J.P.வாட்சன்

சரியான தூண்டலை உறுதிப்படுத்த சகல சந்தர்ப்பத்திலும் மீளவலியுறுத்தல் அவசியமானதுடன் மேலதிக தூண்டலை ஏற்படுத்த முடியும்.

இதற்கு சகல அளவுத்திட்ட அடிப்படையில மாத ஆண்டு, ஒழுங்கில் பரீட்சைகள் போட்டிகளை திட்டமிடும் போது நிலையான கால அளவுத் திட்டமுறை வகுப்பறையில் பேணுவதற்கு வழிகாட்டியுள்ளது.

மாறும் விகித அளவுத்திட்ட முறையில் மீள்வலியுறுத்தல் வழங்கும் போது கால அளவுத்திட்ட மூலம் வெற்றிகரமான கற்றல் பேறை அடைவதற்கு முடியுமென்பதை உணர்ந்துகொள்ளவும் தொழில் நிபந்தனைக் கோட்பாடு அறிவு இருக்கும் ஆசிரியர் வகுப்பறையை சிறப்பாக முகாமைத்துவம் செய்யவும் கற்றல் பொறிமுறைகளை ஒழுங்கமைக்கவும் படிமுறைக் கற்றல் முறை மூலம் மாணவனை இடரில் இருந்து விடுவிக்கும் எளிய முறையை அறிந்துகொள்ளவும் தற்கால உலகம் கணினி யுகமாதலால் கணினி கல்வி விருத்தி செய்யவும் இவரது கற்பித்தல் கற்றல் முறைகள் பயன்பட்டு வருகின்றது. இவற்றினை அறியவும் செயற்படுத்தவும் கற்றல் கொள்கை பொருத்தம் உடையதால் ஆசிரியர் அறிந்திருத்தல் அவசியமாகும்.

சமூகக் கற்றல் கொள்கைகள் கற்றல் - கற்பித்தல் செயற்பாட்டில் தான் வாழும் சமூகம் மிகமுக்கியம் வாய்ந்தது என்பதை விளக்குகின்றது. இதற்கு அமைவாக வகுப்பறையில் சகமாணவர்கள் சமூக அமைப்புக்கள் சமவயதுக் குழுவினர் குடும்பம் மாணவர்களுக்கிடையிலான தொடர்புகள் செல்வாக்குச் செலுத்துகின்றமையால்

இவற்றை உணர்ந்து ஆசிரியர் தனது செயற்பாடுகளை திட்டமிடலில் இக்கொள்கையின் முக்கியத்துவத்தை நோக்குவோம்.

கோர்ட் லெனின் களக் கொள்கைகளை அறிந்திருப்பதால் கற்றல் கற்பித்தல் செயற்பாட்டில் மட்டுமன்றி பௌதீகச் சூழல் சமவயதுக் குழுவினர் இயற்கை காரணங்களில் கவனம் செலுத்தி சிறந்த கற்றல் சூழலையுருவாக்கவும்,

பிரச்சினை தீர்த்தலில் குழுத்தாக்கம் ஏற்றுக்கொள்ளக்கூடிய சிறந்த தீர்மானம் எடுக்கவும் ஒருமை ஏற்படுத்த முடியும் என்பதை புரிந்து குழு கற்றல் கற்றலை திட்டமிட வழிகாட்டுவதாலும் மாணவனிடம் சிறந்த கற்றல் அனுபவத்தை நிகழ்கால அனுபவம் வழங்கமுடியும் என்பதையுணர்ந்து சிறப்பான சிறப்பான முறையில் கற்பித்தலில் ஈடுபட இக்கொள்கை பற்றிய அறிவு அவசியம்.

மாக்ரெட் மீட் பண்பாட்டுக் கோலக்கொள்கை

ஒருவரின் நடத்தைக்கு விளக்கமளிக்கும் சமூகக் கொள்கையாகும். கற்றல் மீது வகுப்பறை செயற்பாடு மட்டுமல்ல வீட்டுச்சூழல் சம்பிரதாயங்கள், விருப்புகள், நம்பிக்கைகள் இவற்றுக்கு எதிராக கருத்துக்கள் முரண்பாட்டை ஏற்படுத்துவதால் முரண்படாத வகையில் கற்றல் கற்பித்தல் செயற்பாட்டை ஒழுங்கமைப்புச் செய்து திருப்தியான விளைவை ஏற்படுத்தி இக்கொள்கை பற்றியறிவு அவசியம்.

பாண்டுரா - அவதானக் கற்றல் கொள்கை

அவதானம் மூலம் ஒருவர் கற்பதைப் பற்றி அறிய உதவுகின்றது. கற்றல் இருவழியில் நிகழ்வதாக குறிப்பிட்டுள்ளதால் ஆசிரியர் மாணவன் சரியான துலங்கல்களை வெளிப்படுத்தும்போது புகழ்வதாலும், நல்ல நடத்தையில் சிறந்ததை பின்பற்றுவதால் முன்மாதிரியாக நடக்கவும் வழிகாட்டுகின்றதுடன் சிறப்பான மீள்வலியுறுத்தலின் ஊடாக நாடுகாண விளையும் சான்றோனை உருவாக்கமுடியும். இதற்கமைய சுய கட்டுப்பாட்டுடனான வலியுறுத்தலை நோக்கி நடைமுறைப்படுத்தவும் ஆசிரியர் மாணவரிடம் கற்றல் தொடர்பாக விளக்கவும் கற்றல் கற்பித்தல் முறைகளை திட்டமிடவும் இக்கொள்கைகள் பற்றிய அறிவு அவசியம்.

களக்கொள்கையாளர்கள் நடத்தை நோக்கத்தை செயற்படுத்த தூண்டலோ துலங்கலோ போதுமானதன்று களத்தொகுதியும் அவசியம் தனியாளின் கற்றலை மேம்படுத்த களத்தில் மட்டும் கவனம் செலுத்தினர்.

சிறந்த கற்றல் விளைவைப் பெறுவதற்கு ஆசிரியர் உளவியல்களம், பௌதீகக் களம், சமுதாயக் களம் மூன்றும் அவசியமென்பதை அறிந்து சிறப்பாக திட்டமிட களக் கொள்கையறிவு அவசியம்.

புலக்காட்சி ஏற்படுவதனூடாக அகக்காட்சி முழுமை பெறுவதால் பிரச்சினைக்குத் தீர்வு கிடைக்கும் என்பதற்கு அமைவாக ஆசிரியர், மாணவருக்கு முழு புலக்காட்சி தொழிற்பாட்டில் தெளிவை ஏற்படுத்த வேண்டும். குறை ஏற்படின் மருத்துவரை நாட வழிகாட்ட வேண்டும் தவறான புலக்காட்சியை தவிர்த்து கற்றல் மூலம் நீண்டகால அனுபவத்தை அளிக்கும்

வழிமுறைகளான பயிற்சிகள், கணிப்பீடுகள் போன்ற மீளக் கற்பதற்கான முயற்சிகளைத் திட்டமிட வழிகாட்டுவதால் அறிந்தலவசியம்.

கற்றலின்போது மாணவரின் விருப்புக்கு ஏற்ப பின்பற்றும் பின்பற்ற வேண்டிய போதனை முறைகளையறிந்து ஊக்கமளிக்கவும் அவனது அவதான மார்க்கங்களை அறிந்து கற்பித்தலை ஒழுங்குபடுத்தவும் ஊ.ரோல்மன் உடைய குறிகற்றல் கொள்கை மாணவனுக்கு இலக்கினை தெளிவுபடுத்துவதால் அடைய வழிவகுப்பறை அறிந்து இலக்குக்கான வழிகாட்டலில் ஈடுபடவும்.

மாணவருக்கு எதிர்பார்ப்பை நிறைவு செய்யக்கூடிய வெகுமதிகளை அளித்து உளநிலையை சீராக்கும் திறனைப் பெற்றுக்கொள்ளவும் புதிய பாடத்தை முன் அனுபவத்துடன் இணைந்து கற்றல் கற்பித்தலை இலகுபடுத்த உருவம் பின்னணி முதலியவற்றை தொகுத்துக் கற்பித்தலை முன்னெடுக்கவும் பாடசாலையில் சிறந்த கற்றல் சூழலையுருவாக்க கற்பித்தலை உயர்ந்த நிலைக்குக் கொண்டு செல்லல் கற்றல் கொள்கைகள் பற்றிய அறிவு பயனுடையது.

**உசாத்துணை நூல்கள்**


1. திருமதி சுகந்தினி அன்ரனி தவச்செல்வம் - கல்வி உளவியலில் கற்றல் கொள்கை பிரயோகங்கள்

2. இலங்கை திறந்த பல்கலைக்கழகம் - கல்வி உளவியல் தொகுதி -II

3. உயர்கல்வி அமைச்சு - கல்வி உளவியல் பகுதி- II



**கோ.இளங்கோவன்**

ஆசிரியர்

கிளி/பளை றோ.க. த. பாடசாலை.

# நாரந்தனைப் பிரதேசத்தில் அமைந்துள்ள இந்து ஆலயங்கள்



நாரந்தனை-சரவணை சிவசுப்பிரமணிய சுவாமி கோவில்



தம்பாட்டி-நுனிபுரம் ஸ்ரீ முத்துமாரி அம்மன் ஆலயம்



நாரந்தனை வடக்கு தான்தோன்றி ஸ்ரீ மனோன்மணி அம்பாள் ஆலயம்



நாரந்தனை கிழக்கு ஞானவைரவர் கோவில்



நாரந்தனை வடக்கு ஞானவைரவர் கோவில்

## நாரந்தனைப் பிரதேசத்தில் அமைந்துள்ள கத்தோலிக்க ஆலயங்கள்



சம்பேதுருவானவர் ஆலயம்



லூர்து மாதா ஆலயம்



இருதய ஆண்டவர் ஆலயம்



# இலங்கையில் கூட்டுறவுத்துறை ஆரம்பம் அதன் பயனான நாரந்தனையில் கூட்டுறவுத்துறையின் வளர்ச்சி

20ஆம் நூற்றாண்டில் இலங்கையில் நிலவிய அரசியல் பொருளாதார சமூக பிரச்சினைகள் கூட்டுறவு இயக்கம் தோன்ற காரணமாக அமைந்தன. மக்களின் 60% விவசாயிகளாக இருந்த நிலையில் இவர்களுக்கு தேவையானவற்றை பிரித்தானிய அரசாங்கம் செய்யாமல் பெருந் தோட்ட உற்பத்தியில் நாட்டம் கொண்டு செயல்பட்டது.

இதனால் விவசாயிகள் தங்கள் உற்பத்திக்கான தேவையை பெறுவதற்கு வட்டிக்கு பணம் கொடுக்கும் தனவந்தர்களிடம் தங்கிநிற்க வேண்டிய நிலையில் இவர்களின் உழைப்பு சுரண்டப்பட்டன. இந்த நேரத்தில் தான் அரசாங்கம் விவசாயிகளின் பிரச்சினைகளை கவனத்தில் கொண்டு ஜேர்மன், ஜப்பான், இந்தியா போன்ற நாடுகளில் செயல்படும் கடன் கொடுக்கும் சங்கங்களை அமைக்க ஆய்வு செய்தன.

இதன் பயனாக 1911ம் ஆண்டு கூட்டுறவுச்சட்டம் உருவாக்கப்பட்டு 1912இல் மாத்தளை, பெர்லம்பத்து என்ற கிராமத்தில் கூட்டுறவு கடன் கொடுக்கும் சங்கம் உருவாக்கப் பட்டது. இதனைத் தொடர்ந்து 1913ஆம் ஆண்டு கூட்டுறவுச் சங்க பதிவாளர் நியமிக்கப்பட்டு ஐக்கிய நாணய சங்கங்கள் உருவாக்கப்பட்டன. 1916ஆம் ஆண்டு கரவெட்டியில் ஐக்கிய நாணய சங்கம் பதிவு செய்யப்பட்டன. இந்த நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டபோதிலும் வட்டிக்கு பணம் கொடுப்போரின் இடையூறுகள் வளர்ச்சிக்கு தடையாக இருந்தன. இதேவேளையில் முதலாவது உலகமகாயுத்தமும் தடையாக அமைந்தன.

இதன் பின்பு 1921ஆம் ஆண்டு புதிய கூட்டுறவுச் சட்டம் உருவாக்கப்பட்டன கூட்டுறவுத் துறை மூலம் நாட்டின் பொருளாதாரத்தை மேம்படுத்தலாம் என்ற நியைில் கூட்டுறவுப் பதிவாளர் கூட்டுறவுப் பரிசோதகர், நியமிக்கப்பட்டார்கள். 1924ஆம் ஆண்டு கொழும்பு மாவட்ட கூட்டுறவுச் சங்கம் நிறுவப்பட்டன. தொடர்ந்து யாழ்ப்பாணத்தில் 1929ஆம் ஆண்டு முதலாவது கூட்டுறவு மாகாண வங்கி நிறுவப்பட்டன. தொடர்ந்தும்

1930ஆம் ஆண்டு கூட்டுறவுத்திணைக்களம் தனியாக செயல்படத் தொடங்கியது. 1937ஆம் ஆண்டு வடமாகாண ஐக்கிய மேற்பார்வை சபை உருவாக்கப்பட்டன. அதுதான் இன்றைய யாழ் மாவட்ட கூட்டுறவுச் சபை ஆகும்.

1939ஆம் ஆண்டு இரண்டாவது உலக மகாயுத்தம் தொடங்கியவுடன் பொருட்கள் பதுக்கப்பட்டன மக்களுக்கான விநியோக மார்க்கம் தடைப்பட்டன. இக்காலப்பகுதியில் தான் பண்டகசாலை சங்கங்களின் தேவை உணரப்பட்டன. (தீவகத்தின் தரைப்பாதை துண்டிக்கப்பட்டபொழுது பல நோக்குக் கூட்டுறவுச்சங்கங்கள் இருந்ததால் மக்களை பட்டினிச் சாவில் இருந்து மீட்டன.) அரசாங்கம் பண்டகசாலைச் சங்கங்களை உருவாக்க திணைக்களங்களைத் தூண்டியது. இதன் பயனாக 1946ஆம் ஆண்டு 4034 பண்டகசாலைச் சங்கங்கள் நாடு பூராகவும் அமைக்கப்பட்டதாக கணக்கிடப்பட்டுள்ளன.

பண்டகசாலை சங்கங்களினூடாக அரசாங்கம் உணவுப் பிரச்சனைகளை தீர்க்க கூடியனவாக இருந்ததுடன் மக்களுக்கு தரம், விலை சரியான நிறையுடன் பொருட்கள் விநியோகத்தர்கள் ஊடாக முதலாளித்துவ சுரண்டலில் இருந்து மக்களை காக்கக்கூடியதாகவும் இருந்தன. அந்த கால கட்டத்தில் தான் எமது பிரதேசத்தில் பல பண்டகசாலை சங்கங்கள் உருவாக்கப்பட்டன. அதில் நாரந்தனை மகாசனா பண்டகசாலை சங்கமும் ஒன்றாகும். அதன் தலைவராக அமரர் சின்னத்துரை அவர்கள் இருந்ததாக அறியக்கிடக்கின்றன. இதன் கட்டிடம் நாரந்தனை 9ஆம் கட்டைக்கு அருகில் இருக்கும் நாரந்தனை மக்கள் மன்றத்தால் நடாத்தப்படுகின்ற கல்வி நிலையம் அமைந்துள்ள இடம் ஊர்காவற்றுறை பல நோக்குக் கூட்டுறவுச் சங்கத்திற்குச் சொந்தமாகும். இதில் பனை ஓலையில் செய்யப்பட்ட கூடைகள் எமது பகுதிமக்களால் வெங்காயம் போடுவதற்காக இழைக்கப்பட்டு மற்றைய பகுதிகளுக்கும் அனுப்பப்பட்டதாக அறியக் கிடைக்கின்றன. (இவைகள் நான் ஊர்காவற்றுறை பல நோக்குக்கூட்டுறவுச் சங்க நெறியாளராக தெரிவு செய்யப்பட்ட 1979ஆம் ஆண்டு காணக்கூடியதாக இருந்தது.) தொடர்ந்தும் 1971ஆம் ஆண்டு பண்டகசாலை சங்கங்கள் இணைக்கப்பட்டு பலநோக்கு கூட்டுறவுச்சங்கங்கள் உருவாக்கப்பட்டன. அதில் நாரந்தனை மகாசனா பண்டகசாலை சங்கம் வேலணை சரவணை பலநோக்குக் கூட்டுறவுச்சங்கம் கரம்பன் பண்டகசாலை சங்கம் அனலைதீவு பண்டகசாலை சங்கம் என்பன இணைக்கப்பட்டு ஊர்காவற்றுறை பலநோக்கு கூட்டுறவுச்சங்கமாக செயல்பட்டன. பின் வேலணை புங்குடுதீவு, நயினாதீவுச் சங்கங்கள் இணைக்கப்பட்டு தீவக பல நோக்குக் கூட்டுறவுச்சங்கமாக செயல்பட்டது. இறுதியாக 1977ஆம் ஆண்டு மீண்டும் ஊர்காவற்றுறை வேலணை புங்குடுதீவு நயினாதீவு என பிரிக்கப்பட்டு செயல்பட்டன. ஊர்காவற்றுறை பலநோக்குக் கூட்டுறவுச் சங்கம் எமது பிரதேசமான நாரந்தனை வடக்கில் கிளை - 06 நாரந்தனை மேற்கு தம்பாட்டியில் கிளை - 07 நாரந்தனை தெற்கில் கிளை - 08 என்பன அமைத்து மக்களுக்கான நுகர்ச்சிப் பொருட்கள் விவசாய உள்ளீடுகள் என்பனவற்றை நியாயமான விலையில் விநியோகித்து வருகின்றன. நெருக்கடியான காலகட்டத்தில் தீவகத்தின் தரைப்பாதை துண்டிக்கப்பட்ட பொழுது மக்களை பட்டினிச் சாவில் இருந்து காப்பாற்றியதை மறக்கமுடியாது.

நாரந்தனைக் கிளை - 06 இன் தலைவராக திரு.செ.இராசதுரை அவர்கள் நீண்ட காலமாக இருந்து செயல்பட்டார். கிளை முகாமையாளராக இருந்த அமரர் சி.வேலுப்பிள்ளை அவர்கள் நாரந்தனை பண்டகசாலை சங்கத்தில் கடமையாற்றியதன் பின் ஊர்காவற்றுறை

பல நோக்கு கூட்டுறவுச் சங்கத்தின் நாரந்தனைக் கிளை -06 இல் முகாமையாளராக இருந்து ஓய்வின் பின்பும் ஒப்பந்த அடிப்படையில் கடமையாற்றி இருக்கின்றார். தொடர்ந்தும் அவரின் மகளான திருமதி வள்ளிநாயகி ஓய்வின் பின்பும் கடமையாற்றுகின்றார்.

இன்றைய திறந்த பொருளாதாரம் எந்த பொருட்களையும் எங்கும் வாங்கலாம் என்ற நிலை அமரர் வேலுப்பிள்ளை போன்று செயற்படக் கூடிய முகாமையாளர் இல்லாத நிலையில் கிளையின் செயற்பாடு தொய்வு நிலையை அடைந்து இருந்தாலும் கிளை நிலையங்கள் பூட்டி இருக்கும்பொழுது தனியார் நினைத்த விலையில் பொருட்களை விற்பது நுகர்ச்சியாளருக்குத் தெரிந்த நிலையிலும் இன்று சந்தை விலையை கட்டுப்படுத்தும் நிறுவனமாக செயல்பட வேண்டிய தேவை இருக்கின்றன. இதற்கேற்ப ஒவ்வொரு நுகர்ச்சியாளரும் இணைந்து கடமையாற்ற வேண்டும்.

இதே காலப் பகுதியில் நாரந்தனை வடக்கு ஐக்கிய நாணய சங்கம் அமரர் நமசிவாயம் அவர்கள் தலைமையில் செயற்பட்டு இருக்கின்றன. இதன் அங்கத்தவரின் சேமத்தைச் சேர்த்து கடன்களை சுழற்சி முறையில் வழங்கி இருக்கின்றன. இந்தச் சங்கம் சமாசத்தில் இணையாமல் தனித்து இயங்கியது குறிப்பிடத்தக்கது.

இதனைத் தொடர்ந்து 1986ஆம் ஆண்டு சிக்கன கடன் உதவு கூட்டுறவுச் சங்கங்கள் யாழ் மாவட்டத்தில் பரவலாக பதிவு செய்யப்பட்டதை அறிந்து நாரந்தனை மத்தி சிக்கன சேமிப்புக் கடன் உதவு கூட்டுறவுச் சங்கத்தை அமரர் இ.துரைசாமி தலைவராகக் கொண்டு உருவாக்கினோம். குறுகிய காலத்தில் நூறு அங்கத்தவர்களை இணைத்து யாழ் மாவட்ட சிக்கன சேமிப்புக் கடன் வழங்கு சமாசத்தில் இணைந்து குறுங்காலகக்டன் விதவைகள் கடன் வீடமைப்புக்கடன் என்பன பெற்று அங்கத்தவர்களுக்கு வழங்கப்பட்டு இருக்கின்றன. 1991இல் எமது பிரதேச மக்கள் இடம் பெயர்ந்து சென்ற நிலையில் சங்கம் செயற்படமுடியாத நிலை ஏற்பட்டன.

2002ஆம் ஆண்டு மீண்டும் இச் சங்கத்தை புனரமைக்க முற்பட்டபொழுது பொறுப்புக்கள் கூடுதலாக இருந்ததால் செயல்படுத்த முடியாதநிலை ஏற்பட்டன. இருந்தும் இன்றைய எமது பகுதி மக்களின் தேவை கருதி புனரமைப்பதற்கான நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன.

இதேவேளை எமது பிரதேசத்தை சேர்ந்த அமரர் கந்தஞானி மாஸ்ரர் தலைவராக இருந்து கரம்பன் சின்னமூளாய் கூட்டுறவு வைத்தியசாலையை யாழ்ப்பாணத்தில் இருந்த வைத்தியர்களின் துணையுடன் செயற்படுத்தி இருக்கின்றார்கள். காலப் போக்கில் நஸ்டம் அடைந்ததால் ஊர்காவற்றுறை பல நோக்குக் கூட்டுறவுச் சங்கம் பொறுப்பெடுத்து சிறிது காலத்தின் பின்பு வைத்தியசாலையை 1991இல் இடம் பெயரும் வரை செயற்படுத்தியது குறிப்பிடத்தக்கது.

நாரந்தனை வடக்கு தம்பாட்டியில் கடற் தொழிலில் ஈடுபடுகின்ற மக்கள் தங்களுக்கு கடற் தொழில் கூட்டுறவுச் சங்கத்தை 1997ஆம் ஆண்டு உருவாக்கி இணைந்து செயல்படுவதன் ஊடாக அந்த மக்களின் வாழ்வாதாரம் மேம்பட்ட நிலை அடைந்துள்ளன. நாரந்தனையில் வாழ்ந்த சீவல் தொழிலாளர்கள் ஒவ்வொருவரும் கொட்டில் அமைத்து விற்பனை செய்தார்கள் உழைப்பு சேமிக்கப்படவில்லை.

இந்த நிலையில் 1972இல் வடமாகாணத்தில் தெங்கு பனை உற்பத்திக் கூட்டுறவுச் சங்கங்கள் உருவாக்கப்பட்டன. ஊர்காவற்றுறையில் அமைந்த சங்கத்தின் கிளை நிலையம் நாரந்தனையில் அமைக்கப்பட்டு அதன் ஊடாக விற்பனை செய்கின்ற நிலையில் அவர்களின் உழைப்பு சேமிப்பாக மாறி வாழ்வாதாரம் முன்னேற்றமாக மாறியுள்ளன.

இந்த வகையில் நாரந்தனையில் கூட்டுறவு அமைப்புக்கள் ஊடாக மக்களின் வாழ்வாதாரம் முன்னேற்றமாக அமைந்துள்ளன. இன்னும் யாழ் மாவட்டத்தில் விவசாய கால் நடை பால் உற்பத்தி சங்கங்கள் அமைத்து சிறப்பாக செயற்படுகின்றன. எமது பிரதேசத்திலும் அமைக்கப்பட்டு செயற்படாத நிலையில் இருக்கின்றன. எதிர்கால நன்மை கருதி அதை செயற்படுத்தினால் சிறப்பாகச் செய்யலாம் இதற்கு அனைவரும் இதயசுத்தியுடன் செயற்பட்டு தனிமனித முன்னேற்றத்திற்கு வழியமைத்திடுவோம்.

" வாழ்க கூட்டுறவு
வளர்க நம் கிராமம்"

தலைவர்
**(திரு.த.சுந்தரலிங்கம்)**
ஊர்காவற்றுறை ப.நோ.கூ.சங்கம்
யாழ் மாவட்ட கூட்டுறவுச் சபை



# நாரந்தனை ஸ்ரீ தான்தோன்றி அம்பாள் ஆலய வரலாறு

அருள் தெய்வமான அற்புத அம்பாளுக்கு நிரந்தர ஆலயம் அமைக்க வேண்டுமென மக்கள் பேரவாக் கொண்டனர். இவ்வாக்கியத்தை அறிந்த திரு. கந்தையா கணபதிப்பிள்ளை ஆசிரியர் அவர்கள் இதனை முன்னின்று செயலாற்ற ஓர் அமைப்பு வேண்டுமெனக் கருதி, 1951 ஆம் ஆண்டு வைகாசி மாதம் 20 ஆம் திகதி நாரந்தனை வடக்கு சைவ மக்களை கணேச விததியாசாலையில் ஒன்றுகூட வைத்து அவர்களின் அபிப்பிராயங்களைக் கேட்டறிந்து, அன்றைய தினமே "சைவ மகா சபை" என்ற பெயரில் சபையை உருவாக்கப்பட்டது.

இச்சபையின் போஷகராக நாரந்தனை வடக்கைச் சேர்ந்த சைவப் பெரியார் திரு.மு.மயில்வாகனம் ஆசிரியர் அவர்களை முன்நிறுத்தி பின்வருவோரைக் கொண்ட நிருவாகச் சபை அமைக்கப்பட்டது.

தலைவர் திரு.தம்பு தில்லைநாதன் அவர்கள் (மலாயன் பென்ஷனியர்), உபதலைவர் திரு.வைத்திலிங்கம் தம்பு அவர்கள், செயலாளர் திரு.கந்தையா கணபதிப்பிள்ளை (அதிபர்) அவர்கள், உபசெயலாளர், பொருளாளர் திரு.விசுவலிங்கம் நமசிவாயம் அவர்கள், நிர்வாக உறுப்பினர்கள் சரவணமுத்து பேரம்பலம் அவர்கள், பொன்னம்பலம் அவர்கள், அப்பாக்குட்டி செல்லப்பா அவர்கள், வைத்தியலிங்கம் நகுலேசபிள்ளை அவர்கள் மற்றையோரின் பெயர்கள் தெரியவில்லை இவர்கள் ஒன்றுகூடி, நடைபெறவேண்டிய காரியங்களில் ஆர்வம் கொண்டனர்.

அம்பாளுக்கு நிரந்தர ஆலயம், அமைக்க வேண்டும். இதற்கு முதலில் அரசாங்கத்திடம் இருந்து நிலம் பெறவேண்டும். அதன் காரணமாக ஏழுபேர் கொண்ட குழுவை நியமித்து யாழ். அரச அதிபரைச் சந்தித்து அம்பிகை தோன்றிய இடத்தை மையமாகக் கொண்டு இரண்டு ஏக்கர் காணியைப் பெற்றனர்.

1954 ஆம் ஆண்டு தை மாதம் 26 ஆம் திகதி (ஜய வருடம் தை மாதம்) நாரந்தனை வடக்கைச் சேர்ந்த மூத்ததம்பி செல்லப்பா அவர்களைக் கொண்டு அத்திவாரக்கல் நாட்டப்பட்டது.

கட்டட வேலைகள் துரித கதியில் நடைபெற்றது மூலஸ்தான ஸ்தூபி வேலைகள் சுருவிலை வதிவிடமாகக் கொண்ட ஸ்ருதி நா.தங்கவேல் அவர்களின் கைவண்ணத்தால் சிறப்பாக நடைபெற்றது.

ஆலயத்தில் வைக்கப்பட்டுள்ள விக்கிரகங்கள், எழுந்தருளி விக்கிரகங்கள் பெரிய மணி ஆகியன தாவடியைச் சேர்ந்த ஸ்தபதி நா.சோமசுந்தரம் (சோமு) அவர்களின் கைவண்ணத்தால் உருவாக்கப்பட்டன.

**கொடியேற்றம்**

1958ஆம் ஆண்டுக்குரிய குடியேற்றத் திட்டத்துக்கமைய அரச காணிகளை மக்களுக்கு பகிர்ந்தளிக்கும் முகமாக ஆலயத்துக்கு வழங்கப்பட்ட நிலத்துக்கு தெற்குப் பக்கமாகவுள்ள நிலத்தை கொழும்புக்கு 1/2 ஏக்கர் வீதம் 16 குடும்பங்களுக்கு பகிர்ந்து அளிக்கப்பட்டது. அதன் பிரகாரம் கோவில் நிலத்துக்கும் குடியேற்ற நிலத்துகும் இடையே சிறு துண்டு விடப்பட்டது. அது 1 1/2 ஏக்கர் நிலமாகும். சைவ மகா சபையினர் அரச அதிபருடன் கதைத்து, கோவில் காணியுடன் சேர்த்தனர். அதன் மூலம் ஆலயத்துக்கு 3 1/2 ஏக்கர் நிலமாக உள்ளது.

**கும்பாபிஷேகம்**

நாரந்தனை மக்களின் காவல் தெய்வமான அம்பாள் குடிகொள்ள ஆலயம் அமைக்கப்பட்டது. சைவ மகா சபையினர் அம்பிகையை ஆலயத்தில் பிரதிஷ்டை செய்து வைக்க ஆர்வம் கொண்டு, இணுவில் சிவஸ்ரீ கு.இராமநாதக்குருக்கள் அவர்களை நாடினர். கும்பாபிஷேக விடயங்களை அவருடன் கதைத்து அவரையே பிரதம குருவாகக் கொண்டு நடத்த நிச்சயப்படுத்தி, அவரைக் கொண்டே நாளும் நிச்சயப்படுத்தினார்கள்.

1958 ஆம் ஆண்டு ஆவணி மாதம் 20 ஆம் திகதி சுவாதி நட்சத்திரத்தை கும்பாபிஷேக நாளாகக் கொண்டு, சகல ஏற்பாடுகளும் நடைபெற்று வந்தன. ஆரம்பக் கிரியைகள் ஆரம்பமாகவதற்கு இரண்டு முன்று தினங்களுக்கு முன் நடக்கக்கூடாத விடயம் ஒன்று நடைபெற்றது. ஆலயச் சூழலில் குடியேற்றத் திட்டத்தில் குடியிருந்த இராயப்பு என்பவர் மரணத்தைத் தழுவிக் கொண்டார். அவரைப் பரிசோதித்த டாக்டர் "அவர் அம்மை நோய் காரணமாகவே இறந்துள்ளார் என அறிவித்துள்ளார். அதனால் நாரந்தனை வடக்கை அம்மை நோய் பிரதேசமாகப் பிரகடனப்படுத்திவிட்டனர் சுகாதாரப் பகுதியினர். மக்கள் நடமாட்டங்களைக் கட்டுப்படுத்தி, கும்பாபிஷேகத்தையும் ஒத்திவைக்குமாறு சுகாதாரப் பகுதியினர் அறிவித்து விட்டனர்.

சைவமகாசபையினரும், மக்களும் செய்வதறியாது திகைத்தனர். நாரந்தனை மக்களுக்கு ஏன் இந்த நிலை என எண்ணிய சிவஸ்ரீ கு.இராமநாதக் குருக்கள் சைவ மகா

சபை நிருவாகிகளையும் கூட்டிச் சென்று சுகாதார அத்தியட்சகரை அணுகி கும்பாபிஷே கத்தை குறித்த நாளில் நடத்த ஆவன செய்யுமாறு வேண்டிக் கொண்டனர். இவர்களின் வேண்டுதலை செவிமடுத்த அதிகாரி குறைந்த மக்களுடன் நிறைவேற்றுமாறு பணித்தார். அத்துடன் பொருளுதவி புரிந்து அனுப்பி வைத்தார். அன்னையின் கிருபையினாலே பீடித்திருந்த நோய் கும்பாபிஷேகத்துக்கு முன்னரே கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வரப்பட்டது. மக்களை அச்சுறுத்திய நோய் ஓடி மறைந்தது.

மேற்படி கும்பாபிஷேகம் குறிப்பிட்ட தினமாகிய விளம்பி வருடம் ஆவணி மாதம் 4ஆம் நாள் (20.08.1958) புதன்கிழமை சுவாதி நட்சத்திரத்தில் வெகு சிறப்பாக நடைபெற்றது. அதனைத் தொடர்ந்து 40 நாட்கள் அபிஷேகம் நடைபெற்றது. அன்னையின் அருளை வயர்ந்த சுகாதாரப் பகுதியினர் 12 ஆம் நாள் அபிஷேகத்தினையும் தங்கள் பொறுப்பில் செய்தனர். இவை யாவும் மக்களை மகிழ்ச்சியில் ஆழ்த்தியது.

**பூசகர்**

அம்பிகையின் கும்பாபிஷேகம் இனிதே நிறைவுற்றது. அபிஷேகங்கள் தொடர்ந்து நடைபெற்றுக் கொண்டிருந்தன. அம்பிகைக்கு நாளாந்தப் பூசை செய்ய நிரந்தர ஐயா தேவையென சைவ மகா சபையினர் சிந்தித்தனர். அதனையொட்டி குருக்கள் ஐயாவுடன் ஆலோசித்தனர் . குருக்கள் ஐயா அப்பொறுப்பினை தானே ஏற்றுக் கொண்டு, தனது இரண்டாவது புதல்வரான ஸ்ரீதரசர்மா அவர்களை ஒழுங்கு செய்து கொடுத்தார்.

ஸ்ரீதரசர்மா அவர்கள் தனது கன்னி (ஆரம்ப) பூசையை அம்பாள் ஆலயத்தில் ஆரம்பித்தார். தினமும் இரண்டு வேளையும், வெள்ளி, செவ்வாய் மூன்று வேளையும் நடைபெற்றன

இவரது நேரம் தவறாது பூசை முறைகாலும் அன்னையை அழகுபடுத்தும் கை வண்ணத்திலும் அம்பிகையின் அருள் பிரகாசித்தது அடியார்களின் வரவும் அதிகரித்தது

**எழுந்தருளிய அம்பாள்**

அம்பாள் விக்கிரகம் கண்டெடுக்கப்பட்டு எட்டு ஆண்டுகளுக்குள்ளே ஆலயம் அமைத்து அம்பிகையை பிரதிஷ்டை செய்து கும்பாஷேகம் செய்து ஒன்பதாவது வருடத்தில் அலங்காரத் திருவிழா நடைபெற ஆரம்பித்ததென்றால் அது நாரந்தனை தான்தேன்றி ஸ்ரீமனோன்மணி அம்பாள் ஆலயத்தினையே குறிப்பிடலாம் இதற்கு சபையினரின் முயற்சியும் மக்களின் ஒத்துழைப்புமே காரணமாகும் . இதற்கு முன்னோடியாக நாரந்தனை வடக்கைச் சேர்ந்த திரு.நாகநாதபிள்ளை கந்தன் மாஸ்ரர் அவர்கள் தனது உபயமாக ஐம் பொன்னிலான எழுந்தருளி அம்பாளை 1959ம் ஆண்டு ஆவணி மாதம் வழங்கினார்

எழுந்தருளி அம்பாளை மண்கும்பான் பிள்ளையார் கோவிலிலிருந்து ஊர்வலமாக கொண்டு வரப்பட்டு அந்த ஆண்டே அலங்காரத் திருவிழா நடைபெற ஆரம்பித்தன.

### ஸ்ரீமகாமேருயந்திரம்

ஆலயத்தின் பிரதம குருக்கள் ஐயா சிவஸ்ரீ கு.இராமநாதக்குருக்கள் அவர்கள் ஆலயத்துக்கு வருகை தரும் அடியார்களுக்கு மகா மேருயந்திரத்தின் மகிமை பற்றியும் அவற்றைப் பூசிப்பதால் கிடைக்கக்கூடிய பலன் பற்றியும் எடுத்துக் கூறுவார். இதில் லயப்பட்ட நாரந்தனையைச் சேர்ந்த திரு.சுந்தரபிள்ளை பத்மநாதன் சிவனேசம் தம்பதியினர் 1963ம் ஆண்டு ஐம் பொன்னால் வார்க்கப்பட்ட ஸ்ரீமேருயந்திரத்தினை ஆலயத்துக்கு தங்கள் உபயமாக வழங்கினார்கள்.

ஸ்ரீசக்கரமேருயந்திர பூசை இலங்கையின் முனீஸ்வரத்துக்கு அருந்தாற்போல் தான்தோன்றி ஸ்ரீ மனோன்மணி அம்பாள் ஆலயத்தில்தான் நடைபெறுகின்றது என்பது குறிப்பிடத்தக்கது. ஸ்ரீசக்கரமேருயந்திர பூசை அலங்காரத் திருவிழா காலத்தில் நடைபெற்று வந்தது. 1976 ஆம் ஆண்டு கொடியேற்றத் திருவிழா நடைபெற்றதால் அவ்வேளையில் மேருயந்திர பூசை செய்ய முடியாதென்பதால், நவராத்திரி பூசையுடன் சேர்த்து நடைபெற்றன. 1990 ஆம் ஆண்டின் பின் நடைபெறவில்லையென்பது குறிப்பிடத்தக்கது.

### தேர்த் திருப்பணிச் சபை

தான்தோன்றி ஸ்ரீ மனோன்மணி அம்பாளுக்கு ஒரு சித்திரத் தேர் செய்ய வேண்டுமென ஆர்வம் கொண்ட அடியார்கள் பாராமல் வருடம் புரட்டாதி மாதம் 14 ஆம் நாள் (30.09.1966) வெள்ளிக்கிழமை ஆலய மண்டபத்தில் ஒன்றுகூடி தேர்திருப்பணிச்சபையினை அமைத்தனர். திருப்பணிச் சபையினர் இரண்டு நாடகங்களைப் போட்டுக் கலை நிகழ்ச்சிகளை நடத்தியும் அடியார்களிடம் அன்பளிப்பாகப்பணத்தினைப் பெற்றும் ஆரம்ப வேலைகளை முடுக்கிவிட்டனர். பின்னர் 1970 ஆம் ஆண்டு திருப்பணிச்சபையின் பொறுப்பை சைவ மகாசபை பொறுப்பேற்றுக்கொண்டது.

### சித்திரத்தேர்

சைவ மகாசபையினர் திருநெல்வேலியைச் சேர்ந்த திரு.செ.கந்தசாமி ஸ்தபதியாரைச் சந்தித்து தேருக்குரிய செலவினங்கள் பற்றி கலந்துரையாடி, ஒரு இலட்சம் ரூபா செலவில் செய்து முடிப்பதெனவும் ஒப்பந்தம் செய்யப்பட்டது.

1970 ஆம் ஆண்டு ஆடி மாதம் 13 ஆம் திகதி சுபவேளையில், ஸ்தபதியார் நாள் வேலையை ஆரம்பித்து தானும் குழுவினரும் ஆலயத்தில் தங்கியிருந்து தேர் கட்டுமானத்தைப் பூர்த்தி செய்தனர்.

தேரிக்குரிய பவளக்கால் மணிகள், முடி என்பன தனித்தனி உபயங்களாக அடியார்கள் செய்து கொடுத்தார்கள்.

நளவருடம் ஆவணி மாதம் (மாதம் 20 ஆம் நாள் 05.09.1976) ஞாயிற்றுக்கிழமை வெள்ளோட்டம் நடைபெற்றது. ரூபா முப்பதினாயிரம் செலவில் தேர் முட்டியும் அமைக்கப்பட்டதென்பதும் குறிப்பிடத்தக்கது.

**கும்பாபிஷேகம் II**

பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறை கும்பாபிஷேகம் செய்ய வேண்டுமென்பது விதி. எனினும் குறித்த காலத்தில் ஆதீனம் செய்யமுடியாது போகினும் பதினைந்தாவது ஆண்டில் இரண்டாவது கும்பாபிஷேக நிகழ்வினை அன்னை மனோன்மணிக்கு நிகழ்த்தப்பட்டது. ஆலயத்தில் புனருத்தாரண வேலைகள் மேற்கொள்ளப்பட்டு, புதிதாக வைரவர் கோவில் அமைக்கப்பட்டு பிரமா தீச வருடம் ஆவணி மாதம் 17 ஆம் நாள் (02.09.1973 ) புனருத்தாரண மகாகும்பாபிஷேகம் வெகு சிறப்பாகவும், கோலாகலமாகவும் நடைபெற்றது.

**கொடி மரம்**

அம்பாளுக்கு கொடி ஏற்றி மகோற்சவம் நடைபெற்று தேர் பவனி வரவேண்டுமென்று அடியார்கள் அலாவுற்றனர். அதன் பிரகாரம் தேர் உருவாகிவிட்டது. கொடிமரம் வேண்டுமென சபையினா ஆலோசிக்கும் வேளை, நாரந்தனை வடக்கைச் சேர்ந்த திரு. வைத்திலிங்கம் நகுலேசபிள்ளை அவர்கள் முன்வந்து செப்புத் தகட்டால் ஆன கொடிமரத்தை தன் உபயமாக செய்து வைத்தார். அம்பிகையை பிரதிஸ்டை செய்து கும்பாபிஷேகம் நடைபெற்ற 18 ஆவது வருடமாகிய நள வருடம் ஆவணி மாதம் 12 ஆம் நாள் (28.08.1976) சனிக்கிழமை கொடியேற்ற விழா மிகச் சிறப்பாக நடைபெற்றது. 1990ஆம் ஆண்டின் பின்னர் கவனிப்பார் யாருமில்லாததால் கொடிமரம் பழுதடைந்துவிட்டது. 1996 ஆம் ஆண்டு மக்கள் மீளக்குடியமர்ந்த பின்னர் 1 ஆம் நாள் உபயகாரர் திரு.மு.சபாநாதன் அவர்களால் புதிதாக நிறுவப்பட்டு, கொடியேற்ற விழா நடைபெற்று வருகின்றது.

**அலங்கார உற்சவங்களும் மகோற்சவங்களும்**

அன்னை மனோன்மணி சுயம்பு வடிவில் தோன்றி மக்களுக்கு காட்சியளித்த 25 ஆவது வருடமும், அன்னையை பிரதிஷ்டை செய்து, கும்பாபிஷேகம் நடைபெற்ற 18 ஆவது வருடமாகிய 1976 ஆம் ஆண்டில் புதிய கொடிமரம் நிறுவப்பட்டு, புதிய சித்திரத்தேர் வீதி வலம் வந்ததும், இவ்வளவு குறுகிய காலத்தில் நடைபெற்றதென்றால், அது தான்தோன்றி ஸ்ரீமனோன்மணி அம்பாள் ஆலயத்தில் தான் எனக் குறிப்பிடலாம்.

அம்பிகைக்கு 1959 ஆம் ஆண்டு முதல் 1975 ஆம் ஆண்டு வரை அலங்கார உற்சவங்கள் ஒன்பது நாள் நடைபெற்று பத்தாவது நாள் தீர்த்தத் திருவிழா நடைபெற்றது. அம்பாளின் தீர்த்தத் திருவிழா கடலில் நாகம் தோன்றிய இடத்தில் நடைபெறுவதாகும். அலங்காரத் திருவிழா காலத்தில் இரவு பூசையின் போது ஸ்ரீ மகாமேருயந்திர பூசை நடைபெற்று வந்தன என்பதும் குறிப்பிடத்தக்கது.

அம்பிகையின் அலங்கார உற்சவங்கள் ( 1959 - 1975 ) பதினேழு வருடங்கள் வெகு சிறப்பாக நடைபெற்று வந்தது. 1976 ஆம் ஆண்டு மகோற்சவம் ஆரம்பமானது. நள வருடம் ஆவணி மாதம் 12 ஆம் நாள் ( 28.08.1976) சனிக்கிழமை கொடியேற்றத்துடன் ஆரம்பமாகி ஒன்பது தினங்கள் மகோற்சவம் நடைபெற்று பத்தாவது நாள் நள வருடம் ஆவணி மாதம் 21 ஆம் நாள் ( 06.09.1976 ) திங்கட்கிழமை அம்பாள் தனது சித்திரத் தேரில் முதன்முதலாக

வீதி உலா வந்து மக்களுக்குக் காட்சியளித்து, அருள்பாலித்தார். பதினோராம் நாள் தீர்த்தத் திருவிழா, அம்பாளின் தீர்த்தத் திருவிழா வழமை போல் கடலில் நடைபெறுவது என்பதும் குறிப்பிடத்தக்கது.

**எழுந்தருளி விநாயகர், முருகன்**

அம்பிகைக்கு கொடியேறி, தேர்த் திருவிழா நடைபெற அம்பிகைக்கு பக்கங்களில் சேர்ந்து வீதியுலா வருவதற்கு அம்பிகையின் பிள்ளைகள் இல்லையே என அடியார்கள் சிந்திக்கையில், நாரந்தனையைச் சேர்ந்த திரு.செ.ஜெயபாலன் புண்ணியவதி (ஆசிரியை) தம்பதியினர் ஐம்பொன்னாலான பிள்ளையார் விக்கிரகத்தை தங்கள் உபயமாக அன்பளிப்புச் செய்தனர்.

நாரந்தனை சரவணையைச் சேர்ந்த திரு.சு.சிவநாதன் கனகரூபவதி ( சோதி ) தம்பதியினர் ஐம்பொன்னாலான வள்ளி தெய்வானை சமேத முருகப் பெருமானை தங்கள் உபயமாக அன்பளிப்புச் செய்தார்கள். மகோற்சவ காலத்தில் கொடியேற்றம், தேர், தீர்த்தம் ஆகிய மூன்று தினங்களில் மட்டுமே மூவரும் வீதி உலா வருவார்கள். மற்றைய தினங்களில் அம்பிகை மட்டுமே வீதி உலா வருவார்.

**மகோற்சவ பூசை**

யாழ்.குடாநாட்டில் நல்லூரில் மட்டுமே வசந்த மண்டப பூசையின் பின் ஸ்தம்ப (கொடிமரம்) பூசை நடைபெறுகின்றது. தான்தோன்றி ஸ்ரீமனோன்மணி அம்பாள் ஆலயத்திலும் வசந்த மண்டப பூசையின் பின் ஸ்தம்ப பூசை 1976 ஆம் ஆண்டு மகோற்சவம் ஆரம்பமானது முதல் 1989 ஆம் ஆண்டு வரை நடைமுறையில் இருந்தது. இடம்பெயர்வுகளின் பின்னர் 1998 ஆம் ஆண்டு முதல் ஸ்தம்ப பூசையின் பின்னர் வசந்த மண்டப பூசை நடைபெற்று வருகின்றன என்பது குறிப்பிடத்தக்கது.

**கும்பாபிஷேகம் III**

1989 ஆம் ஆண்டு ஆலயத்தில் நடைபெற வேண்டிய வேலைகளைப் பூர்த்திசெய்து உள்வீதியில் விநாயகர், முருகன், சந்தான கோபால், நவக்கிரக மூர்த்திகள், சண்டேசுரர் ஆகிய தெய்வங்களுக்கு ஆலயம் அமைத்து பிரதிஷ்டை செய்து, சுக்கிர ஆண்டு ஆனித் திங்கள் 26 ஆம் நாள் (10.07.1989 ) திங்கட்கிழமை அந்த நட்சத்திரத்தில் மூன்றாவது கும்பாபிஷேகம் வெகு விமரிசையாக நடைபெற்றது. அம்பிகை அடியார்களின் வேண்டுகோளின் படியும் சைவ மகாசபையினரின் தீர்மானத்தின் படியும் இவ்வாண்டு மகோற்சவம் ஆடி மாத்திற்கு மாற்றப்பட்டது. ஆடிப்பூர (பூரம்) நட்சத்திரத்தைத் தீர்த்தத் திருவிழாவாகக் கொண்டு மகோற்சவங்கள் நடைபெற்றன என்பது குறிப்பிடத்தக்கது. பின்னர் நாட்டில் ஏற்பட்ட இடப்பெயர்வு காரணமாக பல ஆண்டுகள் மகோற்சவங்கள் நடைபெறவில்லை.

### 1990 - 1995 ஆண்டு காலப் பகுதி

1990 ஆம் ஆண்டு ஆவணி மாதம் 24 ஆம் திகதி இராணுவ நடவடிக்கையின் காரணமாக இவ்வாண்டு திருவிழா நடைபெறவில்லை. 1991 ஆம் ஆண்டு சித்திரை மாதம் 27 ஆம் திகதி மீண்டும் ஆரம்பிக்கப்பட்ட இராணுவ நடவடிக்கையின் காரணமாக மக்கள் ஒட்டுமொத்தமாக யாழ். குடாநாட்டுக்கு இடம்பெயர வேண்டிய நிலை ஏற்பட்டது.

ஆலயத்தில் பூசைகள் இல்லை. விளக்கு வைக்க யாரும் இல்லை. ஆலயத்தின் வீதிகள் யாவும் புதர்களும் செடி கொடிகளால் மூடப்பட வேண்டிய நிலையாகிவிட்டது.

அன்னையிடம் சரணடைய முடியாத அடியார்கள் 1991 - 1995 வரையான ஆண்டுகளில் அம்பாளின் பிரதிஷ்டை செய்த நன்னாளை யாழ்.கச்சேரி - நல்லூர் வீதியில் வீற்றிருக்கும் புவனேஸ்வரி அம்பாள் ஆலயத்தில் அம்பிகையின் பெயரால் அபிஷேகங்கள், பூசைகள் யாவும் வருடந்தோறும் வெகு சிறப்பாக நடத்தப்பட்டன என்பதும் குறிப்பிடத்தக்கது.

### மீளக்குடியமர்தல்

1996, 1997 ஆம் ஆண்டு காலப் பகுதியில் மக்கள் சொந்த இடங்களுக்குப் போய் மீளக்குடியமரும் சந்தர்ப்பம் உருவானது. அக்காலப் பகுதியில் நாரந்தனை மக்களும் ( சிறு தொகையினர் ) வந்து குடியமர்ந்தனர்.

### கும்பாபிஷேகம் IV

நாரந்தனையில் மீளக்குடியமர்ந்த மக்கள் அம்பிகையின் நிலை கண்டு அம்பிகைக்கு விளக்கு வைக்க வேண்டும். பூசைகளை ஆரம்பிக்க வேண்டும் என எண்ணி ஒன்றுகூடி நிர்வாகத்தைப் புதுப்பித்து செயற்படத் தொடங்கினர். உள்ளூர், வெளியூர் வெளிநாடுகளில் வாழும் மக்களிடம் நிதி சேகரித்து ஆலயத் திருத்த வேலைகள் யாவும் பூர்த்தி செய்து, வெகுதானிய வருடம் ஐப்பசித் திங்கள் 16 ஆம் நாள் (02.11.1998) திங்கட்கிழமை உத்தரட்டாதி நட்சத்திரத்தில் நாலாவது மகாகும்பாபிஷேகம் சிறப்பாக நடைபெற்றன. தொடர்ந்து வருடாவருடம் மகோற்சவங்கள் நடைபெற்று வந்தன. முன்பு வசந்த மண்டப பூசையின் பின் தம்பப் பூசை நடைபெற்றது. இடப்பெயர்வின் பின் ஸ்தம்ப பூசையின் பின் வசந்த மண்டப பூசை நடைபெற்று வருகின்றது. என்பது குறிப்பிடத்தக்கது.

### அன்னதான மடமும் அன்னதானமும்

தான்தோன்றி ஸ்ரீ மனோன்மணி அம்பாள் மீது பற்றுக்கொண்ட சரவணை மேற்கைச் சேர்ந்த வர்த்தகரான திரு.இ.பாலசிங்கம் அவர்கள் அம்பிகையின் அடியார்களுக்கு அமுதளிக்க வேண்டுமென ஆர்வம் கொண்டு சைவ மகாசபையினருடன் தொடர்புகொண்டு, ஆலயத்துக்கு வடக்குப் பக்கத்தில் சிறிய மடத்தினைக் கட்டி பத்தாவது நாளாகிய தீர்த்த திருவிழாவின்போது அன்னதானம் வழங்கி வந்தார். 1976 ஆம் ஆண்டு அம்பிகைக்கு கொடியேற்றுவிழா நடைபெற்று இரதோற்சவம் நடைபெற்றது. அன்று முதல் 1989 ஆண்டு வரை வருடாவருடம் தேர்த் திருவிழாவின் போது அன்னதானம் வழங்கி வந்தனர்.

இடம்பெயர்வுக்குப் பின் சேதமடைந்த மடத்தை புனரமைப்புச் செய்து மகோற்சவ காலத்தில் சுவிற்சர்ராந்தில் இடம்பெயர்ந்து போய் வாழும் நாரந்தனை வடக்கை சேர்ந்த திரு.கந்தையா தியாகராசா என்பவரின் உதவியுடன் 50 அடி நீளம் கொண்ட அன்னதான மடம் கட்டப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கது.

### விசேட பூசைகள்

ஆலயத்தில் தை அமாவாசை ( அபிராமி பட்டர் தினம் ) சிவராத்திரி, சித்திரா பூரணை, ஆடிப்பூரம், நவராத்திரி, திருவெம்பாவை, வரலட்சுமி பூசை, பங்குனி உத்தரம், மாசிமகம், 12 மாத பூரணை ஆகிய விழாக்கள் வெகுசிறப்பாக நடைபெற்று வருகின்றன.

### இராஜகோபுரம்

அம்பாளின் ஆலயத்தில் இராஜகோபுரம் அமைக்க வேண்டுமென அடியார்கள் அலாவுற்றனர். சைவ மகாசபையினரும் சிந்திக்கும் வேளையில் ஓர் அடியார் வந்து, மக்களின் ஆதரவு இருக்கின்றது. தானும் கூடிய பங்களிப்பைச் செய்கின்றேன் எனக் கூறினார். நல்ல மேஸ்திரியாரை ஒழுங்கு செய்து, 14.07.2011 இல் இராஜகோபுரத்துக்கான அத்திவாரம் போடப்பட்டது. அடியார்களின் விருப்பப்படி வெள்ளைக்கல்லினால் கட்டட வேலைகள் ஆரம்பிக்கப்பட்டு, வியாழ வரி வரை கட்டுப்பட்டு வந்தது. மக்களின் ஆதரவும், பண உதவிகளும் தேவைக்கேற்ப கிடைக்கப்பெற்று வந்தன.

இவ்வேளையில், கும்பாபிஷேகம் நடைபெற்று பதினாறு வருடங்களுக்கு மேலாகிவிட்டது. அம்பாளுக்கு சாத்திய மருந்துகள் மாற்ற வேண்டிய நிலையில் உள்ளது. ஆகவே அம்பிகையை பாலஸ்தாபனம் செய்து அடுத்த கும்பாபிஷேகம் செய்ய வேண்டுமென ஆலய பூசகரும், குருக்கள் அவர்களும் தெரியப்படுத்தினார்கள். அதனால் அதற்குரிய ஆயத்தங்களைச் செய்யும் முகமாக இராஜகோபுர வேலையை இடைநிறுத்த வேண்டிய நிலையாயிற்று.

### புனருத்தாரண திருப்பணி

அம்பாளுக்கு 1998 ஆம் ஆண்டு கார்த்திகை மாதம் 2 ஆம் திகதி திங்கட்கிழமை 4 ஆவது கும்பாபிஷேகம் நடைபெற்றது. பதினாறு வருடங்கள் கடந்துவிட்டன. அம்மனுக்கு சாத்திய மருந்துகள் பழுதடைந்துவிட்டன. அடுத்த கும்பாபிஷேகத்தை செய்ய ஆவன செய்யுமாறு ஆலயக் குருக்கள் ஐயா கேட்டுக் கொண்டதற்கமைய சைவ மகா சபையினர் இதில் கவனம் செலுத்தினர்.

**சு.இராமலிங்கம்**



# மாணவர்களின் ஆளுமை விருத்தியில் சமூகமயமாக்கலின் வகிபங்கு

அறிவோடு சேர்த்து ஆளுமையும் விருத்தி செய்ய வேண்டும் என மாணவர்கள் எதிர்பார்க்கப்படுகின்றனர். ஆளுமை விருத்தி தொடர்பாடல் பன் நெடுங்காலமாகப் பேசப்பட்டு வருகின்ற போதும் இன்று அதன் முக்கியத்துவம் குறித்து மாணவர்கள் மத்தியில் அதிக கவனம் செலுத்தப்படுகின்றது.

இன்றைய வேலைத் தளங்களிலும் சமூகத்தளத்திலும் அறிவால் மாத்திரம் தலையை நிரப்பியவர்களை விட நல்ல ஆளுமைப் பண்புகளை நிரம்பப்பெற்றவர்கள் அதிகம் வரவேற்கப்படுகின்றனர் ஒருகாலத்தில் தொழில் வாய்ப்புக்களைப் பெற வெறும் கல்விச்சான்றிதழ் தகைமைகள் எதிர்பார்க்கப்பட்டு அதற்கு முக்கியத்துவம் கொடுக்கப்பட்ட போதிலும் இன்று ஆளுமைப்பண்புகளுக்கும் முதன்மை கொடுக்கப்படுகின்றமை ஆழக்கவனிக்க வேண்டிய விடயமாகும்.

### ஆளுமை Personality என்றால் என்ன?

'ஆளுமை' என்ற சொல் personality என்ற ஆங்கிலச்சொல்லின் நேரடி மொழிபெயர்ப்பாகும். Personality என்ற ஆங்கிலப் பதம் முகமூடி என்று பொருள் கொண்ட persona என்ற இலத்தீன் சொல்லிருந்து தோன்றியதாகும்.

ஒரு ஹீரோ திரைப்படமொன்றிலோ அல்லது நாடகமொன்றிலோ என்ன வேடத்தைப் பெறுகின்றாரோ அவ் வேடத்திலேயே பார்வையாளர்கள் முன் அறிமுகமாகிறார். அது போலவே ஒருவர் தான் வாழும் சமூகத்திற்கு எந்தவேடத்தை வெளிப்படுத்துகிறாரோ அந்த சமூகத்தில் அதுவே அவரது ஆளுமையாகக் கருதப்படுகின்றது.

ஆளுமை என்றால் என்ன என்பதற்கு பல அறிஞர்களும் பல வரைவிலக்கணங்களைக் கூறுகின்றனர்.

1. ஆளுமை என்பது மற்றவர்களிடமிருந்து பிரித்து ஒருவரின் தனித்தன்மையைக் காண்பிக்கும் முகமாக ஒருவர் தன்னை முன்நிறுத்துவதாகும்.

2. ஒருவரின் பிரத்தியேகமான, நீண்ட காலத்திற்குக் காணப்படக்கூடிய முரண்பாடற்ற சிறப்பியல்புகள் தான் ஆளுமையாகும்

3. நீண்டதொரு காலத்திற்கு ஒரு நபரால் ஒன்றிணைந்து தனித்துவமாகக் காணக்கூடிய மனவெழுச்சி, சிந்தனை மற்றும் நடத்தைசார் அமைப்புக்களின் தொகுப்பாகும்.

எனவே ஆளுமை ஒருவரின் அகப் புறத்தோற்றம், நடத்தை, செயற்பாடுகள், மனவெழுச்சி நிலைகள், பண்புகள், ஆளிடைத் தொடர்புகள் போன்ற பல்வேறு அம்சங்களுடனும் தொடர்பு பட்டதாகும்.

ஆளுமையில் செல்வாக்குச் செலுத்தும் காரணிகளாக பின்வருவன அடையாளப் படுத்தப்பட்டுள்ளன.

1. பரம்பரைக்காரணிகள்.

2. உடல்காரணிகள்.

3. சூழல்காரணிகள்.

**உடலியற்காரணிகள்**

நரம்புத்தொகுதிகளின் தொழிற்பாடு, குருதியோட்டம் ஆகியன ஆளுமை வளர்ச்சியைப் பாதிக்கின்றன.

**உடலமைப்பு**

ஒருவருடைய உடல் வளர்ச்சிக்கமைய அவருடைய நடத்தைக்கோலங்களிலும் மாற்றம் ஏற்படுகின்றது. ஆளுமையில் செல்வாக்குச் செலுத்தும் இக்காரணிகளில் சமூகமயமாதலுடன் தொடர்புடைய அம்சமே சூழல் காரணியாகும். இதிலிருந்து ஆளுமை விருத்திக்கும் சமூக மயமாக்கலுக்குமிடையில் நெருங்கிய தொடர்பு இருப்பதைக் காணலாம்.

**சமூகமயமாக்கல்**

சமூகமயமாக்கல் என்பது சமூக இசைவாக்கல், சமூகத்திற்கு உரித்தாக்கல், சமூகப் பொருத்தப்பாடடையச் செய்தல் முதலிய பல்வேறு பெயர்களால் அடையாளம் காணப் படுகின்றது. சமூகநிலைமைக்கேற்றவாறு ஒருவர் பொருந்திக் கொள்ளல், ஒழுங்கமைத்துக் கொள்ளல், மாற்றியமைத்துக் கொள்ளல், இணங்கிக் கொள்ளல் முதலிய செயற்பாடுகளை சமூகமயமாக்கல் என்பது புலப்படுத்தும்.

சமூகமயமாக்கல் தொடர்பாக பல்வேறு வரைவிலக்கணங்களும் பல்வேறு அறிஞர்களால் முன்வைக்கப்பட்டிருக்கின்றன அவற்றுள் சிலவற்றை நோக்கலாம். “அறியாப்பருவக் குழந்தை சுயவிழிப்புணர்வும் அறிவும் பெற்று மனிதனாக மலர்ச்சி பெறவும் தான் பிறந்த சமூகத்தின் கலாசார நடைமுறைகளை அறிந்து அவற்றைப் பேணுவதில் திறன் பெறவும் இட்டுச் செல்லும் செயன்முறை சமூகமயமாக்கல் ஆகும். (Guiddens)

“சமுகமயமாக்கல் என்பது ஒரு தனியாள் தனது சுற்றாடலில் சமூக சூழலுக்கு ஏற்ப இசைவாக்கம் அடைவதாகும்" ( Emile Durkheim)

சமூகமயமாக்கல் செயல்முறையின் மூலம் ஒருவர் தனிப்பட்ட அடையாளத்தை பெற்றுக் கொள்வதுடன் தம்மைச் சுழவுள்ள கலாசாரத்தின் நம்பிக்கைகளையும் அச் சமூகத்தில் எவ்வாறு நடந்து கொள்ளவேண்டும் எனவும் கற்றுக்கொள்கிறார். (Musgrave)

மேலுள்ள வரைவிலக்கணங்களில் இருந்து சமூகமயமாக்கல் என்பது பற்றி பின்வரும் கருத்தினை முன்வைக்கலாம்.

தனியொருவர் சமூக நடத்தைகள் பற்றிய விளக்கத்தைப் பெறுதல், அவற்றிற்கு ஏற்ப பொருத்தப்பாடடைதல் அவற்றைத் தவிர்த்தல். அத்தனை தொழிற்பாடுகளும் சமூகமயமாக்கலில் அடங்கும் கணிப்பீடுகளின்படி எடுக்கப்பட்ட ஒரு முடிவாகும்.

**ஆளுமை விருத்தியில் சமூகமயமாக்கலின் முக்கியத்துவம்**

மனப்பாங்கு, குணப்பண்புகள், நம்பிக்கை, நடத்தைகள் போன்ற ஆளுமைப் பண்புகளின் உருவாக்கத்திலும் சமூகமயமாக்கல் பெரிதும் பங்கு வகிக்கின்றது. குடும்பம் சமவயது குழுக்கள், சகபாடிகள், பாடசாலை, தான் சார்ந்துள்ள சமூகம் என்பன இவற்றில் சமூகமயமாக்கலின் ஊடாக தாக்கம் செலுத்துகின்றன. உதாரணமாக மூடநம்பிக்கைகளில் தானும் உறுதிகொள்ளும் நிலையைக் காணலாம்.

சமத்துவக்குழுக்கள், சகபாடிகள் போன்றோரின் தாக்கமும் சமூகமயமாதலின் ஊடாக ஆளுமையில் செல்வாக்குச் செலுத்துகின்றது. இக் குழுக்களின் ஊடாக தலைமைத்துவம், தனது ஆற்றலை வெளிப்படுத்துதல்,முன்னின்று செயற்படல், உணர்வுகளைப் பரீட்சித்தல் என்பவற்றை இவர்கள் அடைந்து கொள்கின்றனர்.

பிள்ளைகளை சமூகமயமாக்கல் செயன்முறைக்கு உட்படுத்தும் நிறுவனங்களில் முக்கியமானதாக பாடசாலை காணப்படுகிறது. ஒருமனிதனுக்கு தேவையான பல ஆளுமைப் பண்புகளை பாடசாலைகள் வளர்க்கின்றன. உதாரணமாக கடடுப்பாடுகள் , நேரத்திற்குக் கருமமாற்றுதல், ஒழுங்குகள் விதிகளுக்கு உடன்பட்டு நடத்தல், முதியோரை மதித்தல், நற் செயல்களில் ஆர்வம் ஏற்படுத்தல் போன்றவற்றிக்கு பாடசாலைகள் வழிகாட்டுகின்றன.

மனிதன் சமூகத்தில் இணைந்து வாழ்வதற்கு தான் சார்ந்துள்ள சமூகத்தின் விழுமியங்கள், கலை, கலாசாரம், ஒழுங்குகள், கட்டுப்பாடுகள், நடைமுறைகள் என்பவற்றை அறிந்து கடைப்பிடிப்பதற்கு சமூகமயமாக்கல் இன்றியமையாததாகும் மேலுள்ள விடயங்கள் அனைத்தையும் நோக்கும் போது சமூகமயமாக்கல் ஆளுமை வளர்ச்சியில் பெரிதும் பங்கு வகிப்பதை அறியமுடிகிறது இதற்கான சிறந்த சந்தர்ப்பத்தை பிள்ளைகளுக்கு ஏற்படுத்திக் கொடுப்பது எமது பொறுப்பாகும்.

**திருமதி.சுமிதா உதயச்சந்திரன்**
ஆசிரியர்
யா/நாரந்தனை கணேசவித்தியாலயம்.



# மாறும் உலகில் ஆசிரிய வாண்மை

உலகில் பத்தாண்டுக்கொருமுறை பல்வேறு புதிய கருத்துக்கள், பரிமாணங்கள் ஏற்படுவதனைக் காண்கின்றோம். இதனால் கல்வித்துறையிலும் இம் மாற்றங்கள் பெரும் தாக்கங்களைக் கொடுக்கின்றன. இதனாலேயே கல்விச் செயற்பாடுகளிலும், ஆசிரியரை மையமாகக் கொண்ட கல்வி, சமூகத்தை மையமாகக் கொண்ட கல்வி என மாறுதலுக்கு உட்பட்டு வளர்ந்துள்ளது. இந்நிலையில் எமது நாட்டின் தேசிய திட்டத்தில் கல்வியின் பங்களிப்பின் தன்மையை அறிந்து அதன் அடிப்படையில் கல்வித்திட்டங்களை வகுத்து அரசு செயற்படுகின்றது. இவ்வகையில் ஏற்பாடு செய்யப்பட்ட புகழ்மிக்க திட்டமே கலாநிதி C.W.W.கன்னங்கரா அவர்களால் 1945 இல் ஏற்பாடு செய்யப்பட்ட இலவசக் கல்வித்திட்டமாகும்.

இதைப்போல் பல்வேறு கல்வித்திட்டங்கள் செயற்பாட்டுக்கு வந்தமை எல்லோரும் அறிந்ததே. எனினும் இலங்கையில் கல்விச் சீர்திருத்தங்கள் முன்வைக்கப்படும் பொழுது அரசியலாளர்கள் அதிகாரிகள் மட்டத்தில் தீர்மானங்கள் எடுக்கப்படும் வேளை வகுப்பறையில் கல்வியில் ஈடுபட்டிருக்கும் ஆசிரியர்களின் மத்தியில் பரவலாகக் கருத்துக்களைக் கேட்பது அரிதாக இருப்பதினாலோ என்னவோ எமது நாட்டின் கல்வித்திட்டங்கள் பூரண வெற்றியை அளிப்பதில்லை. செய்யும் தொழிலின் வாண்மையை நன்கறிந்து செயற்படும் மருத்துவத்துறை, சட்டத்துறை, பொறியியற் துறை, கணக்காய்வுத் துறை போன்று ஆசிரிய வாண்மைத்துறை வளர்ச்சியடைந்ததாக இல்லை என்றே கருதப்படுகின்றது.

ஆசிரியவாண்மை என்பது மிக முக்கியமானது. ஆசிரிய பண்புகள் என்று நாம் கருதும் பொழுது சில முக்கிய அம்சங்கள் நமது மனதில் தோன்றும். கிராமங்களில் பல ஆண்டுகளுக்கு முன்பு ஆசிரியர் ஒருவரை பிறிதொருவர் "இவர்

ஓர் ஆசிரியர்" என்று அறிமுகம் செய்யாமல் நாமாகக்கண்டு கொள்ளலாம். அவர்களின் பேச்சிலும், நடத்தையிலும் பண்பிலும் இவற்றைக் காணலாம். இன்றும் சில இடங்களில் இதைக்காணலாம். இவ்விதமான ஆசிரியர்கள் பெரியதொரு பொறுப்பு தம்மிடம் விடப்பட்டுள்ளது என்றும் தம்மிடம் பயிலும் மாணவர்கள் தமது சொந்தப்பிள்ளைகளே என்றும் சதா சிந்திப்பவர்களாகவே காணப்படுவர். இதனாலேயே "ஆசிரியத் தொழில் ஒரு நாட்டைக்கட்டி எழுப்பும் தொழில்" எனக் கருதப்பட்டது.

வாண்மை என்பது குறித்த துறை தொடர்பான சிறப்பான அறிவையும், சுதந்திரமான அறிவையும், சுதந்திரமாகச் செயற்படும் தன்மையையும் பொறுப்பேற்கும் திறனையும் கொண்டதாக விளங்கும். இந்த வகையில் ஆசிரியவாண்மையில் இங்கு குறிப்பிட்ட மூன்று அம்சங்களும் முக்கியத்துவம் பெறுகின்றன. வாண்மையாளர் எனப்படுவோர் தாம் மேற்கொள்ளும் தொழிற்றுறையில் சிறப்புத் தேர்ச்சியைப் பெற்றிருத்தலும் அவசியமாகும். சிறப்பான அறிவையும் தேர்ச்சியையும் கொண்டிராத துறைகள் வாண்மைத் துறைகளாகக் கொள்ளப்படுவதில்லை. சாதாரண மக்களின் இயலுமைக்கு அப்பாற்பட்ட துறைகளே வாண்மைத் துறைகளாகக் கொள்ளப்படுகின்றன.

அறிவு, தன்னியக்கத்தொழிற்பாடு, பொறுப்புணர்வு என்பவை வாண்மையின் அடிப்படைகளாகும். தன்னியக்கமாக முடிவுகளை மேற்கொள்ளும் போது அத்தகைய தீர்மானங்கள் பொறுப்புடன் மேற்கொள்ளப்பட வேண்டும் என்பதுடன், அதற்கு வகை சொல்ல வேண்டிய பொறுப்பும் வாண்மையாளருக்கு உண்டு என்பதில் கவனமாகச் செயற்படல் வேண்டும்.

கல்வியானது எதிர்கொள்ளும் முக்கிய சவால்களாக அமைவது, கற்போனை எதிர்கால அபிவிருத்திக்கு பங்களிப்புச் செய்யும் வகையில் உருவாக்குவதோடு, உலகமயமாதலுக்கு முகம் கொடுக்கும் வகையிற் தயார்படுத்துவதும், சமூக இசைவாக்கத்துக்கு வேண்டிய திறன்களைப் பெற்றுக் கொடுத்தலுமாகும். இப்பணியை நிறைவு செய்யும் பாரிய பொறுப்பு ஆசிரியர்களின் கைகளிலேயே தங்கியுள்ளது. இவ்வகைச் சவால்களை எதிர்கொள்வதற்கு ஆசிரியர்கள் போதியளவு தேர்ச்சியையும் திறன்களையும் பெற்றிருத்தல் அவசியமாகும். இதற்குப் பொருத்தமான வகையில் ஆசிரிய வாண்மை தொடர்பான செயற்றிட்டங்கள் அமைந்திருத்தல் அவசியமாகும்.

ஆசிரியர்கள் மாணவர்களின் கற்றல் தொடர்பான மனப்பாங்குகளை விருத்தி செய்யும் முகவர்களாவர். ஆசிரியர்கள் மாணவர்கள் மத்தியில் நேரானதும் எதிரானதுமான மனப்பாங்குகளை விருத்தி செய்யமுடியும். ஆசிரியர்கள் மாணவர்களிடையே கற்றல் தொடர்பான ஆர்வத்தையும் சுதந்திர உணர்வுகளையும், உயர்சிந்தனையாற்றல்களையும், விருத்தி செய்ய முடியும். முறை சார் கல்வியை நடைமுறைப்படுத்துபவர்கள ஆசிரியர்களாவார். எனவே முன்குறிப்பிடப்பட்ட தேர்ச்சிகளை மாணவர்கள் மத்தியில் உருவாக்க ஆசிரிய வாண்மையில் உரிய பங்கு கொடுக்கப்பட வேண்டும். மாறும் உலகிற் பணியாற்றும் ஆசிரியர்கள் சர்வதேச வர்த்தமானங்களுக்கு உரியவாறு தமது வாண்மையை விருத்தி செய்தல் முக்கியமானதாகும். எனவே தான் இன்றைய கல்வி

அமைப்பில் தொடருறு கல்விக்கு முக்கியததுவம் கொடுக்கப்பட்டுள்ளது. ஆசிரியர்கள் தாம் பெற்ற கடந்தகால அனுபவங்கள், சமகால தேவைக்கு ஈடுகொடுக்க முடியாது என்பது அறியப்பட்டுள்ளது. ஏனெனில் உலகம் வெகு வேகமாக மாறிக் கொண்டிருக்கிறது. எனவே ஆசிரியர்கள் தம்மை புத்தாக்கம் செய்து கொள்ளல் தவிர்க்க முடியாதது ஆகும்.

ஆசிரிய வாண்மையில் வெற்றியானது ஆசிரியர்களின் நியமனம், அவர்களுக்கான பயிற்சிமுறைமை, ஆசிரியர்களுக்கு கிடைக்கும் சமூக அந்தஸ்து, பாடசாலை நிலைமை, பெற்றோரினதும் நலன் விரும்பிகளினதும் ஆசிரியர் கல்வி தொடர்பான மனப்பாங்கு ஆகியவற்றில் தங்கியுள்ளது. அத்துடன் ஆசிரியர்கள் தொழிலைச் செய்வதற்கான அறிவுடன் கூடிய திறனும் அவர்களின் நடத்தைப் பண்புகளும், தொழில் தொடர்பான எதிர்பார்ப்பும், ஊக்குவிப்புக்களும் ஆசிரிய வாண்மைக்கு பங்களிப்புச் செய்கின்றன. இவற்றை ஆசிரியர்கள் உரியவாறு கொண்டிருக்கும் போதே மாணவர்களிடம் எதிர்பார்க்கப்படும் திறன்களை விருத்தி செய்யமுடியும்.

கடந்த காலங்களில் பாடசாலைக்கு வெளியே வறுமை, சண்டைகள், போதைவஸ்துத் தொடர்பான விடயங்கள் சமூகத்தில் இடம்பெற்றன. ஆனால் இவ் விடயங்களை சமூகத்தின் ஏனைய நிறுவனங்களால் பரிபாலிக்க முடியாத போது அவையும் ஆசிரியர்களால் கையாள வேண்டியுள்ளது. ஆசிரியர்கள் பழமைக்கும், புதுமைக்கும், எண்ணத்துக்கும், மனப்பாங்குக்கும், இடையிலான சமத்துவத்தைப் பேண வேண்டி உள்ளனர்.

காலத்துக்கு காலம் ஆசிரியர்களின் பங்கும், பணியும் வேறுபட்டு வருவதை அவதானிக்கின்றோம். ஆசிரியர் பணியென்பது காலத்தின் தேவைக்கு ஏற்ப மாற்றம் அடைந்து செல்வதாகும். இதனால் ஆசிரியப்பணியின் வரைவிலக்கணமும் மீளமைக்கப்படுதல் தவிர்க்க முடியாததாகின்றது. எனவே ஆசிரியர் வாண்மை தொடர்பான புதிய கருத்துக்கள் உள்வாங்கப்பட்டு மாணவர்களின் தேவையை நிறைவு செய்யும் பொருட்டு ஆசிரிய வாண்மை மாற்றியமைக்கப்படல் வேண்டும்.

மாற்றத்துக்குள்ளாகும் சமூகத்தின் தேவையை நிறைவு செய்வதற்கு கல்வி மறு சீரமைப்புக்கள் நடைமுறைப்படுத்தப்படுகின்றன. அவ்வாறான புதிய செயற்பாடுகளில் உயரிய பயனைப் பெறுவதற்கு புதிய அறிவு, புதிய திறன்கள், நவீன தொழில் வாண்மை உத்திகளை ஆசிரியர்கள் உள்வாங்க வேண்டியவர்களாக உள்ளனர். புதிய கல்வி மறு சீரமைப்பில் கலைத்திட்டம், பாடசாலை மறுசீரமைப்போடு ஆசிரியர்களின் தொழில் வாண்மை தொடர்பான நடவடிக்கைகளும் ஒன்றிணைக்கப்பட்டுள்ளன. கல்வி மறுசீரமைப்பைப் பயனுள்ள வகையில் சமூகத்தில் பிரதிபலிக்க வேண்டுமாயின் ஆசிரிய வாண்மை விருத்தி இன்றியமையாததொன்றாகும்.

**திருமதி.பிரபாகரன் பிறேமலதா**
ஆசிரியர்.



பாடசாலை விளையாட்டு மைதானத்திற்கு காணி வழங்கிய திருமதி மகேஸ்வரி விசுவலிங்கம் அவர்கள் கலந்து சிறப்பித்த விளையாட்டு நிகழ்வின் போது...



பாடசாலை பழைய மாணவர்களான திரு.திருமதி வசந்தகுமார் அவர்களின் நிதிப்பங்களிப்புடன் திருமதி தியாகராசா குடும்பத்தினால் நிழற்பிரதி இயந்திரம் அன்பளிப்பு செய்யப்பட்ட போது...

# கிராமத்தில் அமைந்துள்ள பொது அமைப்புக்கள்



நாரந்தனை வடக்கு பாரதி சனசமூக நிலையம்



நாரந்தனை வடக்கு பொதுநோக்கு மண்டபம்



# கிராமின் வங்கி

கிராம மக்களை உயர்ந்ததொரு வாழ்க்கை தரத்திற்கு கொண்டு செல்லும் நோக்கத்துடன் பங்களாதேஷில் பேராசிரியர் மொஹமட் யூனுஸினால் ஆரம்பிக்கப்பட்ட வறியவர்களின் வங்கியே கிராமின் வங்கியாகும். கைநிறைய பணப்புழக்கத்தைக் கொண்டுள்ள பணக்காரர்களுடனல்லாது வறிய மக்களுடனேயே கொடுக்கல் வாங்கலில் ஈடுபடும் இவ் வங்கியின் வாடிக்கையாளர்களில் பெரும்பான்மையினர் பெண்களாவார்கள்.

1974 ஆம் ஆண்டு பங்களாதேஷில் ஏற்பட்ட கடும் பஞ்சம் காரணமாக ஏறத்தாழ 15 இலட்சம் மக்கள் இறந்தனர். அவர்களது வயிற்றுப்பசிக்கு உணவு கிடைக்காமையினாலேயே அவர்கள் இறந்தார்கள். அவர்களிடையே தொழிலொன்றில் ஈடுபடும் ஆற்றலும் எதிர்பார்ப்பும் குறைவின்றி இருந்த போதும் அதற்குத் தேவையான அடிப்படை மூலதனம் அவர்களிடம் இருக்கவில்லை.

பங்களாதேஷின் குடும்ப அமைப்பினுள் பெண்களுக்கு விசேடமானதொரு இடம் கிடைக்கின்றது. ஒரு சில வறிய குடும்பங்களில் ஆண் சம்பாதிக்கின்ற பணத்தில் பெருமளவு மதுவுக்கும் சூதுக்கும் விரயமாவதோடு குடும்பப்பராமரிப்புக்கு சிறு தொகையே அர்ப்பணிக்கப்பட்டது. ஆயினும் பெண் சம்பாதிக்கின்ற சிறு தொகையில் குடும்ப அமைப்புக்குக் கிடைத்த பங்களிப்பு அதனை விட அதிகமாயிருந்தது. இந் நிலையை நன்றாக அவதானித்த பேராசிரியர் மொஹமட் யூனூஸ் கிராமியப் பெண்களுக்கு பணம் சம்பாதிப்பதற்கானதொரு வழியை உருவாக்கிக் கொடுப்பதன் ஊடாக அவர்களது குடும்பங்களை வறுமையிலிருந்து மீட்டெடுக்கலாம் என சிந்தித்தார்.

1976 ஆம் ஆண்டு பங்களாதேஷில் உள்ள கொப்ரா எனப்படுகின்ற வறிய கிராமத்தில் சுற்றுலாவை மேற்கொண்டிருந்த யூனூஸ் சிறியதொரு கடன் தொகையின் மூலம் மேற்படி வறிய கிராமிய மக்களிடையே பாரியதொரு மாற்றத்தை ஏற்படுத்தலாம் எனப் புரிந்து கொண்டார். இதற்கிணங்க மூங்கில் மரக்கட்டைகளால் தளபாடங்களை தயாரித்த வறிய பெண்கள் 42 பேருக்கு யூனூஸ் தனது முதலாவது கடன் தொகையை வழங்கினார். இதற்கு அவர் தனது சொந்தப் பணம் 400 டகாக்களே பயன்படுத்தினார். இதிலிருந்து கிராமின் வங்கியின் செயற்பாடு ஆரம்பமாகியது.

வெற்றிகரமான ஒருவர்த்தக வங்கி எப்போதும் அதிக வருமானத்தைப் பெறும் என்பதோடு தமது பங்குடைமையாளருக்கு அதிக பங்குலாபத்தையும் செலுத்தும். ஆனால் கிராமீன் வங்கி முறையின் முக்கியமான குறிக்கோள் மக்களின் வாழ்க்கைத்தரத்தை உணர்த்துவதேயன்றி இலாபம் பெறுவதல்ல. கடன்பட்டோர்களது கவலைக்கிடமான வாழ்க்கை. எவ்வளவு தூரத்திற்கு அந்தக் கஷ்ட நிலையிலிருந்து மீட்டெடுக்கப்பட்டுள்ளது என்பதைக் கவனத்திற் கொண்டே கிராமீன் வங்கியின் வெற்றிகரத்தன்மை அளவிடப்படுகின்றது.

கிராமீன் வங்கியில் கடன் பெற்று சுயதொழில் ஒன்றினை ஆரம்பிக்கும் வறிய பெண் நாளாந்தம் நாம் சம்பாதிக்கின்ற பணத்தில் ஒருபகுதியை தனது நுகர்வின் பொருட்டு வைத்துக் கொண்டு எஞ்சிய சிறு தொகையை வங்கிக்கு மீளச் செலுத்தமுடியும். இவ்வாறு நாளாந்தம் வங்கிக்கு அந்த கடன் தொகையை மீளச் செலுத்துவதற்கு இயலுமாயிருப்பதோடு அவளது வாழ்கைக்கும் கௌரவமானதொரு நிலை ஏற்படும்.

கிராமீன் வங்கி முறை சட்ட ஆவணங்கள் அற்றதாகும். இது நம்பிக்கையின் அடிப்படையில் அமைந்ததொரு வங்கியாகும். இவ் வங்கியிலிருந்து கடன் வழங்கப்படுகின்ற போது எந்தவொரு கடன் பிணைச்சான்றிதழும் கோரப்படுவதில்லை. கடன் பெறும் வாடிக்கையாளர் அக்கடனை மீளச் செலுத்தும் ஆற்றல் உடையவர் என்ற நம்பிக்கையிலேயே கடன் வழங்கப்படுகின்றது.

நாளுக்கு நாள் முன்னேற்றமடைந்து வரும். இவ் வங்கியுடன் தற்போது தொடர்பு கொண்டுள்ள குடும்ப அலகுகளின் எண்ணிக்கை இரண்டு மில்லியனையும் தாண்டியுள்ளது. 1983 ஆம் ஆண்டில் பாராளுமன்றச் சட்டமொன்றின் மூலம் கிராமீன் வங்கி சுயாதீனமானதொரு வங்கியாக ஆக்கப்பட்டது.

மேற்படி வங்கி 2003 - 2007 ஆம் ஆண்டு. காலப் பகுதியினுள் அடைந்துள்ள வளர்ச்சி குறிப்பிடத்தக்கதாகும். 2003 ஆம் ஆண்டில் 2468 கிராமீன் வங்கிக் கிளைகள் இருந்ததோடு 24703 பேர் ஊழியர்களாக இருந்தனர். வங்கியின் மூலம் பகிர்ந்தளிக்கப்பட்ட மொத்தக்கடன் தொகை டகா 347.75 பில்லியனாகும். இதில் டகா 313.11 பில்லியன் வங்கிக்கு மீளச் செலுத்தப்பட்டது.

தற்போது கிராமீன் குடும்பத்துக்குரிய மேலும் பல நிறுவணங்கள் உள்ளன இதில் கிராமீன் நிதியம், கிராமீன் தொடர்பூட்டல், கிராமீன் ரெலிகோம், கிராமீன் கல்வி, கிராமீன்

கடற்தொழில்,கிராமீன் தொழில் முயற்சி அபிவிருத்தி, கிராமீன் தொலைபேசி, கிராமீன் மென் பொருட்கள், கிராமீன் இணையம், ஆகிய தொழில் முயற்சிகள் முக்கியமானவையாகும்.

1994 இல் பங்களாதேஷின் சுதந்திரதினப் பரிசும், 2006 இல் நோபல் பரிசும் வங்கிக்கு கிடைத்தது. மொசமத் தஸ்லீமா பெகம் என்னும் பங்களாதேஷ பெண்மணி ஒருவர் 1992 இல் கிராமீன் வங்கியிலிருந்து டகா 800 கடன் தொகையைப் பெற்று ஒரு பெண் ஆட்டைக் கொள்வனவு செய்தார். பிற்பட்ட காலத்தில் அவர் மிகவும் வெற்றிகரமானதொரு தொழில் முயற்சியாளராக மாறினார். இவர் இப்போது கிராமீன் வங்கியின் பணிப்பாளர் சபையின் ஒரு அங்கத்தவராவார். கிராமீன் வங்கிக்கு கிடைத்த நோபல் பரிசை ஒஸ்லோ நகர மண்டபத்தில் நடைபெற்ற பரிசளிப்பு விழாவில் வங்கியை பிரதிநிதித்துவப்படுத்தி இவரே பெற்றுக் கொண்டார்.

தற்போது கிராமீன் மாதிரி உலகம் பூராவும் பரவியுள்ளது. வறிய பெண்களை குழுக்களாக திரட்டி அவர்களுக்கு ஒற்றுமையின் அடிப்படையில் கடன் வழங்கல் கிராமீன் முறையின் மாதிரியாகும். இன்று இந்த ஒற்றுமைக் கடன் வழங்கள் நுண்பாகக் கடன் திட்டங்களின் அடிப்படைக் கொள்கையாக கருதப்படுகின்றது. இவ்வடிப்படையில் கட்டியெழுப்பப்பட்ட கிராமீன் வங்கி முறை உலகம் பூராகவும் சிறப்பாக போற்றப்படுகின்றது. ஆதலால் இதற்கு காரணமாய் அமைந்த மொஹமட் யூனூஸ் மற்றும் கிராமீன் வங்கி முறை எதிர்காலத்திலும் உலக வாழ்வறிய மக்களது பாராட்டுக்கு உள்ளாவது நிச்சயமாகும்.

**செல்வி பவிதா திருப்புகழூர்சிங்கம்**
ஆசிரியர்
யா/நாரந்தனை கணேச வித்தியாலயம்



# நேர முகாமைத்துவம்

நேரம் மணியானது. காலம் பொன்னானது. நேரத்தையும் காலத்தையும் வீணாக்கியவன் முடத்துக்குச் சமனாவான். அதனை விட நேரமும் கூடி வரவேண்டும். காலமும் கனிந்துவர வேண்டும் என்று எண்ணிக் கொண்டு வானத்தைப் பார்த்துக் கொண்டிருப்பவன் இறந்தே பிறந்தவனுக்குச் சமனாவான். இவனை விட மிகப் பெரிய அடி முட்டாள் யாரும் இருக்க முடியாது.

நாம் எந்த ஒருவிடயத்தை எடுத்துக் கொண்டாலும் பருவத்தில் பயிர் செய்ய பழகிக் கொள்ள வேண்டும். ஒரு மனிதனுக்கு ஒவ்வொரு வயதிலும் ஒவ்வொரு தேவை உள்ளது. தேவைகளும் எதிர்பார்ப்புக்களும் எப்படியோ சங்கிலித்தொடராய் நம்மை வந்து அண்டிக்கொண்டே இருக்கும். எது எப்படி என்றாலும் நாம் பரிபூரணமாகத் திட்டமிட்டு முன் கூட்டியே எதனையும் செய்ய பழகிக் கொள்ள வேண்டும்.

எந்தக் காரியமாக இருந்தாள் என்ன? நேர முகாமைத்துவம் முக்கியம். வாழ்க்கையில் திட்டமிடல் மிக அவசியம். மாணவப் பருவமாகவிருந்தால் என்ன, தொழில் புரிபவராக இருந்தால் என்ன, திருமண வயதை எட்டியவராக இருந்தாள் என்ன, குடும்பஸ்தனாக இருந்தாள் என்ன, இருபதோ நாற்பதோ அறுபதோ என்ன வயதாக இருந்தாளும் நேரகாலத்தை வரையறுத்து அந்தந்த நேரத்துக்குரிய வேலை செய்யும் அறிவை பயன்படுத்திக் கொள்ள வேண்டும். நமக்கு நாமே திட்டமிட்ட வழிகாட்டலைச் சமயோசிதமாக உருவாக்கிக் கொள்ள வேண்டும்.

மனித ஆயுட்காலம் வரையறைக்கப்பட்டது. இது ஒரு குறுகிய காலப் பயணம். வாழ்க்கை விடை இல்லாதவினா அல்ல முற்றுப் புள்ளி எப்போது வேண்டுமானாலும் வரலாம்.நமது நேரத்தையும் காலத்தையும் ஒரு வினாடி என்றாலும் பயனற்ற நிலைக்குமாற்றி விடாமல் பார்த்துக் கொள்ளவேண்டும். முதுமைக்கு பின் ஓய்வு

அவசியம் என்பதை உணர்ந்து அதற்கு முன்னர் நம்மை நாமே நன்றாக தயார்படுத்தப் பழகிக் கொள்ள வேண்டும்.

நாம் வாழ்க்கையில் செய்யும் சிறு சிறு தாமதம் மிகப்பெரிய நஷ்டத்தில் முடிந்து விடக்கூடும். சிறிய சிறிய தாமதங்களின் தொகுப்பே நமது வயதையும் காலத்தையும் வீணடித்துவிடும். நன்றே செய் அதுவும் இன்றே செய் என்பதனை உணர்ந்து செயற்பட வேண்டும். பரீட்சை முடிந்த ஓய்வில் வீணாக அரட்டை அடித்துக் கொண்டிருக்கும் மாணவ.மாணவிகளின் ஓய்வு காலத்தை திட்டமிட்டு உபயோகபடுத்த நாம் ஊக்கப்படுத்த வேண்டும். பெரும்பாலான மாணவ, மாணவிகள் ஓய்வு காலத்தை வீணான பொழுது போக்குகளுக்கு முக்கியத்துவம் கொடுத்து அழிக்கின்றனர்.

உதாரணமாக கம்பியூட்டர், இன்டர்நெட் போன்றவற்றில் முழு மூச்சாக மயங்கிக் கிடக்கின்றனர். உபயோகமான விடயங்களாகவிருந்தாலும் பேஸ்வுக், ஈமெயில் போன்றவற்றில் அதிகம் ஆர்வம் செலுத்துகின்றனர். ஈமெயிலில் வரும் தகவல்கள், விடயங்களுக்குப் பதில் அனுப்புவதிலேயே நேரத்தையும் காலத்தையும் கரைத்து விடுகின்றனர். இவை மட்டுமல்லாது கையடக்கத் தொலைபேசி, பாட்டு, எஸ்.எம்.எஸ் இவற்றுக்கு என்று நேர ஒதுக்கீடு வேறு. இன்னும் சிலரோ தூங்குவது, உண்ணுவது, தொலைக்காட்சி திரைப்படம் என்று காலத்தின் பெறுமதியை மறந்து விடுகின்றனர். கம்பியூட்டர், இன்டர்நெட், பேஸ்புக், தொலைக்காட்சி, திரைப்படம் இவைகள் எல்லாம் இந்த மாணவ மணிகளுக்கு அறிவார்ந்த சித்தாந்தங்களையா எடுத்துக் கூறப்போகின்றன? கலாச்சார சீரளிவுக்குத்தான் இவை துணைபோகின்றன. மேலும் வீட்டிலிருக்கும் பெரும்பாலான இல்லத்தரசிகளில் கூட அதிகளவு தொலைக்காட்சித் தொடர்கள், ஊர்வம்பு, அரட்டை என்று பொழுதை இழப்பவர்களும் உண்டு. இவர்கள்

பொன்னான நேரத்தை மண்ணாக்காமல் பிள்ளைகளுக்கும் குடும்ப உறுப்பினர்களுக்கும் பல விடயங்களில் வழிகாட்டியாகத் திகழ வேண்டும். கால நேரத்தின் அருமையை இவர்கள் மற்றவர்களுக்கு உணர்த்தும் விதமாக நடந்துகொள்ள வேண்டும்.

ஆகவே வயது, காலம், செல்வம், ஓய்வு, ஆரோக்கியம் இவைகள் சென்றால் திரும்பிவராது. இளமை மறையும் முன்னர் வயதையும், காலம் கரையும் முன்னர் நேரத்தையும் வறுமை வரும்முன் செல்வத்தையும் நோய் வரும் முன் ஆரோக்கியத்தையும் பயன்படுத்திக் கொள்ள வேண்டும். இவைகள் ஆரோக்கியத்தையும் பயன்படுத்திக் கொள்ள வேண்டும். இவைகள் இறைவனின் அருட்கொடைகள். அதிசய மிக்க மனிதப் படைப்பாகிய நாம் நம்மை நாமே சரியான வழியில் தெரிவு செய்து கொள்ள வேண்டும்.

**விஜிதரன் விஜயலட்சுமி**
தொண்டர் ஆசிரியர்
(பழைய மாணவி)



# அவையத்தில் முந்தியிருக்கச் செய்த அன்னை

யா/நாரந்தனை கணேச வித்தியாலயத்தின் 100 ஆவது ஆண்டு நிறைவை முன்னிட்டு வெளியிடப்படும் "கணேசானந்தம்" மலர் வெளியீடும் கௌரவிப்பு விழாவும் நடைபெறுவதையிட்டு மிகவும் பெருமையடைகின்றேன்.

1916ஆம் ஆண்டு ஆரம்பிக்கப்பட்டு 2016இல் 100 வருடங்களை நிறைவு செய்து பல ஆசிரியர்கள், அதிபர்கள், மருத்துவர்கள், பொறியிலாளர்கள், கணக்காளர்கள் இன்னும் பல உத்தியோகத்தர்களை வளர்த்தெடுத்த இப்பாடசாலையை என்றுமே மறக்க முடியாது.

எமது ஆரம்பக் கல்வியை 1994ஆம் ஆண்டு இடம்பெயர்ந்து கொத்தணிப்பாடசாலையாக யாழ்ப்பாணம் சென்.ஜோன்ஸ் அக்கடமியில் இப்பாடசாலை இணைந்து இயங்கும்போது கல்வியைத் தொடர்ந்தேன். பின் 1996ஆம் ஆண்டு யா/நாரந்தனை றோமன் கத்தோலிக்க பாடசாலையுடன் இணைந்து செயற்பட்ட காலத்தில் கல்வி பயின்று மீண்டும் சொந்த இடத்தில் இயங்க வேண்டும் என்ற எம் ஊர் மக்களின் விருப்பில் 1997ஆம் ஆண்டு அதிபர் த.குமரேசநாதன் அவர்களுடன் வந்த போது எமது பாடசாலை கட்டடம் பெரும் புறா எச்சங்களும் மாட்டுச் சாணங்களாகவும் இருந்ததைக் காணமுடிந்தது.

அதனை எமது குடும்பமும் எம் ஊர் மக்களும் சேர்ந்து துப்புரவு செய்து மீண்டும் 1997இல் மூன்றாம் தவணையில் சொந்தக் கட்டடத்தில் இயங்க ஆரம்பித்தது என்பது பெரும் மகிழ்ச்சிக்குரிய விடயமாகும். பின்னர் தற்காலிக இடமாற்றத்தில் சென்ற பாடசாலை அதிபரான மதிப்புக்குரிய சா.தியாகலிங்கம் சேர் அவர்கள் 1998 இல் மீண்டும் பொறுப்பேற்றுக் கொண்டார். அவர் அதிபராக மட்டுமல்லாது நாடக ஆசிரியராக இருந்து எமக்குப் பல நாடகங்களையும் கற்றுத் தந்த ஆசான் என்றுமே

மறக்கமுடியாது. அதேபோல் ச.பிறேமவல்லி ஆசிரியை எமக்கு தமிழ் பாடம் கற்பித்தார். எப்போதும் அவருடைய கற்பித்தலில் தமிழை அறுத்து உறுத்து சொல்லித்தருவார். மீரா ரீச்சர் (க.றஞ்சிதகுமாரி) சிறுவயதில் அருமையான பாடல்களை பாடி எங்களை மகிழ்விப்பார். அதேபோல் பிரபாகரன் ஆசிரியர் (தற்போதைய தேசிய கல்வியியல் கல்லூரி விரிவுரையாளர்) ஆங்கிலப் பாடத்தை கற்பித்திருந்தார்.

தரம் -6 இல் பத்மா ரீச்சர் சுற்றாடல் கல்வியை மிகவும் சிறப்பாகச் சொல்லித் தந்தார். அதேபோல் சிவனேசன் ஆசிரியர் எங்களுக்கு மேலதிக வகுப்புக்களை சனி, ஞாயிறு, இரவு பகலாக கற்பித்ததை என்றும் மறக்க முடியாது. கந்தரூபன் ஆசிரியர் கணிதபாடத்தை இலகுவாக விளக்கக்கூடிய முறையிலே கற்பித்து (O/L) B தர சித்தி பெற வழிகாட்டினார்.

தொடர்ந்து ராஜமுகுந்தன் ஆசிரியர் விஞ்ஞான பாடத்தில் க.பொ.த.சாதாரண தரத்தில் தீவக வலயத்தில் முன்னோடியாக விளக்கக்கூடிய வகையில் கற்பித்தவர். றூபினி ஆசிரியர் தரம் 1-11 வரை எல்லாப் பாடங்களையும் எமக்கு கற்பித்தவர் வலன்ரீனா ஆசிரியர் சமூகக் கல்வி பாடத்தை இலகுவாக விளக்கப்படுத்தி சந்திரவட்டக்கல் என்றும் சிற்பத்தை அவருடைய வழிகாட்டலில் செய்து போட்டிகளில் பங்குபற்றி வெற்றிகிடைத்தது.

தர்சலா ஆசிரியர் சங்கீதபாடத்தையும் ஆசிரியர் பற்றாக்குறையால் எல்லாப்பாடங்களையும் கற்பித்தவர். ரவிச்சந்திரன் ஆசிரியர் மற்றும் வத்சலன் ஆசிரியர் பல்கலைக்கழகம் செல்லுமுன்னர் தரம் 7 இல் விஞ்ஞான பாடத்தை படிப்பிப்பதில் ஆர்வம் ஊட்டியவர். மற்றும் சங்கீதா ஆசிரியை, சுபதா ஆசிரியை, பத்மினி ஆசிரியை போன்ற ஆசிரியர்கள் பாடசாலையின் கல்வி நடவடிக்கையில் ஈடுபட்டவர்கள். அமரர் சதீஸ் ஆசிரியர், தனேந்திரன் ஆசிரியர், சுமதி ஆசிரியர் என பல ஆசிரியர்களின் கீழ் கல்வி பயின்று கா.பொ.த. சா.த 1-10 வரையான மாணவர்கள் வலய ரீதியில் முதல் இடத்தையும் மாவட்ட ரீதியில் மூன்றாம் இடத்தையும் பெற்று இப்பாடசாலைக்கு பெருமை சேர்த்தமை குறிப்பிடத்தக்கது. எமது பாடசாலை இணைபாட விதான செயற்பாடுகளான விளையாட்டுக்கள், நாடகங்கள், ஆக்கங்கள், திருக்குறள் போட்டிகள் என்பனவற்றிலும் பங்குபற்றியிருந்தமை குறிப்பிடத்தக்கது. இப்பாடசாலை இன்றும் மேன்மேலும் வளர தான்தோன்றி அம்மனை வேண்டி நிற்கின்றேன்.

**கோ. கருணாகரன்**
வாழ்வின் எழுச்சி அபிவிருத்தி உத்தியோகத்தர்,
பிரதேச செயலகம்,
ஊர்காவற்றுறை.



# The first surveyor of the island division

My paternal grandfather is from Naranthanai. This village is in the Kayts, pannai road. It was planned and built by a reputed man Mr. Naganathan. He laid the foundation for Narnthanai Ganesha vidyasalai, My grandfather's school.

He had relatives in vaddukoddai. so as a boy, he attended Jaffna college and shone brightly in his class. He was so good that he was selected for surveyor- training by the government. He completed his course and was appointed by the public works departmwnt to build the kayts. pannai road. He completed its success fully. That is the Road, route number 777 for buses; we take to go to our ancestral home.

He went to Malaya and worked as a surveyor. He helped many of his relatives to find employment there. One nephew came back and donated to build a stone- walled primary school. His name is Thampoo Thillainathar. Whose sister's husband built it. Her husband happened to be the first cousin of S.J.V.Chelvanayagam. the founder of federal Party.

My grandfather studied there up to grade 7. As there were no higher classes, he gave up his school education.

We are proud of Mr.Naganathan. He was honoured by Jaffna College in a note dated. The Jaffna College miscellany, I tell of the thrice Noble deeds of my villager, who crossed the oceans and earned Fame.

**By.V.Abinajan**
Old Student



## காலத்தின் சுவடுகள்

பலதும் படித்து பட்டம் பெற்றாலும்

பாலனாக படித்த பள்ளி மறந்திடுவேனா?

நாடு விட்டு நாடு சென்றாலும்.

நாம் நாடிச் சென்று பயின்ற பள்ளி மறந்து விடாது.

பென்ஸ் கார் தனில் பறந்து சென்றாலும்.

என் கணேசாவை மறக்க மாட்டேன்.

உலகரங்கில் உயர்ந்து நின்றாலும்

என் ஊர்தந்த பிச்சையை மறக்க மாட்டேன்.

கணினி உலகில் கடல்கள் கடந்து வந்தாலும்

காலம் எல்லாம் கணேசாவின் ஞாபகமே.

ஆங்கில காற்றை சுவாசித்தாலும்

நான் யாசிப்பது நாரந்தனை கணேசாவையே.

**செல்வியின் செல்வன்**
பழைய மாணவன்

## அன்பு அம்மா

அம்மா என்னும் சொல்
மூன்றெழுத்து அமுதம்
அதைச் சுவைத்துப் பார்
தேனாய் இனிக்கும்.
தன் பிள்ளையைப் பத்து
மாதம் சுமந்து பெற்று
பாரினிலே ஏணிபோல்
உயரச்செய்பவள் அன்னை.
அப்பிள்ளைக்குத் தன் குருதியைப்
பாலாகச் சொரிந்து பாதுகாப்பவள் அம்மா
கண்ணை இமை காப்பது போல்
அப்பிள்ளை பிறந்தது முதல் இறப்புவரைக் காப்பவள் அம்மா
இன்றைய சமுதாயத்தில் இவர்கள்
முதியோர் இல்லங்களிலும் தெருக்களிலும் திரிகின்றனர்
இவர்கள் வயிற்றில் இருந்து வெளிவந்த
பிள்ளைகள் மனம்தான் கல்லா?
அம்மாவே தெய்வம்
வீட்டினிலே தெய்வமிருக்க
ஆலயத்துக்குச் செல்ல

வேண்டுமென்பது முக்கியமா?

சில மனிதனுக்கு அம்மா என்னும்

தெய்வத்தோடு வாழ வரம் கிடையாது

பலர் அப்பாக்கியம் கிடைத்தும்

சரிவரப் பயன்படுத்துகின்றனரல்ல

அம்மா அம்மா என்

அன்பு அம்மா

உன் அன்பிற்காய்

மறுபிறவியிலும் காத்திருப்பேன்.

அறிவைத்தருபவள் அம்மா

அன்பைப் பொழிபவள் அம்மா

அறுசுவை ஊட்டுபவள் அம்மா

அன்பான அம்மாவே மீண்டும் உன் வரவுக்காய்....

(அம்மா! அம்மா! அம்மா!)

**பரமசிவம் மயூரி**
(பழைய மாணவி)



## பொது அறிவு

1. எமது நாட்டின் கௌரவப் பிரஜையான விஞ்ஞான எழுத்தாளர் - ஆதர்.ஸி.கிளாக்.
2. நோபல் பரிசைத் தோற்றுவித்தவர் - அல்பிரைட் நோபல்
3. உலகின் பெரிய நீர்வீழ்ச்சி-ஏஞ்சல்.
4. இலங்கையின் இரண்டாவது மிருககாட்சிச்சாலை உள்ள இடம் - பின்னவல
5. குரங்குகள் அதிகம் காணப்படும் நாடு - பிரேசில்
6. மனித உடலில் மொத்த எலும்புகள் -206
7. முலையூட்டி இனத்தைச் சேர்ந்த பறவை - வௌவால்
8. எலிகளைப்பிடித்து உண்ணும் பறவை - ஆந்தை
9. வெடி பொருட்களை கண்டு பிடிக்க உதவும் பிராணி - நாய்
10. உணவை மெல்லாது விழுங்கும் பிராணிகள் - தவளை,பாம்பு
11. நாவினால் நீரை நக்கி குடிக்கும் பிராணிகள் - பூனை,நாய்
12. முலையூட்டி இனத்தைச் சேர்ந்த மீன் - திமிங்கலம்

**லூ.பிரணவி.**

தரம் - 3-



# இதுபோதும் அம்மா எனக்கு

நான் பிறந்த உடன்
நல்லநாள் பார்த்து
தங்கத் தொட்டியில் போட்டு
தாலாட்ட நேரமில்லாமல் என்னை
தனியே தவிக்கவிடவில்லை என் அன்னை.

தன் இடுப்பில் எந்நேரமும்
தன்னை சுமந்து ஊரையே பலமுறை
சுற்றிக் காட்டும் என்
தாயின் அரவணைப்பின் முன்னாள்
சொகுசு கார் சுற்றுலா வீணாக தெரிந்தது எனக்கு.

அவள் ரத்தத்தை பாலாக்கி
உடல் வியர்வை அனைத்தையும்
உழைப்பாக்கி உயிரை எனக்களித்த
என்தாக்குஷ
என்ன செய்வேன் இறைவா?

எடுக்கும் எல்லாப் பிறவியிலும்
அவளை நான் சுமந்து
அவள்பட்ட துன்பத்தை நானும்
செய்வேன் இறைவா?

**சு. சங்கவி**
தரம் -03



# மது தொட்டால் துன்பங்கள்

மது தொட்டால் வாழ்வினிலே கேடு - நீ
மது அரக்கன் தனைக்கண்டால் ஓடு!
எது பிழையோ சரியென்றே சொல்லும் - இந்த
இழவு மது உனை விரைவிற் கொல்லும்.
மதிக்கின்ற உறவுகளும் வெறுக்கும் - ஈற்றில்
மண்கூட உனைவேறாய் ஒதுக்கும்
துதிக்கின்ற மனைவியவள் முறைப்பாள் - வாழ்வில்
துணை செய்யும் பிள்ளைகளும் உதைப்பார்
மங்கிவிடும் உந்தனது மதிப்பு - உனை
மற்றவர்கள் காணுகையில் சிரிப்பு!
தங்கமென்னை தனமெல்லாம் கரையும் - வாழ்க்கை
தவிடுபொடி, துயர்வந்தே நிறையும்.
பெரியவர்கள் உனைதிரும்பிப் பாரார் - நல்ல
பெண் குலத்தார் உன்கதையில் சேரார்.
பிரியமுடன் அழைத்தாலும் வரார் - சென்றால்
பிரச்சினை தான் என்றுரைப்பர் ஊரார்.

**உ.ஜெனுஷன்**
தரம் - 3



## அர்த்தமுள்ள வாழ்க்கைகள்

- விழுமியங்களை அடிப்படையாகக் கொண்ட வாழ்க்கை சகல செல்வங்களையும் என் காலடிக்கு கொண்டுவரும்.
- சந்தர்ப்ப சூழ்நிலைகள் வரும் போது நற்குணம் ஒன்றுக்கு முன்னுரிமை கொடுத்து எதிரிடையான குணத்தைக் கைவிடும் பட்சத்தில், அந்த நற்குணம் என் விழுமியம் ஆகுகின்றது.
- நல்லெண்ணங்கள் விழுமியங்களைப் பலப் படுத்துகின்றன.
- விழுமியங்கள் நிறைந்த வாழ்க்கை கௌரவமானது.
- விழுமியங்கள் வாழ்க்கைக்கு அர்த்தம் கற்பித்து சுய மரியாதை தருகின்றன.

| | | |
|---|---|---|
| தூய்மை | நற்குணங்களின் | தாய் |
| அன்பு | நற்குணங்களின் | ராணி |
| அமைதி | நற்குணங்களின் | ராஜா |
| சகிப்புத்தன்மை | நற்குணங்களின் | அரியாசனம் |
| நம்பிக்கை | நற்குணங்களின் | மகுடம் |
| உண்மை | நற்குணங்களின் | அடித்தளம் |
| பொறுமை | நற்குணங்களின் | கோட்டை |
| மனமுதிர்ச்சி | நற்குணங்களின் | காவற்காரன் |
| மனோதிடம் | நற்குணங்களின் | பாலம் |

| | | |
|---|---|---|
| திடசங்கற்பம் | நற்குணங்களின் | திறவுகோல் |
| துணிவு | நற்குணங்களின் | இதயம் |
| நேர்மை | நற்குணங்களின் | தோழன் |
| இனிமை | நற்குணங்களின் | சுவை |
| பணிவு | நற்குணங்களின் | நறுமணம் |
| எளிமை | நற்குணங்களின் | அழகு |
| மகிழ்ச்சி | நற்குணங்களின் | சாட்சி |
| திருப்தி | நற்குணங்களின் | அத்தாட்சி |
| மரியாதை | நற்குணங்களின் | வெளிப்பாடு |
| சுதந்திரம் | நற்குணங்களின் | இரகசியம் |
| பொறுப்புணர்ச்சி | நற்குணங்களின் | பாதை |
| ஒத்துழைப்பு | நற்குணங்களின் | களம் |
| ஒற்றுமை | நற்குணங்களின் | மகிமை |

**யோ.யோதிகா.**

தரம் - 06



# மகிழ்ச்சி தரும் நட்பு

நண்பர்கள் மீண்டும் பிறப்பதில்லை

உண்மை நட்புகள் என்றும் அழிவதில்லை....!

மகிழ்ச்சிதரும் நண்பர்கள்

நான் ஒரு பொழுதும் மறப்பதில்லை..!

நட்பே..!

உன் நினைவுகள் வரும் பொழுதெல்லாம்.!

ஒரு நட்சத்திரத்தைப் படைக்கச் சொன்னேன் வானில்..

அன்பின் அழகே இன்றெனும் வானத்தை நிமிர்ந்துபார்.!

உன்னால் மலர்ந்த நினைவுகளை

முடிந்தால் இன்று எண்ணிப்பார்...என்னை

கற்பனையை நேசி கவிதை பிறக்கும்.!

நல்ல நட்பை.!

உண்மையாய் நேசி

மகிழ்ச்சி பிறக்கும்....!

**சி.விதுஷா**

தரம் - 06



# நான் விரும்பும் தமிழ்ப் புலவர் பாரதியார்

"இருபதாம் நூற்றாண்டின் இணையற்ற கவிஞர்" என்பதாக போற்றப்படுகின்றார் பாரதியார். இவர் தென் இந்தியாவின் நெல்லை மாவட்டத்தில் அமைந்துள்ள எட்டயபுரத்திலே கி.பி 1882 ஆம் ஆண்டு மார்கழி மாதம் 11 ஆம் திகதி பிறந்தார். அவரது தந்தையார் பெயர் சின்னசாமி ஐயர். அன்னையின் பெயர் இலட்சுமி அம்பாள். இவர் பிறந்த போது இவரது பெற்றோர் இவருக்கு சுப்பிரமணியன் எனப் பெயரிட்டனர். செல்லமாக சுப்பையா எனறு அழைப்பார்கள்.

சுப்பிரமணியன் ஐந்து வயதாயிருக்கும் போது அவரது தாயார் மரணமடைந்தார். எனவே தந்தையார் மறு மணம் செய்து கொண்டார். இவர்களது குல மரபுப்படி சுப்பரமணியனுக்கு1889 ஆம் ஆண்டில் பூநூல் தரிப்பிக்கப்பட்டது.

கவிபுனையும் இயல்பு இவருக்கு இளமையிலேயே இருந்தது. இவர் 11 வயதாக இருக்கும் போது இவரது கவித்திறனை வியந்த எட்டயபுரத்து மன்னன் சமஸ்தானப் புலவர்களின் சபையிலே இவரைப்பாராட்டி "பாரதி" என்னும் பட்டம் சூட்டி இவரைக் கௌரவித்தார்.

பாரதியார் நெல்லை இந்துக் கல்லூரியிலே ஒன்பதாம் வகுப்புவரை கல்விகற்றார். கல்வி பயிலும் காலத்திலேயே தனது பதினைந்தாவது வயதில் ஏழு வயதுடைய செல்லம்பாள்என்னும் பெண்ணைத் திருமணம் செய்து கொண்டார். அதன் பின் பாரதியார் தனது அத்தை குப்பம்பாளின் ஆதரவில் காசி இந்துக் கல்லூரியில் கல்வி பயின்றால். மெட்றிக்குலேசன் பரீட்சையில் சித்தியடைந்து அலகபாத் பல்கலைக்கழகப் பிரவேசப் பரீட்சையிலும் முதன்மைச் சித்தியடைந்தார். வடமொழி, ஹிந்தி, ஆகிய மொழிகளையும் கற்றார்.

1902 ஆம் ஆண்டு எட்டயபுர மன்னனிடம் அரசசபைக் கவிஞராய்ப் பதவி ஏற்றார். இரு ஆண்டுகளின் பின் அதைவிட்டு மதுரை சேதுபதி கல்லூரியில் ஆசிரியராகப் பணியேற்றார். அதே வேளை "சுதேச மித்திரன" பத்திரிக்கையின் உதவி ஆசிரியராகவும் பணிபுரிந்து வந்தார். 1905 ஆம் ஆண்டில் அரசியலில் ஈடுபட தொடங்கினார். சென்னையில் "இந்தியா" என்ற தமிழ் பத்திரிக்கையையும், "பால பாரதம்" என்ற ஆங்கிலப் பத்திரிக்கையையும் பொறுப்பேற்று நடாத்தினார். கேலிச் சித்தரங்கள், வீரச்சுவை செறிந்த பாடல்கள் கட்டுரைகள் மூலமாக "இந்தியா" பத்திரிக்கையில் அரசியல் பிரசாரம் செய்தார்.

பகவத்கீதையைத் தமிழில் மொழி பெயர்த்தார். கண்ணன் பாட்டு, குயில்பாட்டு, பாஞ்சாலி சபதம் ஆகிய கவிதை நூல்களை வெளியிட்டார். சுதேச கீதங்கள் பலவற்றை எழுதினார். ஆங்கில ஆட்சியின் அடிமைதனம் அறுத்தெறியப்பட வேண்டும், பெண்ணிமை விடுதலை பெறவேண்டும், தமழன் தலை நிமிர்ந்து நிக்கவேண்டும், சகலரும் தேசியபற்றுடன் வாழவேண்டும் என்ற உணர்வுகளையெல்லாம் எழுதிக்குவித்தார். மூடநம்பிக்கையை எதிர்த்து இவர் எழுதிய ஏராளமான கவிதைகள் காலத்தால் அழியாதவை. நாடு விடுதலை பெற வேண்டும் என்ற ஒரே நோக்கு இவரது பேச்சிலும் மூச்சிலும் காணப்பட்டது.

1921 ஆம் ஆண்டு ஜீலை மாதம் திருவல்லிக்கேணி கோயில் யானை இவரைத் தாக்கியதால் நோயுற்று செப்டெம்பர் 11 ம் திகதி மரணமடைந்தார். இவரது பெருமையை நன்கறிந்த பா வேந்தர் பாரதிதாசன் இவரை "பைந்தமிழ்த் நேர்பாகன், செந்தமிழ் தேனீ, சிந்துக்குத் தந்தை, கவிமுரசு, கவிக்குயில், கதையின் புதையல், கற்பனை ஊற்று, திறம்பாட வந்த மறவன், புது மறம் பாடவந்த அறிஞ" என்றெல்லாம் வர்ணித்துள்ளார். அவரது பூதவுடள் அழிந்த போதிலும் அன்னாரது புகழுடம்பு இன்றும் நின்று நிலைக்கிறது.

**சு.சஞ்சீவன்.**
தரம் - 10



## நான் விரும்பும் நூல்

"நூல் பல் கல்" என்றார் ஔவையார். நூல்களைப் படிப்பது நல்ல பழக்கம். நல்ல நூல்களே நமது நல்ல நண்பர்கள். நான் படிக்கும் நூல்கள் பலவுள்ளன. அவற்றுள் நிறப்பாக கூறினால் திருக்குறளே நான் பெரிதும் விரும்பும் நூலாகும். இறைவன் மூன்றடிகளால் அளந்த உலகை வள்ளுவர் ஒன்றே முக்கால் அடிகளுக்குள் அளந்து விட்ட உண்மையின, சிறப்பினைத் திருக்குறளைப்படித்த பின்னர் நான் உணர்ந்து கொண்டேன்.

குறல் என்பது குறுகிய வெண்பாவால் ஆனது இரு அடிகளைக் கொண்டது. திரு என்னும் அடைமொழியைப் பெற்றுத் திருக்குறல் என அழைக்கப்படுகின்றது. இதில் இல்லாத எப்பொருளும் இல்லை. எல்லா பொருள்களையும் எக்காலத்துக்கும் உகந்த உண்மைகளையும் கொண்டதாக ஆக்கப் பெற்றுள்ளது திருக்குறல் ஒரு வாழ்வியல் வழிகாட்டியாகத் திகழ்கின்றது. மனித வாழ்வுக்கு பயன்படும் அத்தனை விடயங்களையும் அழகாக உரைத்திடும் நூல் இது. இதன் காரணமாகவே யான் திருக்குறளைப் பெரிதும் விரும்புகின்றேன்.

திருக்குறல் ஒப்பற்ற நூல். கருத்துக் கருவூலம் தனிமனிதனுக்கும், சமுகத்திக்கும், நாட்டிக்கும், உலகுக்கும் நலம் பயக்கும் கருத்துக்களைத் தன்னகத்தே கொண்டு விளங்குகிறது. அறம்,பொருள்,இன்பம் எனும் மூன்று பிரிவுகளைக் கொண்டுள்ளது. மக்கள் வாழ்வாங்கு வாழும் நெறிகளை மனுகுலத்தற்கு எடுத்துக் கூறுகிறது. நூற்று முப்பத்து மூன்று அதிகாரங்களைக் கொண்ட இந்நூலில் ஆயிரத்து முந்நூற்று முப்பது குறட்பாக்கள் உள்ளன. இக் குறட்பாக்கள் ஒவ்வொன்றும் ஒப்பற்ற கருத்துக்களைக் உரைக்கின்றன. பொறுமை, அன்பு, அறன், இல்வாழ்க்கை, நாடு, சிற்றினம் சேராமை போன்றவற்றைப் புலப்படுத்தும் குறள்கள் நமது வாழ்வியலுக்கு ஏற்ற படிகளாக அமைந்துள்ளது.

திருக்குறளை இயற்றியவர் திருவள்ளுவர் அவர் சிறந்த தமிழ் புலவர் வள்ளுவர் போல் பூமி தனில் யாங்கானுமே பிறந்ததில்லை என்றார் பாரதியார் "அணுவைத் துளைத்து ஏழ்கடலைப் புகட்டிக் குறுகத் தறிக்க குறள் என்றார் ஔவையார்.

"நாலிரண்டும் சொல்லுக்குறுதி" என்பர் ஆன்றோர் நாலடியாரும் திருக்குறளும் ஒப்பற்ற நூல்கள் என்பதை சுட்டிக் காட்டுகிறது. சங்க இலக்கியங்களுல் பதினொன்றின் கீழ் கணக்கைச் சேர்ந்தது திருக்குறள். நூல்கள் எல்லாவற்றுள்ளும் தலையாய நூலாகக் கருதப்படுகிறது.

உலகம் இன்று சாதி, மதம், இனம், மொழி என்பவற்றுள் ஏதேனும் ஒன்றில் சிக்கித் தடுமாறுகிறது. உலகனைத்தையும் ஒன்றுபடுத்தும் ஆற்றல் எதுவென்றறியாது திகைக்கிறது. இந்நிலையில் உலகனைத்திற்கும் பொதுவாக எம்மதமும், இனமும், சாராது எழுந்த சட்ட நூல் போல் திருக்குறள் திகழ்கிறது. எக்காலத்திற்கும் எவ்வினத்திற்கும் ஏற்ற கருத்துக் குவியலாக உலகப் பொதுமறையாகத் திருக்குறள் விளங்குகிறது. நூற்றுக் கணக்கான மொழிகளில் பயிலப்படும் சிறப்புடையது. புலவர்கள் பலரும் திருக்குறளைத் தத்தம் கவிதைகளில் எடுத்தாண்டுள்ளனர்.

உலகப் பொதுநூலாகப் போற்றப்படும் திருக்குறள் சிறந்த வாழ்வியல் தத்துவங்களையும் எடுத்து கூறுகிறது. வாழ்க்கையில் ஏற்படும் பிரச்சனைகளுக்குத் தீர்வு கூறும் நூலாகவும் திகழ்கிறது இல்லறம் ஒன்றே நல்லறம் என்றுரைக்கிறது. அந்த இல்லறத்தை இல்லான் பேணிக்காக்க வேண்டும். அவையத்து முந்திருக்கும் முந்திருக்கும். மக்களைப்பெற்றிருக்க வேண்டும். விருந்தோம்பலில் சிறந்திட வேண்டும். என்றெல்லாம் வாழ்வியல் கருத்துக்களை எடுத்துக் கூறுகிறது.

சுருங்கக்கூறின் மனிதனை மனிதனாக, மனிதத் தன்மையுடையவனாக வாழ்வதற்கு வழிகாட்டும் நூல் திருக்குறள் எனலாம். அன்னைத் தமிழில் அமைந்த இந்நூர் தமிழர்கள் அனைவருக்குமே பெருமை சேர்ப்பதாக உள்ளது. இதனாலேயே அமரகவி பாரதியாரும் வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து வான் புகழ் கொண்ட தமிழ் நாடு... எனப் போற்றிப் பாடினார்.

வள்ளுவர் தந்த திருக்குறள் தமிழர்களுக்கோ, தமிழ்நாட்டிற்கு மட்டுமோ உரியதல்ல அது உலகனைத்திற்கும் உரியது. அத்தகு சிறப்பு மிக்க நூலை நாம் போற்றி படிக்க வேண்டும். படித்தபடி ஒழுக வேண்டும். உலகமெல்லாம் ஒரு குடும்பம் ஆக வேண்டும் அதற்கு வழிகாட்டும் வன்மை திருக்குறளுக்கு உண்டெனில் அது மிகையாகாது. தமிழர்களாகிய நாம் தமிழ் புலவன் வள்ளுவன் தந்த திருக்குறளைத் தினமும் போற்றிக் கற்றிட முன்வருவோமாக.

**உ.ஜெனுயா**

தரம் - 8



# மனித உரிமைகள்

முதல் மற்றும் இரண்டாம் உலகப்போர்கள் நடைபெற்ற போது வளர்ந்த மற்றும் பலம் மிகுந்த நாடுகளின் ஆதிக்க நெறிக்கு சாமானிய மக்கள் பலியானது சமூக சிந்தனையாளர்களிடம் பெரும் பாதிப்பை ஏற்படுத்தியது. இதைத் தொடர்ந்து உருவான ஐக்கிய நாடுகள் அவை உலகில் உள்ள அனைத்து மனித குலத்தினரின் உரிமைகளை பாதுகாப்பதற்கான ஆவணம் ஒன்றை உருவாக்கியது.

1948 ஆம் ஆண்டு டிசம்பர் 10 ஆம் திகதி பிரான்ஸ் நாட்டின் பாரிஸ் நகரில் நடைபெற்ற ஐக்கிய நாடுகள் அவையின் பொதுச்சபையில் "அனைத்துலக மனித உரிமைப் பிரகடனம்" அறிமுகம் செய்யப்பட்டது. உடனடியாக 58 உலக நாடுகள் இந்த பிரகடனத்தை அங்கீகாரம் செய்தன. இந்த மனித உரிமைப் பிரகடனத்தில் 30 உறுப்புகள் உள்ளன.

அவற்றுள் சில ...

1. சமத்துவ உரிமை சகல மனிதர்களும் சுதந்திரமாகப் பிறக்கின்றனர். அவர்கள் பெருமானத்திலும், உரிமைகளிலும் சமமானவர்கள், அவர்கள் நியாயத்தையும், மனச்சாட்சியையும் இயற்பண்பாகப் பெற்றவர்கள்.
2. ஏற்றத்தாழ்வுகள் காட்டப்படாமல் இருப்பதற்கான உரிமை இனம், நிறம், பால், மொழி, மதம், அரசியல், மற்றும் தேசிய அல்லது சமூகம், பிறப்பு அல்லது பிற அந்தஸ்துகளால் வேறுபடுத்த முடியாமல் உலகில் உள்ள மனிதர்கள் எல்லோரும் சம உரிமை பெற்றவர்கள்.
3. சுதந்திரமாகவும், பாதுகாப்பாகவும் வாழும் உரிமை அனைவருக்கும் உண்டு.
4. யாரையும் அடிமையாக நடத்த எவருக்கும் உரிமை இல்லை.
5. சித்திரவதைக்கும், மனிதத்தன்மையற்ற தாக்குதல்களுக்கும் உள்ளாகாமல் இருப்பதற்கான சுதந்திரம்.
6. சட்டத்தின் முன் அனைவருக்கும் சம உரிமை.

7. பாரபட்சம் எதுவுமின்றி சட்டத்தின் பாதுகாப்புக்கு எல்லோரும் உரித்தானவர்கள்.
8. ஒருவரின் உரிமை மதிக்கப்படாத போது சட்ட உதவியை நாடும் உரிமை .
9. சட்டத்துக்குப் புறம்பாக ஒருவரை காவலில் வைக்கவோ, நாடு கடத்தவோ யாருக்கும் உரிமை இல்லை.
10. நீதியான பகிரங்கமான விசாரணைக்கான உரிமை.
11. ஆபத்துக்காலத்தில் பிறநாட்டில் தஞ்சம் கேட்க உரிமை உண்டு.
12. எந்த ஆணும்,பெண்ணும் விரும்பினால் திருமணம் செய்து கொண்டு பாதுகாப்புடன் குடும்பம் நடத்துவதற்கான உரிமை. சமுதாயத்தாலும் அரசாலும் இது பாதுகாக்கப்பட வேண்டும்.
13. சிந்தனைச் சுதந்திரம், மனச்சாட்சி சுதந்திரம், மதச் சுதந்திரம் ஒவ்வொருவருக்கும் உரிமை உண்டு.
14. சமூக பாதுகாப்பிற்கும், தன் திறன்களை வளர்த்துக் கொள்ளவும் உரிமை.
15. ஒவ்வொருவரும் பிறரது உரிமையை மதிக்க வேண்டும்.
16. இந்தப் பிரகடனத்தில் குறிப்பிட்டுள்ள எந்த ஒரு உரிமையையும் ஒருவர் பெறுவதற்கு தடையாக இருக்க உரிமை கிடையாது.
17. குற்றஞ்சாட்டப்படுவோர், குற்றம் நிரூபிக்கப்படும் வரை நிரபராதி என நிரூபிக்க வாய்ப்பு வழங்கும் உரிமை.
18. தனிப்பட்ட அல்லது அந்தரங்க விஷயத்தால் எவரும் தலையிடாமல் இருப்பதற்கான சுதந்திரம்.
19. ஒவ்வொரு நாட்டிற்குள்ளும் சுதந்திரமாக நடமாடுவதற்கும், நாட்டை விட்டு வெளியேறவும், திரும்பி வரவும் உரிமை.
20. ஒவ்வொரு பிரஜைக்கும் தங்கள் விருப்பத்திற்கு ஏற்ற தேசிய இனத்தை மாற்றிக்கொள்ள உரிமை.
21. சொத்து வைத்துக் கொள்ளும் உரிமை தனியாகவும், கூட்டாகவும் ஆதனத்தைச் சொந்தமாக வைத்திருப்பதற்கும் ஒவ்வொருவருக்கும் உரிமையுண்டு.
22. ஒவ்வொருவருக்கும் உணவு, உடை, இருப்பிடம், மருத்துவக் காப்பு, அவசியமான சமூக சேவைகள் உட்பட தமது குடும்பத்தினாலும், உடல் நலத்துக்கும் நல் வாழ்வுக்கும் போதுமான வாழ்க்கைத்தரத்துக்கு உரிமையுடையவர்

ஐக்கிய நாடுகள் அவையின் மனித உரிமை ஆணையத்தின் இணைத்யதளத்தில் இருந்த பிரகடனத்தில் தமிழ் மொழிபெயர்ப்பும் உள்ளது. எனினும் மனிதஉரிமைகள் குறித்து அனைத்து மக்களிடமும் போதிய விழிப்புணர்வு ஏற்படவில்லை என்பதே உண்மை. மனித உரிமைகள் குறித்து மக்களிடம் ஏற்படும் விழிப்புணர்வே மனித உரிமைகளை பாதுகாக்கவும், மேலும் விரிவுபடுத்தி வளர்த்தெடுக்கவும் உதவும். இதற்கான பணியில் கல்வியறிவு பெற்ற அனைவரும் பங்கேற்க வேண்டும்.

**ஹ.வைஷ்ணவி**
தரம்-09



## C.W.W.கன்னங்கரா

நமக்கு கல்விக்கண்ணைத் திறக்க வந்த மாமனிதரே C.W.W.கன்னங்கரா அவர்கள். இளமையில் அனுபவித்த துன்பங்களையும், துயரங்களையும் தனக்குப்பின்வரும் சமூகம் அனுபவிக்கக் கூடாது என்று யார் நினைத்துச் செயற்படுகின்றார்களோ அவர்கள் தான் உயர்நத மனிதர்கள் இதனைச் செயலில் காட்டிய தியாகிதான் C.W.W.கன்னங்கரா அவர்கள்.

கொடியது எது என ஔவைப் பாட்டி கேட்டார். அவரே பதிலையும் கூறினார். கொடியது கொடியது வறுமை கொடியது அதினிலும் கொடியது இளமையில் வறுமை என விளக்கினார். வறுமையில் வாடிவதங்கியவர்களுக்கு தான் வறுமையின் உண்மை நிலை புரியும். அதனை நன்கு புரிந்தவர் தான் C.W.W.கன்னங்கரா ஆவார்.

அந்நியர் ஆடசியின் கீழ் பல இன்னல்களை நமது மக்கள் அனுபவித்தனர். அவர்களது கெடுபிடிக்குள் சிக்கித் தவித்தார்கள். காலி மாவட்டத்தில் பிறந்த கன்னங்கரா அவர்கள் புலமைப்பரிசில் பெற்றுக் கற்றார். வறுமையான குடும்பத்தில் பிறந்த C.W.W.கன்னங்கரா அவர்கள் கல்வி கற்பதில் அதிக ஆர்வமும் திறமையும் மிக்கவர்.

காலி ரிச்மணட கல்லூரியில் புலமைப்பரிசில் மூலம் உயர் கல்விகற்கும் காலத்தில் அவர் பல பிரச்சனைகளுக்கு முகம் கொடுக்க நேர்ந்தது. பிரித்தானிய ஏகாதிபத்தியத்தின் கீழ் தான் அனுபவிக்கும் துன்பங்களைத் தனது சந்ததியினர் அனுபவிக்கவிடக் கூடாது என்ற உயர் இலட்சியத்துடன் செயற்பட்டார். தனது கல்வியை முடித்துக் கொண்டு அவர் 1910 இல் காலி ரிச்மண்ட் கல்லூரியில் ஆசிரியராக நியமனம் பெற்றார். பின்னர் மொறட்டுவ கல்லூரியில் ஆசிரியராக பணிபுரிந்தார்.

1915 ஆம் ஆண்டு இனக்கலவரத்தில் சிறையில் அடைக்கப்பட்ட

தலைவர்களை மீட்கும் போராட்டத்தில் பங்கு கொண்ட கன்னங்கரா அவர்கள் அரசியலில் ஈடுபாடு காட்டினார்.

1923 இல் சட்டவாக்கக் கழகத்திற்கு உறுப்பினராக தெரிவாகினார். 1930 இல் தேசிய காங்கிரஸ் தலைவரானார். அவர் தொடர்ந்து சிங்கள மகா சபையின் உப தலைவராகவும் பணியாற்றினார்.

1931 இல் காலித் தொகுதியில் போட்டியிட்டார். அவரை எதிர்த்துப் போட்டியிட்ட அபேட்சகவை விட இரு மடங்கு வாக்குகள் கூடுதலாகப் பெற்று அரசு கழக உறுப்பினராக தெரிவானார். அரசுக் கழகத்தில் கல்வி அமைச்சர் பதவியை வகித்து இலங்கைக்கு அளப்பெரும் சேவையாற்றினார்.

1946 ஆம் ஆண்டு ஒக்டோபர் 6ம் திகதி கன்னங்கரா அவர்களால் கொண்டுவரப்பட்ட இலவசக்கல்விச் சட்டம் நடைமுறைப்படுத்தப் பட்டதால் இலங்கையின் கல்வித்துறை புதிய பரிணாமம் கண்டது. திறமையிருந்தும் பணமில்லாத காரணத்தினால் ஒதுக்கப்பட்டிருந்த கிராமப்புற மாணவர்களும் கல்வி கற்கும் வாய்ப்பு அதனால் கிட்டியது.

**சி.பிரதீபன்.**
தரம்-10



# இயற்கை சூழலும் ஒழுக்க நெறியும்

மனிதன் சூழலுடன் தொடர்புற்ற காலம் முதல் சூழல் பற்றி பல்வேறு விதங்களில் ஆராய்ந்து கொண்டான். புராதன மனிதன் தான் வாழும் சூழலைப்பற்றி நன்கு அறிந்திருந்தான். இதன் மூலம் நாம் அறிந்து கொள்ள வேண்டியது என்னவெனில் சூழல் அழிந்து விடாதபடி தமது தேவைகளை நிறைவேற்றிக் கொள்ள அவர்கள் பழக்கப்பட்டிருந்தனர். சூழல் ஒழுக்கநெறி என்பது யாதெனில் நிலம், நீர், வாயு, உயிர்க்கோளம் முதலானவற்றை சிறந்த முறையில் முகாமைத்துவப்படுத்தி நிலைத்திருக்கச் செய்யும் பழக்கவழக்கங்களாகும். நல்ல கருத்துள்ள ஒழுக்கநெறியாவது தனிப்பட்டவர்களின் நடத்தையுடன் இணைந்துள்ளது. இதற்கேற்ப ஒழுக்க நெறியின்படி ஒழுகுதல் என்பது அதனோடு இணைந்துள்ள நம்பிக்கை, மனப்பாங்கு, மதிப்பீடு ஆகிய விரிவுகளிடையே நெருங்கிய தொடர்புகள் இருப்பதென்பதைக் காட்டுகின்றது.

பல வகையான சமயங்கள் அவை மூலம் எழுந்த தத்துவங்கள், நம்பிக்கைகள் மூலம் சூழல் முக்கியத்துவம் பற்றி உணரமுடிகிறது. மதங்கள் நமக்களித்த தத்துவங்கள் பல உள்ளன. பௌத்த சமயமானது இயற்கையுடன் தொடர்புடைய பொருட்கள் படைக்கப்பட்டவையல்ல எனக்கூறுகிறது. அதுமட்டு மல்லாது தேனீ பூவிலிருந்து பாதிப்பின்றி தேனை எடுப்பது போல தானியங்களைச் சேகரிக்கும் மனிதனுடைய செல்வம் அதிகரிக்கும். மரத்தை அழிப்பதை விட மரத்தை வளர்ப்பது மூலமாக இயற்கை பாதுகாக்கப்படும். மரநிழலில் நிம்மதியாகப் படுத்துறங்குபவன் நித்திரை விட்டெழுந்து அதன் கிளையை வெட்டி எறிவானாயின் அவன் செய்நன்றி இல்லாதவன் எனப் புத்ததர்மம் போதிக்கின்றது.

படைப்புக் கொள்கையை ஏற்றுக்கொண்டுள்ள வேத, உபநிட தங்கள் சார் இந்து சமயத்திலும் இயற்கைக்கு தெய்வத்தன்மை

கொடுக்கப்பட்டுள்ளது. இயற்கையின் அழகு மட்டுமன்றி அச்சம் தருவன அனைத்தும் கூட இறைவனின் படைப்புக்கள் என இந்துக்கள் நம்புகிறார்கள். படைப்பு வாதத்தினை ஏற்றுக் கொள்ளும் இஸ்லாம் உலகம் உட்பட சூழலில் உள்ள அனைத்தும் சர்வ வல்லமை படைத்த அல்லாவின் கட்டளைப்படியே நிகழ்கிறது எனக் கூறுகிறது. மரங்களை அழிக்க வேண்டாம், தேவையற்ற விதத்தில் பிடுங்கி எறிய வேண்டாம் என்றும் கூறுகிறது. அனைத்துச் சமயங்களும் இவ்வளவு கூறியிருப்பினும் நாம் மரத்தை இன்றும் தேவையற்ற விதத்தில் பிடுங்கி எறிகின்றோம். இதன் மூலம் பல இயற்கை அழிவுகள் ஏற்பட்டுள்ளன. பலவகையான மதங்கள் நமக்குத் தெரிவித்த இயற்கையின் சிறப்பைச் சிறந்த முறையில் பயன்படுத்தி இயற்கையைப் பாதுகாப்போம்.

**லூ.கஜிகரன்**
தரம்-10



# கல்வியின் அவசியம்

செல்வத்துள் சிறந்த செல்வம் கல்விச் செல்வமாகும். கல்வி நம் வாழ்வில் முக்கிய பங்கு ஆற்றுகிறது. கல்விகற்று வாழ்க்கையில் வலம் வர வேண்டும். அறிவுக் கண்களைத்திறந்து வைக்கும் சக்தி கல்வி ஒன்றுக்குத்தான் உண்டு. கல்வி என்பது கற்கவேண்டிய நூல்களை தக்காரிடத்தில் கற்று தெளிதலாகும். கல்வி ஒன்றே விலை மதிப்பற்ற செல்வம் . வள்ளுவர் கல்வியைக் "கேடு இல் விழுச்செல்வம்" என்று கூறுவார். கல்வியின் நோக்கம் நல்வாழ்வாகும். கல்வி தனிமனித நலனையும் தேவையையும் கண்டு அவற்றைச் செம்மையான முறையில் வளர்த்து அவனை நற்பிரசையாகவும் சிறந்த பணியாளனாகவும் ஆக்குகிறது.

மனிதனுக்கு கண் இன்றியமையாத ஓர் உறுப்பாகும். கல்வியும் கண்ணைப் போன்று சிறந்தது,உயர்ந்தது. கல்வி அறிவு உடையவர்களே கண்ணுடையர் அறிவுடைய ஒருவனை அரசனும் விரும்புவர். கரையில்லாத கல்வியை குறைவில்லாமல் கற்றால் உலகம் நம்மை வாழ்த்தி வணங்கும். எந்தச் சூழலிலும் ஒருவர் கற்றகல்வியானது புறமுகவும் போற்றப்படவும் கைகொடுக்கும் என்பது திண்ணம். மேலும் கல்வியில் சிறந்து விளங்கினால் பகைவரும் நட்பு கொள்ள விரும்புவார். இதனால் இந்த உலகமே நம்வசப்படும் என்றும் மொழியலாம். சான்றாக பார் புகழ் வள்ளுவர் மற்றும் அறிவியல் மேதை சர்ஜன்தடைன் போன்றோர் தாம் கற்றகல்வியின் கண் திறந்தும் இறவாப் புகழோடு வாழ்கின்றனர்

செல்வப் பொருள் சிறந்ததாயினும் பிறருக்கு கொடுக்கும் தோறும் குறைந்து கொண்டே போகும். அது அரசராலும் கள்வராலும், தீ முதலியவற்றாலும் அழிந்து ஒழியும். கல்விப் பொருளோவேனில் கொடுக்கும் தோறும் வளர்ந்து கொண்டே வரும். பிறரால் அதனை அபகரிக்கவோ, அழிக்கவோ இயலாது கல்வி வற்றாப்

பெருஞ்செல்வம். "கல்வியென்னும் பயிருக்குக் கண்ணீர் என்னும் மழை வேண்டும்" கல்வியைச் சிரமம் இன்றிக் கற்றல் இயலாது.

பத்து மாதமும் சுமந்து பாடுபட்ட அன்னை கூட தன் மக்களுள் மூத்தவனை வாவென்று அழைக்கமாட்டாள். கல்வி அறிவுள்ளவனையே அதிகம் நேசிக்கின்றாள். கல்வி கல்லாதவர்களை விலங்குக்குச் சமமாகக் கூறுகிறார்கள்.

கல்வியில் சிறந்து விளங்கினால் பல உயர்ந்த வேலைவாய்ப்புக்கள் நம்மை நாடிவரும். இதனால் மாதந்தோறும் கைநிறைய ஊதியமளிக்கும் ஒரு நல்ல வேலையில் அமரலாம். தன்குடும்ப, சமுதாய, நாடு மற்றும் உலக மேம்பாட்டிற்கும் இயன்ற ஆக்க சிந்தனைகளையும் பொருளுதவிகளையும் வள்ளல் போலும் வாரி வழங்கலாம். மேலும் இன, மொழி, சமய வளர்ச்சிக்கும் உன்னத பங்காற்ற முடியும். "வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவர் வானுறையும் தெய்வத்துள் வைக்கப்படும்" என்பதற்கு இத்தகையோரே இலக்கணமாவார்.

உலகில் எத்தனையோ உயிரினங்கள் வாழ்கின்றன இருப்பினும் சிறந்த உயிரினமாக அறிவுபெற்ற மனிதனே போற்றப்படுகிறான். மதிப்பும் மரியாதையும் கல்வியின் கண் மனிதன் பெற்ற பகுத்தறிவுக்குச் சான்றாகும்.

இந்த பகுத்தறிவின் காரணமாகவே எது நல்லது, எதுகெட்டது என மனிதனால் பகுத்தாய்ந்து செயலாற்ற முடிகிறது. ஆகவே நம் வாழ்வின் உண்மை நோக்கத்திற்கு இட்டுச்செல்லும் கல்வியை உயிர் மூச்சைப்போல் போற்றுவோம். "கண்டதைக் கற்க பண்டிதன் ஆவான்" என்பதற்கு இணங்க நல்ல புத்தகங்களை நாளும் படித்து அறியாதவற்றை அறிந்து இத்தகவல் யுகத்தில் சிறப்போம்.

**சி.மதுஷா**
தரம் - 10



# வாசிப்பு மனிதனை பூரணமாக்குகின்றது

இன்று மாணவர்களிடையே வாசிப்புப்பழக்கம் அரிதாகி வருகிறது. தொலைக்காட்சி பார்ப்பதில் அதிக நேரத்தைச் செலவிடுகின்றனர். சில மாணவர்கள் தொலைக்காடசியில் ஒலிபரப்பாகும் கிரிக்கெட் போட்டிகளையும், திரைப்படங்களையும் பார்ப்பதற்காக பாடசாலைக்கே செல்லாது நின்று விடுகின்றனர். இதனால் அவர்களது கல்வி பெரிதும் பாதிக்கப்படுகிறது. கற்க வேண்டிய நேரம் வீண்விரயமாகிறது.இதன் பேறாக அவர்களது கல்வித்தரமே குன்றுகிறது. மாணவர்கள் தமது பொழுதைப் போக்க தொலைக்காட்சியையே நம்பியுள்ளனர். அதே வேளை நல்ல நண்பர்கள் எனக் கருதப்படும் நூல்களை வாசிக்கத்தவறி விடுகின்றனர். மிக அரிதாகவே ஒரு சில நூல்களை வாசிக்கின்றனர். வாசிப்புக்குச் செலவிடும் நேரம் மிக குறைவாகவே உள்ளது.

“நூல் பலகல்” என்றார் ஔவையார். எவ்வளவு நூல் களை நாம் வாசிக்கின்றோமோ அவ்வளவுக்கு நமது அறிவு பெருகும் “கண்டதும் கற்க பண்டிதன் ஆவான்” என்பது நம் ஆன்றோர் வாக்கு. ரஸ்கின் என்கிற ஆங்கில அறிஞர் “புத்தகங்களைப் போன்ற சிறந்த கருவூலம் எதுவும் மனிதனுக்கு இருக்கமுடியாது” எனக் கூறுகிறார். வேறு செல்வங்களைக் கள்வர்கள் களவாடிச் சென்றுவிடலாம். ஆனால் புத்தகங்கள் பொதுவாகக் களவாடப்படுவதில்லை. புத்தகங்களை வாசிப்பதால் ஒருவன் பெற்ற இன்பங்களை மற்றவர்கள் தட்டிப்பறிக்க முடியாது. வாசிக்கும் பழக்கம் இல்லாதவனின் வாழ்க்கை இருண்டதாகவே இருக்கும்.

வாசிப்பின் மூலம் அறிவு விருத்தியடைகிறது. மேலதிக அறிவைப்பெற்று கொள்ள முடிகிறது. புதிய தகவல்களைப் புரிந்துகொள்ளவும், கிரகித்துக் கொள்ளவும், திறன்களை வளர்த்துக் கொள்ளவும் முடிகிறது. வாழ்வு வளம் பெற அறிவு தேவை அறிவைப்பெருக்க நூல்களை வாசித்தல் அவசியமாகும். நூல்களை வாசிக்கும் போது நல்ல நூல்களைத் தேர்ந்தெடுத்துப் படித்தல் வேண்டும். அப்போது தான் நாம் விரும்பிய மன நிறைவைப் பெறமுடியும். வாசித்தல் சிறந்த ஒரு பொழுது போக்கு.

மகிழ்வைத்தந்து அறிவைப் பெருக்க உதவுவன நூல்களேயாகும். மாணவர் இதனை மனதில் கொள்ளுதல் அவசியமாகும்.

"கண்ணுடைய ரென்பர் கற்றோர் முகத்திரண்டு
புண்ணுடையர் கல்லாதவர்"

ஊனக் கண்ணினும் ஞானக்கண்ணே அறிவுக்கண் சிறந்தது என்பதை இக்குறள் நன்கு புலப்படுத்துகிறது. கல்விப் பெருஞ்செல்வத்தை வழங்குவன நூல்களேயாகும். அவற்றை வாசிப்பது நம் கடமையாகும்.

நூல்கள் வாசிக்கும் பழக்கம் உடையவர்கள் தனிமை உணர்வை ஒரு போதும் பெறுவதில்லை. ஓய்வு கிடைக்கும் போதெல்லாம் நூல்களை அவர்கள் நாடிச்சென்று விட முடியும். வாழ்வில் சலிப்போ சோர்வோ ஏற்படுகின்ற போதெல்லாம் விரும்பிய நூல்களை படிப்பதன் மூலம் அவற்றைப் போக்கிகொள்ள முடியும். "என்னை எந்தச் சந்தர்ப்பத்திலும் கைவிடாத நண்பர்கள் புத்தகங்களே" எனக் கூறினான் ஆங்கிலக் கவிஞன். ஒருவனுக்கு புத்தகங்கள் போன்ற நண்பர்கள் கிடைப்பது அரிது. எமது நண்பர்கள் மனமாற்றமடைந்து நம்மைவிட்டு பிரிந்துவிடலாம்.

ஆனால் புத்தகங்கள் என்றுமே நம்மோடு கலந்து உரையாடக் காத்திருப்பவை நம்மை அவை கோபித்துக் கொள்வதோ, வெறுப்பதோ இல்லை. நமக்கு இன்பம் தர தயாராகக் காத்திருக்கின்றன. நமக்கு அறிவு புகட்டும் ஆசானாகப் புத்தகங்கள் இருக்கின்றன. அவற்றை நாம் நன்கு பயன்படுத்திக்கொள்ள வேண்டும். புத்தகங்கள் படிக்கும் பழக்கத்தை ஏற்படுத்திக் கொள்ள வேண்டும். ஒரு முக்கிய கடமையாக இதனைக் கொள்ளுதல் வேண்டும். "வாசிப்பு மனிதனை பூரணமாக்குகின்றது" என்றார் அறிஞர் பேக்கன். அவரது கூற்றுக்கமைய நாம் ஓய்வு நேரத்தை புத்தகங்கள் வாசிப்பதில் செலவிடுதல் வேண்டும். நாம் இளமை முதல் நூல்களை வாசிக்கும் பழக்கத்தை ஏற்படுத்திக் கொண்டால் நாளடைவில் அறிவும் பண்பும் ஆற்றலும் மிக்கோராக வாழ்வதற்கு அது வழிகாட்டும். வையத்து வாழ்வாங்கு வாழும் நெறியினை நாம் அறிந்திட முடியும்.

நூல்கள் பலவகை உண்டு. வாழ்க்கை வரலாறு, தத்துவம், சமயம், அறிவியல் சார்ந்த நூல்கள், புனைக்கதை இலக்கியங்கள் என பலவுள்ளன நமது விருப்பத்திற்கு ஏற்றபடி நூல்களைத் தேர்ந்தெடுத்துப் படித்திட நாம் பழகுதல் வேண்டும். வெறும் பொழுது போக்கிற்குரிய நூல்களை மட்டும் வாசிக்காது வாழ்க்கைக்கு பயன்தரும் நூல்களை வாசிக்க முற்பட வேண்டும். அன்னப்பறவையானது நீரை விலக்கி பாலைமட்டும் பருகுதல் போன்று மாணவர்கள் தேவையற்ற நூல்களை விலக்கி விட்டுத் தேவையான, பொருத்தமான, பயன் தரும் நூல்களை மட்டுமே வாசித்தல் வேண்டும்.

"தொட்டனைத்தூறும் மணற்கேணி மாந்தர்க்குக்
கற்றணைத் தூறும் அறிவு"

என்கிறார் வள்ளுவர். நூல்களை வாசிக்க வாசிக்கப் பற்பல அனுபவங்களை வென்றிட முடியும். வாழ்க்கை முழுதும் மகிழ்ச்சியாக இருக்க கூடிய வழியை நூல்கள் காட்டுகின்றன. அவற்றைப் படித்து அதன் வழி ஒழுகவேண்டும் நூல்களை வாசிப்பதன் மூலமே நாம் பூரண மனிதராக, மனிதத் தன்மையுடையோராக மாண்புடன் வாழமுடியும் என்பதை உளத்திற் பதித்துக் கொள்ளுதல் வேண்டும்.

**சு.சாரங்கா**

தரம் - 10

# பொது அறிவு

1. இலங்கையின் புராதன குடிகள் யாவர்? இயக்கர்,நாகர்
2. எந்த மன்னனின் காலத்தில் பௌத்த மதம் இலங்கைக்கு வந்தது? தேவநம்பியதீசன்
3. இன்சுலின் சரிவரச் சுரக்காமையால் ஏற்படும் வியாதி எது? நீரிழிவு
4. கபில வஸ்துவில் அவதரித்த சமய பெரியார் யார்? கௌதம புத்தர்
5. டிஸ்னி உலகம் எங்கு உள்ளது? அமெரிக்காவின் புளோரிடாவில்
6. எவரெஸ்டில் ஏறிய முதலாவது பாாவையற்றவர் யார்? எரிக்வெய் கண்மேயர்
7. கோள்களில் மிகப்பெரியது எது? வியாழன்
8. நோபல் பரிசுக்கு நிகலான ஆசியப் பரிசு எது? மக்சாசேபரிசு
9. அறுபது வயதைக் குறிக்கும் விழா எது?மணிவிழா
10. பூமியின் நிலப்பரப்பில் மிகத் தாழ்வான பகுதி எது? சாக்கடல்

**பரமசிவம் மயூரி**
(பழையமாணவி)

## சாதனையாளர்கள்

| ஆண்டு | மாணவர் பெயர் | மட்டம் | போட்டி விபரம் | நிலை |
|---|---|---|---|---|
| 2008 | அ.யனுஜா | வலயம் | ஆக்கத்திறன் வெளிப்பாடு. | 3 |
| | பு.விதுசா | வலயம் | பாவோதல். | 1 |
| 2009 | நே.தேனுசா | வலயம் | கவிதை ஆக்கம் | 1 |
| | ப.இராகவன் | கோட்டம் | கதை கூறல் | 2 |
| | ஜீ.தயன் | கோட்டம் | பேச்சு | 3 |
| | ஜி.ஹறிசன் | கோட்டம் | பாவோதல் | 2 |
| | குழு | வலயம் | தமிழறிவு வினா விடை | 3 |
| | குழு | வலயம் | நாட்டார் பாடல் | 2 |
| 2010 | பு.கௌரிதரன் | வலயம் | இலக்கணப்போட்டி | |
| | குழு | வலயம் | தமிழறிவு வினா விடை | |
| 2012 | ப.மயூரி | கோட்டம் | பேச்சு | 2 |
| | சி.மதுக்ஷா | கோட்டம் | பாவோதல் | 1 |
| | குழு | கோட்டம் | தமிழறிவு வினாவிடை | 2 |
| 2013 | சு.சானுகா | வலயம் | கட்டுரை | 2 |
| | ப.ஆதவன் | வலயம் | பாவோதல் | 3 |
| | லூ.வைஸ்ணவி | வலயம் | பாவோதல் | 3 |
| | சி.மதுஷா | கோட்டம் | பேச்சு | 2 |
| 2014 | உ.உக்ஷாந்தி | கோட்டம | தமிழறிவு வினாவிடை | 1 |
| | லூ.வைஸ்ணவி | கோட்டம் | பாவோதல் | 2 |
| 2015 | குழு | வலயம் | | 3 |
| | லூ.வைஸ்ணவி | கோட்டம் | | 1 |
| 2016 | சி.மதுக்ஷா | கோட்டம் | பாவோதல் | 2 |
| | லூ.வைஸ்ணவி | கோட்டம் | பாவோதல் | 1 |

## ஆங்கிலதினப் போட்டி

| ஆண்டு | போட்டியாளர் | மட்டம் | போட்டி விபரம் | நிலை |
|---|---|---|---|---|
| 2009 | பு.விதுசா | வலயம் | ஆங்கில உறுப்பெழுத்து | 1 |
| 2011 | லூ.வைஸ்ணவி | கோட்டம் | ஆங்கில உறுப்பெழுத்து | 2 |
| 2013 | சி.விதுக்ஷா | கோட்டம் | ஆங்கில உறுப்பெழுத்து | 1 |
| | சு.சானுகா | கோட்டம் | ஆங்கில உறுப்பெழுத்து | 1 |
| | லூ.வைஸ்ணவி | கோட்டம் | சொல்வதெழுதல் | 2 |
| 2015 | சி.விதுக்ஷா | கோட்டம் | ஆங்கில உறுப்பெழுத்து | 2 |
| | யோ.யோதிகா | கோட்டம் | ஆங்கில உறுப்பெழுத்து | 3 |
| | உ.ஜெனுஜா | கோட்டம் | ஆங்கில உறுப்பெழுத்து | 3 |
| | லூ.வைஸ்ணவி | கோட்டம் | ஆங்கில உறுப்பெழுத்து | 2 |
| | சு.சாரங்கா | கோட்டம் | ஆங்கில உறுப்பெழுத்து | 1 |
| | சி.மதுக்ஷா | கோட்டம் | ஆங்கில உறுப்பெழுத்து | 3 |
| | சு.சாரங்கா | வலயம் | ஆங்கில உறுப்பெழுத்து | 2 |
| 2016 | லூ.வைஸ்ணவி | வலயம் | ஆங்கில உறுப்பெழுத்து | 2 |

## சமூக விஞ்ஞானப் போட்டி

| ஆண்டு | மாணவர் பெயர் | மட்டம் | நிலை |
|---|---|---|---|
| 2011 | சு.சானுகா | மாகாணம் | 1 |
| 2010 | பு.கௌரிதரன் | வலயம் | 3 |
| 2012 | சி.மதுசா | வலயம் | 3 |
| 2015 | வி.வேணுசா | வலயம் | 3 |
| 2016 | லூ.வைக்ஷ்ணவி | வலயம் | 1 |

**சிறுவர் சித்திரப் போட்டி**

| ஆண்டு | மாணவர் பெயர் | மட்டம் |
|---|---|---|
| 2005 | சு.சானுகா | மாகாணம் |
| 2010 | சு.சாரங்கா | வலயம் |
| 2011 | லூ.வைஸ்ணவி | கோட்டம் |
| 2013 | ல.விக்ஷ்னு | கோட்டம் |
| 2013 | சு.சஞ்சிவன் | கோட்டம் |

**பிரதேச சபை இலக்கிய போட்டி**

| ஆண்டு | மாணவர் பெயர் | போட்டி விபரம் | நிலை |
|---|---|---|---|
| 2014 | யோ.யோதிகா | கையெழுத்துப் போட்டி | 1 |
| | வி.திலக்க்ஷன் | கையெழுத்துப் போட்டி | 3 |
| | சி.மதுசா | கவிதை | 1 |
| 2015 | யோ.யோதிகா | கையெழுத்துப் போட்டி | 2 |
| | சி.விதுக்ஷா | கையெழுத்துப் போட்டி | 3 |

**பண்ணிசைப் போட்டி**

| ஆண்டு | மாணவர் பெயர் | மட்டம் | நிலை |
|---|---|---|---|
| 2001 | உ.சாளினி | கோட்டம் | 1 |
| 2002 | உ.சாளினி | கோட்டம் | 1 |
| 2014 | சு.சானுகா | கோட்டம் | 3 |

**அனர்த்த முகாமைத்துவக் கல்வி - வினா விடைப் போட்டி**

| ஆண்டு | மாணவர் பெயர் | மட்டம் | நிலை |
|---|---|---|---|
| 2014 | சி.மதுசா | வலயம் | 1 |
| 2015 | சு.சானுகா | கோட்டம் | 1 |
| 2015 | சு.சாரங்கா | கோட்டம் | 1 |

**சமூகக்கல்வி போட்டி - 2001 கோட்டம்**

மு.குகாயினி – 5ம் இடம்

கோ.கருணாகரன் - 4ம் இடம்

உ.சாளினி – 4ம் இடம்

**ஊர்காவற்றுறை பிரதேசசபை வாசிப்பு மாதம்**

| ஆண்டு | மாணவர் பெயர் | போட்டி விபரம் | நிலை |
|---|---|---|---|
| 2012 | சு.சாரங்கா | சித்திரப் போட்டி | 2 |
| 2013 | லூ.வைஸ்ணவி | பேச்சுப் போட்டி | 1 |
| | சு.சாரங்கா | பேச்சுப் போட்டி | 3 |
| 2014 | சு.சாரங்கா | கவிதை | 2 |
| | சு.சானுகா | கட்டுரை | 1 |
| 2015 | சி.மதுசா | கவிதை | 1 |
| | லூ.கஜிகரன் | வினாவிடைப் போட்டி | 2 |
| | சு.சாரங்கா | வினாவிடைப் போட்டி | 3 |

**மெய்வல்லுநர் போட்டி**

| ஆண்டு | மாணவர் பெயர் | நிகழ்ச்சி | மட்டம் | நிலை |
|---|---|---|---|---|
| 2002 | கி.மாதவி | 200m | வலயம் | 2 |
| 2003 | S.மயூரன் | உயரம் பாய்தல் | கோட்டம் | 3 |
| | A.சஞ்சீவ் | 1500m | கோட்டம் | 3 |
| | குழு | 4x100m அஞ்சல் | கோட்டம் | 2 |

# கௌரவிக்கப்படுவோர்

**யா/நாரந்தனை கணேச வித்தியாலயம் க.பொ.த சா/த சித்தியடைந்தோர் விபரம்.**

1. கோ.பத்மினி
2. நா.சங்கீதா.
3. ரா.மேரிநமேக்கா
4. கே.கேதாரலிங்கம்
5. சி.ஶ்ரீதேவி
6. க.ஶ்ரீகாந்தி
7. சோ.அசந்தா
8. க.கிருஸ்ணவேணி.
9. த.அனுசா
10. சி.கிருவாயினி
11. மு.குகாஜினி
12. கி.தயாழினி.
13. கோ.கருணாகரன்
14. யோ.தனுசியா
15. இ.தர்சனா
16. ப.விஜயலக்சுமி
17. ப.சசிகலா
18. சி.மயூரன்
19. ப.ஶ்ரீமயூரன்
20. அ.பானுஜா
21. பு.கௌரிநாதன்
22. கே.அபர்ணா
23. நே.தேனுஷா
24. அ.சோதிகா
25. சு.சுஜீவன்
26. லி.சுமன்பிரசாத்
27. லூ.திவாகரன்
28. அ.சாணுகா

**யா/நாரந்தனை கணேச வித்தியாலயம் புலமைப்பரிசில் பரீட்சையில் சித்தியடைந்தோர் விபரம்.**

1. இளமுருகன் லக்சிகா
2. தனபாலன் கீர்த்திகன்
3. அசோகன் ஜனுஜா
4. புவனேக்ஷ்வரன் விதுஷா
5. பரமானந்தன் இராகவன்
6. புவனேஷ்வரன் ரம்யா
7. பரமானந்தன் ஆதவன்

**யா/நாரந்தனை கணேச வித்தியாலயம் பல்கலைக்கழகம் தெரிவானோர் விபரம்.**

1. உதயகுமார் சாலினி.
2. அசோகன் பாணுஜா

**தேசிய கல்வியல் கல்லூரி தெரிவானோர் விபரம்.**

1. கோபாலசிங்கம் இளங்கோவன்

## நூற்றாண்டு விழாவினை முன்னிட்டு எமது கோரிக்கைக்கு அமைவாக பழைய மாணவர்களின் விபரங்களை சமர்ப்பித்தோர் விபரம்


திரு.செ.இராசதுரை


இராமஶ்ரீதரக் குருக்கள்


திரு.சு.இராமலிங்கம்


Dr.வை.யோகேஸ்வரன்


திரு.சி.சத்தியசீலன்


திரு.சி.தனபாலன்


செல்வி மே.கிருஸ்ணபிள்ளை


திருமதி த.சிவசொரூபி


திரு.த.விதுர்ன்


திருமதி.ர.சபேசன்


திரு.சு.கார்வண்னன்


அமரர் சு.கோபாலசிங்கம்

# பழைய மாணவர் விபரம்


திருமதி. ச. பாலசுந்தரம்


திருமதி சுகனியா பாஸ்கரன் (Eng)


திரு. ச. சுரேஸ்கரன்


திரு. தி. மன்மதகாந்தன்


திரு. க. தியாகலிங்கம்


திரு. க. சிவகுமாரன்


திருமதி கு. சரோஜினி தேவி


Eng. க. சபாநாதன்


திரு. க. லிங்கநாதன்


செல்வன் த. கீர்த்திகன்


செல்வன் த. சுவர்னன்


செல்வன் த. கேசிகன்

# பழைய மாணவர் விபரம்



க.சகாதேவன்



திருமதி.தி.செல்வராஜா



திரு.கு.கருணாநிதி



திரு.தி.சுந்தரலிங்கம்



திரு.க.விஜயநாதன்



Dr.சி.ஜெயபாலன்



திருமதி.ப.சண்முகராஜா



Eng.க.சத்தியநாதன்



திரு.த.கிருபநேசன்



திரு.கே.கேதாரலிங்கம்



திரு.தி.மகேந்திரன்



திரு.சி.தயாளன்

# பழைய மாணவர் விபரம்


செல்வி கோ.சந்திரவதனி


செல்வன் வி.அட்சகன்


செல்வன் வி.அபிநயன்


திருமதி வ.அகிலன்


திருமதி ஏ.கோபாலசிங்கம்


திரு.இ.லூட் ஞானசேகரம்


திரு.தி.சூரியகாந்தன்


திரு.க.அருள்நாதன்


திரு.பா.குருபரன்


திருமதி த.ஜங்கரன்


திருமதி து.வசந்தகுமார்


செல்வி அ.யனுஜா

# பழைய மாணவர் விபரம்


திருமதி த.பானுசா


திரு.க.கேதீஸ்வரன் (Eng)


திரு.கோ.கருணாகரன்


திரு.க.குகப்பிரியன்


திரு.க.ஜெயக்குமார்


திருமதி.பி.சற்குணராஜா


திரு.கோ.இளங்கோவன்


திரு.ஈ.திருக்கேதீஸ்வரன்


திரு.கோ.சிவகாந்தன்


திருமதி கே.இந்துராணி


திரு.வே.துரைராஜா


திரு.கி.தயாளினி

## பழைய மாணவர் விபரம்

Thirugnanasampathamoorthy Thevathasan (Death)
Schooling Period:- 1963 to 1969
Job: Architect
Address:- Colombo – 06.

Thirugnanasampanthamoorthy Manmathakanthan,
Schooling period: 1977 to 1982
Job:- Teacher at C/ Vivekananda College,
Address;- 24C 3/2, Pereira Lane, Colombo – 06.

Mrs. Jamuna Athavarajah
Schooling Period: 1964 to 1970
Address: No:-46, Layards Road, Havelock town, Colombo -05.

Mrs. Sivamalar Manmathakanthan
Schooling Period: 1979 to 1984
Job: Teacher at St. Thomas' Preparatory School, Kollupitiya.
Address: 24C, 3/2 Pereira Lane, Colombo – 06.

Mrs. Pushparatnam Mahalingam
Schooling Period: 1944 to 1969
Address: 24C, 3/2 Pereira Lane, Colombo – 06.

Mrs. Shanthini Yeerapandiyan Iyer
School period: 1969 to 1973
Job: Deputy Principal at C/Kanapathy Hindu Ladies Maha Vidyalayam
Address: Colombo – 06.

Mrs. Mauragirinathan Manjuzha
Schooling Period: 1967 to 1973
Address:- No:33, Maheshwary Road, Colombo – 06.

Mrs. Somasuntharam Vadivudai
Schooling Period: 1971 to 1982
Address: No: 33, Maheshwary Road, Colombo – 06.

Mrs. Vasanthy Sathees
Schooling Period: - 1970 to 1974
Address: No: - 24, E.S Fernando Mawatha, Colombo – 06.

